# குமரமலைப் பிள்ளைத்தமிழ்

ஆசிரியர்

வீரபத்திரக் கவிராயர்

பதிப்பாசிரியர்

த.பூமிநாகநாதன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# குமரமலைப் பிள்ளைத்தமிழ்

ஆசிரியர்
வீரபத்திரக் கவிராயர்

பதிப்பாசிரியர்
த. பூமிநாகநாதன்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாவது முதன்மைச் சாலை, சி.ஐ.டி. வளாகம்,
தரமணி, சென்னை - 600 113

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Kumaramalai-p-pillai-t-tamil |
| Author | : | Veerapattira kavirayar |
| Editor | : | Mr. D. Boominaganathan<br>Research Assistant<br>Dept. of Literature and Manuscriptology<br>International Institute of Tamil Studies |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Chennai - 600 113. Ph: 22542992 |
| Publication No. | : | 496 |
| Language | : | Tamil |
| Edition | : | Reprint; (First Edition, 1909) |
| Year of Publication | : | 2004 |
| Paper Used | : | 18.6 TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | lxviii + 204 |
| No. of Copies | : | 1000 |
| Price | : | Rs. 75/- (Rupees Seventy Five only) |
| Printing | : | Powerman Printers<br>Chennai. |
| Subject | : | Minor Literature |

தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் அரிய நூல்கள் வெளியிடும் திட்டத்தின் கீழ் நிதியுதவி பெற்று இந்நூல் வெளியிடப்பெறுகிறது.

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அணிந்துரை

சீர்மிகு சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்றாகக் கருதப்படுவது பிள்ளைத் தமிழ் இலக்கியம் ஆகும். சிற்றிலக்கியங்கள் பெரும் பாலும் தெய்வங்களைக் குறித்தும் தெய்வ அடியார்களைக் குறித்தும், சிறந்த அறிஞர்களைக் குறித்தும் மற்றும் பெருமன்னர், குறுமன்னர், நிலக்கிழார் ஆகியோரைக் குறித்தும் பாடப் பெற்றுள்ளன.

சமயஞ்சார்ந்த பிள்ளைத் தமிழ் நூல்களே இப்பிள்ளைத் தமிழ் வகையில் பேரளவில் காணப்படுகின்றன. அவற்றுள்ளும் குறிப்பாகச் சைவ சமயம் சார்ந்த நூல்களே மிகுதி என்பது அறிஞர் துணிபு.

சிற்றிலக்கிய இலக்கணங்களை எடுத்துரைக்கும் நூல்களுள் வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல், பிரபந்த மரபியல் போன்ற நூல்கள் முன் நிற்கின்றன.

'குழவி மருங்கினும் கிழவதாகும்' என்ற தொல்காப்பிய நூற்பா பிள்ளைத் தமிழ் இலக்கணம் குறித்துக் கூறும் முதல் நூற்பாவாகும். காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம். வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் ஆகியவை ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்குரிய பத்துப் பருவங்கள். ஆசிரிய விருத்தப் பாவையே பெரும்பாலான பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள் பெற்றுள்ளன. ஆசிரிய விருத்தமே பிள்ளைத் த்மிழுக்குரிய யாப்பு எனச் சுவாமிநாதமும் சுட்டுகிறது.

சிவபெருமான், முருகன், விநாயகன், சக்தி, விஷ்ணு போன்ற பெருந்தெய்வங்கள் மேல் அமைந்த பிள்ளைத் தமிழ் நூல்களும் கிறித்தவம், இசுலாமியம் போன்ற சமயங்கள் சார்ந்த பிள்ளைத் தமிழ் நூல்களும் உண்டு.

தமிழிலக்கிய வரலாற்றில் பல்வேறு காலங்களில் தோன்றிய பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள் அன்றைய சமயங்களின் ஆளுமையையும், மக்கள் இறைவனிடத்துக்

கொண்டிருந்த பக்தியையும், புலவர்களின் தமிழ்மொழிப் பற்றையும், பக்தி சுவையோடு கூடிய இலக்கிய நயங்களையும் கொண்டனவாக விளங்குகின்றன என்பது குறிப்பிடத்தக்கது. இத்தகு பிள்ளைத்தமிழ் இலக்கியங்களுள் மறுபதிப்புக் காணாத நூல்களும், ஏட்டிலிருந்து புதுப்பிறப்புக் காணாத நூல்களும் இன்னும் இருக்கத்தான் செய்கின்றன.

ஈண்டு மறுபதிப்புக் காணும் குமரமலைப் பிள்ளைத் தமிழ் 1909ஆம் ஆண்டு மூலம் மட்டுமே பதிப்பிக்கப் பெற்று வெளிவந்துள்ளது. இப்போது இந்நூல் பதவுரை, பொழிப்புரை, அருஞ்சொற்பொருள், சொல்லடைவு எனப் பல உறுப்புகளைப் பெற்றுப் புதிய வடிவில் இன்று இந்நிறுவனத்தால் வெளியிடப் பெறுகிறது. இப்பணியைச் செம்மையுடன் செய்து முடித்த நிறுவன ஆராய்ச்சி உதவியாளர் திரு. த. பூமிநாகநாதன் பாராட்டுக் குரியவர். அவர் தொடர்ந்து இது போன்ற பணிகளைச் செய்ய எனது வாழ்த்துகள். இந்நூலாக்கத்திற்கு அரிய நூல் வெளியீட்டுத் திட்டத்தின் கீழ் நிதிஉதவி வழங்கிய தமிழ் வளர்ச்சி இயக்ககத் திற்கும், அதன் இயக்குநர் **முனைவர் ம. இராசேந்திரன்** அவர்களுக்கும் நன்றியை உரித்தாக்குகிறேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வி (ம) பிற்படுத்தப் பட்டோர் நலத்துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம்** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர் திருமிகு **பு.ஏ. இராமையா இ.ஆ.ப.,** அவர்களுக்கும், சிறப்புச் செயலாளர் **திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,** அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளிஅச்சுக்கோப்புச் செய்த இந்நிறுவன கணிப்பொறியாளர் திரு. ஸ். கோபிநாத்திற்கும், அழகுற அச்சிட்டுத்தந்த சென்னை பவர்மேன் அச்சகத்தார்க்கும் பாராட்டுகள்.

சென்னை
30-06-2004

**இயக்குநர்**

# பதிப்புரை

தமிழகத்தில் ஓலைச் சுவடியைப் பாதுகாப்பதோடு அவற்றை நூலாக மக்கள் மன்றத்திற்குக் கொண்டு செல்லும் நிறுவனங்களில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தனியிடம் வகுத்து வருகிறது. சுவடி மட்டும் அல்லாது தாள் சுவடி பண்டைய பதிப்புக்களுக்கான மறுபதிப்பு முதலிய பணிகளும் இங்குத் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன.

குமரமலைப் பிள்ளைத் தமிழ் என்ற இந்நூல் மறு பதிப்புக்காணும் நூலாகும். இந்நூல் மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலையில் 1909ஆம் வருடம் நா. கதி. கதிரேசன் செட்டி அவர்களால் வெளியிடப்பட்டுள்ளது. 100 பாடல்களைக் கொண்ட இந்நூல் குறிப்புரையோடு பரிசோதனை பத்திரம் என்ற பிழை திருத்த அட்டவணையோடு வெளிவந்துள்ளது. பொழிப்புரையோ, பதவுரையோ, விளக்கவுரையோ என எதுவும் அமையப்பெறாமல் மூலம் மட்டும் நூலாக வெளிவந்துள்ளது. கடுமையான நடைஅமைப்பையும் பொருட்செறிவையும் உள்ளடக்கிய இந்நூலுக்கு விளக்கமான பொழிப்புரை, பதவுரை மற்றும் அருஞ்சொற்பொருள் விளக்கம் என விரிவான நிலையில் நூலாய்வு செய்து வெளியிட்டால் நூலின் பெருமை குன்றில் இட்ட விளக்காக அமையும் என்ற நிலையில் இப்பதிப்பு மேற்சொன்ன அத்தனை உபகரணங்களைப் பெற்றுத் தெளிவான விரிந்த பதிப்பாக வெளிவருகிறது.

இந்நூல் விரைந்து வெளிவர ஊக்கப்படுத்திய நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றியை வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் சிறப்பாக அமைய எனக்கு ஆசானாக இருந்து வழிகாட்டிய மரியாதைக்குரிய தமிழாசிரியர் திரு. அருணகிரி வேல், எம்.ஏ., அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன் மற்றும் சுவடித்துறைப் பொறுப்பாளர்

முனைவர் தி. மகாலட்சுமி அவர்களுக்கும், நூல்களைத் தந்து உதவிய நிறுவன நூலகக் காப்பாளர் திருமதி பார்வதி, திரு. பெருமாள்சாமி அவர்களுக்கும், உ.வே.சாமிநாதையர் நூலகத்தைச் சார்ந்த திரு. சாயிராமன், திரு. பாஸ்கரன் அவர்களுக்கும் மற்றும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நிருவாகப் பணியாளர்கள் அனைவருக்கும் என் வணக்கத்தையும் நன்றியையும் உரித்தாக்குகிறேன்.

இந்நூலுக்குச் சிறப்புச் சேர்க்கும் வகையில் பிள்ளைத் தமிழ் குறித்த ஓர் ஆய்வுப் பார்வை பறவை நோக்கு முறையில் சேர்க்கப்பட்டுள்ளது. நூலாய்வு தனியாகச் செய்யப்பட்டுள்ளது.

இவையன்றி, பாடற் முதற்குறிப்பு அகராதி, சொல்லடைவு, துணை நூற்பட்டியல் முதலியனவும் இடம் பெற்றுள்ளன. தமிழ் ஆர்வலர்களும், பெரியோர்களும் ஆசிரியப் பெருமக்களும் அன்னப் பறவை போல் குறை மறந்து நிறை ஏற்று மகிழ்வாராக. முன்னோர் செய்த பல்வேறு நூல்களைத் தன் அணிகலனாக ஏற்று மகிழும் தமிழ் அன்னை இதனையும் ஏற்று அருள்பாலிப்பாளாக.

பதிப்பாசிரியர்
த. பூமிநாகநாதன்

# ஆய்வு முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றைப் பின்னோக்கிப் பார்த்தால், மொழியாலும், இலக்கியத்தாலும், அவை சொல்லும் அரிய கருத்துக்களாலும், நம் நெஞ்சம் நிமிரும். காலங்காலமாக இவ்விலக்கியம் தன்னகத்தே சேர்த்துக் கொண்ட கருத்து உறவுகள், அற்றை ஆன்றோர்களின் பட்டறிவுப் பதிவுகளாக விளங்கி இருப்பதைக் காணமுடியும். சங்ககாலம் என்ற உடன் சிறுகுடிச் சமூகத்தின் போராட்டங்களும் சமூகம் தழைக்க அவர்கள் கையாண்ட அணுகுமுறைகளும் நம்மை வியப்படையச் செய்யும். போர் என்ற பெயரில் பொருட்சேர்க்கையும் கொடை என்ற பெயரில் அறிவைப் போற்றுதலும் அதோடு கூடிய வறுமை ஒழிப்பு என்னும் பரந்த சிந்தையும் அரசியலாரைவிட அறிவுச் சுற்றமாக விளங்கும் பட்டறிவு நிறைந்த புலவர் பெருமக்களைப் போற்றுவதுமாக அச்சமூகம் வாழ்ந்த வாழ்க்கையை இலக்கியமாகப் பதிவு செய்து தரும் சங்க இலக்கியத்தின் சிறப்பு அன்றும் இன்றும் என்றும் போற்றுதற்குரியது.

சங்கம் மருவிய காலத்தில் சமூகத்தின் உட்கட்டினை உறுதி செய்ய நீதி இலக்கியங்கள் பல்கிப்பெருகின. சங்கம் கண்ட மேற்கணக்கிற்கு இணையாக இக்காலக்கட்டத்தில் கீழ்க்கணக்கு நூல்கள் எழுந்தன. சங்க காலத்தில் சமூக ரீதியாக ஏற்றுக் கொள்ளப்பட்ட பரத்தமை, கள்ளுண்ணல், கேளிக்கை போன்றன கடுமையாக இக்காலக் கட்டத்தில் மறுக்கப்பட்டன. ஒருவனுக்கு ஒருத்தி, புலால் மறுத்தல், கள்ளுண்ணாமை, கற்பை இருதரப் பாரும் உயர்வென மதித்தல், வாழ்க்கை நிலையாமையைக் கருத்திற் கொண்டு பேராசை அகற்றி எளிமையான வாழ்க்கையை மேற்கொள்ளுதல், கல்வி, கேள்வி ஞானம் இவற்றிற்குச் சமூகம் முக்கியத்துவம் தரவேண்டும் என வற்புறுத்தல். பொருளாதாரம் உயரத் தொழில்மீதும், தொழில் செய்வோர்மீதும் மதிப்பு வைத்தல் இப்படி இவற்றின் சாரமாகவே எண்ணற்ற சமூகச் சிந்தனைகள் முகிழ்த்தெழுந்தன.

வாழ்க்கை நிலையாமை, தவம் என்ற பெயரில் சமூகத்தை விட்டுத் தனித்து வாழ்தல்; பேரின்பம் தேடுதல் என்ற கோட்பாட்டைக் கையில் எடுத்துக்கொண்டு சொர்க்கம், நரகம்

என்ற மானுடம் அறிய முடியாத விண்ணுலக பேறுகள் அவரவர் செயற்பாட்டிற்கேற்ப வெகுமதியாக கிடைக்கப்பெறுவன என்றும் இவற்றில் சொர்க்கம் என்பது இன்பமயமானது, நரகம் துன்பமயமானது என விளக்கம் சொல்லி, இச்சொர்க்கத்தை அடைய மக்கள் முயற்சி செய்ய வேண்டும் என சமயவாதிகள் அவரவர் மதம் கூறும் தத்துவங்களுக்கு ஏற்ப மக்களுக்கு அறிவுச் சலவை செய்து வந்ததன் காரணத்தால் சமூகத்திற்கு ஏற்றமும் பொருளாதார வளர்ச்சிக்கு உறுதுணையாகவும் விளங்க வேண்டிய மனித சத்தியின் அறிவாற்றலைப் பேரின்பம் தேடுதல் என்ற பொய்மைக் கோட்பாட்டில் நம்பிக்கையூட்டி, சமூகத்தில் மத, மார்ச்சரியங்களுக்கு வித்திட்ட காலம்தான் இருண்ட காலம். இச்சமய காலம் கண்டு சொன்ன தத்துவங்களால் உழைப்புக்குச் சிறப்பான ஏற்றம் தராது யாவற்றையும் நிர்ணயம் செய்வது கடவுளே என்ற கோட்பாட்டைத் திடமாக ஏற்று, விதி வலியது என்று சொல்லிக் கொண்டு, குலம், சாதி, மதம் ஆகியவற்றைப் பேணிக் காப்பதன் மூலமே சமூகம் வளரும் என்ற புதிய நோக்கில் மக்கள் இக்கால கட்டத்தில் திசை திரும்பினர்.

வாழ்க்கையில் மனிதன் பேரின்பத்தை அடைய, இல்லறம் என்ற சிற்றின்பத்தை விடுத்து சமயம் சொல்லும் கடுமையான பயிற்சிகளை மேற்கொள்ள வேண்டும் என்ற சமணர்களின் கட்டுப்பாடுகள் சமூகச் சிந்தைனையோடு வாழ வேண்டிய மக்களைத் திசை திருப்பியது. புத்தர் உண்ணா நோன்பு, ஓய்வற்ற நெடிய தவம் வாழ்க்கையைச் செம்மைப்படுத்தும் என்ற சமணக் கருத்தைத் தானே கடைப்பிடித்துப் பின்னர் அது சமூக விழிப்புணர்ச்சிக்கு எந்த வகையிலும் பயன்படாது; உடம்பு பேணப்பட்டால்தான் உடம்பின்கண்வாழும் உயிர் நீண்ட ஆயுளைப் பெற்று வாழமுடியும். அதைத்துன்புறுத்தி செயலற்றுப் போகச் செய்வது அறிவுடைமையாகாது என்பதனைத் தானே உணர்ந்தார்.

துன்பத்திற்கு அடிப்படையான காரணம் மனித மனம் தேவைக்குமேல் தேவையை எதிர்நோக்குவதே என அறிந்தார் புத்தர். ஆகவே ஆசைதான் துன்பத்திற்கு வேர் என உணர்ந்து அந்த உண்மையை அடிப்படையாக வைத்துப் பௌத்த சமயத்தைத் தோற்றிவித்தார். முப்பிடகம் என்ற கோட்பாட்டின் படி மனித சமூகம் ஒரு கட்டுக்கோப்புக்குள் இணைய வேண்டும். மனித சமூகம் நற்சிந்தனையோடு இதற்கு ஆதரவு தரவேண்டும்; கூட்டு முயற்சியில் தங்கள் எண்ணங்களை நிறைவு செய்து கொள்ள வேண்டும் என எடுத்துக் கூறினார்.

சமய காலத்தில் தமிழகத்தில் சைவம் தமிழ் மக்களிடத்துத் தனித்த செல்வாக்கைப் பெற்றது. சிவமே அன்பு என்றது. ஆணும் பெண்ணும் சமம் என எடுத்தியம்ப உமையொரு பாகனாக இறைவனைக் குறியீடாகக் காட்டியது. சமணம் பெண்களுக்குத் தரமறுத்த மதச் சுதந்திரத்தைப் பெண்ணுக்குத் தந்தது. பௌத்தம் இக்கொள்கையில் முன்னோடியாக விளங்கியது. ஆனால் ஒரு காலகட்டத்தில் சமயச் சிந்தனை விடுத்து, ஆன்மிகப் பணி விடுத்து, அரசியலில் ஆர்வம் காட்டியது. ஆட்சியாளர்களைத் தன்வசம் திருப்பிக் கொள்ள வேண்டும் என்ற ஆசை மேலிட அதன் பயனாகப் பௌத்தம் மெல்ல மெல்ல தமிழகத்தில் மறையலாயிற்று.

தமிழகத்தின் அடிப்படைத் தொழில் வேளாண்மை. வேளாண் மக்கள் உண்டி கொடுத்து உயிர் காப்பவர்கள். அத்தொழில் செய்வோர்க்கு உற்ற உறுதுணையாக விளங்குவது உழவுக்குரிய காளைகள் ஆகும். அக்காளையைச் சிவபெருமானின் வாகனமாக சைவ சமயம் சித்திரிக்கின்றது. உழவுத் தொழிலுக்குத் தண்ணீரே ஆதாரம். ஆகவே சிவபெருமான் 'கங்கை' என்ற பெயரில் நீரைத்தலையிற் சுமந்து இருப்பதாக, வடிவமைக்கப் பட்டிருக்கிறார்.

அன்பும் அறமும் போற்றக் கூடிய காலகட்டத்தில் தான் சிற்றிலக்கியங்கள் செல்வாக்கினைப் பெற்றன. தொடக்கத்தில் இறைவனின் அருளிச் செயல்களையும் அற்புதங்களையும் எடுத்துக்கூறி அதன்வழி இறையாண்மைக்கு ஏற்றம் தரமுயன்ற இவ்விலக்கியங்கள் தங்கள் கோட்பாட்டில் இருந்து நழுவி தனி மனித உடற்சுகம் குறித்த கீழ்த்தரமான சிந்தனைகளுக்கும், பால் உணர்ச்சியைத் தூண்டும் வண்ணம் அமைந்த சிந்தனைகளுக்கும் சமூகத்தில் சாதீயம் குறித்த காழ்ப்புணர்வுகளுக்கும் ஊக்கம் தரும் வகையில் எழுந்தன. குறிப்பாக, பள்ளு, குறவஞ்சி போல்வன சாதீயம் மற்றும் சமயத் தொடர்பான பூசல்கள் எழக் காரணமாயின. உலா கலம்பகம், தூது, ஏசல், ஊசல் போல்வன முகம் சுளிக்கும் அளவிற்கு விகாரமான வக்கரத்தன்மையுடைய காமத்திற்கு முன்னுரிமை தந்து மேட்டுக்குடி மக்களைத் திருப்திப் படுத்தின.

இவ்வாறாக எழுந்த சிற்றிலக்கியங்களின் வகைகள் 96 என்றும் 300க்கும் மேற்பட்ட சிற்றிலக்கிய வகைகள் காணக் கிடைக்கின்றன என்றும் இத்துறை அறிஞர்கள் கூறியபோதும் முன்னர் சொன்னது போல இவற்றின் பொருண்மைகள் சமூகத்திற்குச் செய்த சாதனைகள் என்ன என்று வினாவை

எழுப்பினால் பெரும்பாலும் மேம்படத்தக்கதாக எதுவும் இல்லை என்றே கருத முடிகிறது.

ஆனால், பிள்ளைத் தமிழ் இலக்கியம் என்ற இந்த இலக்கியவகை, அக்காலக் கட்டத்தில் எழுந்த இலக்கிய இனங்களில் மாறுபட்டுத் திகழ்கிறது. குழந்தையும் இலக்கியமும் என்ற நோக்கில் பார்ப்போமேயானால் குழந்தையர் பற்றிய சிந்தனைகள் பெரும்பாலும் நாட்டுப்புற இலக்கியத்தில் ஆழமாக வேர் ஊன்றி உள்ளதைக் காணமுடிகிறது. நாட்டுப்புற இலக்கியம் என்பது மக்களின் மனவெளிப்பாடு. இவ்வெளிப்பாடு பெரிதும் ஊடாடிக்கிடப்பது பழமொழி, விளையாட்டு நம்பிக்கை போன்றவற்றில் என்றால் மிகையாகாது.

நாட்டுப்புற இலக்கியம் என்பதன் இலக்கியக் கூறுகள் மக்கள் போற்றிக் காத்துவரும் பண்பாட்டினைப் போன்றே வழிவழி வந்தவையாக இருக்கலாம் அல்லது பிற இலக்கியங்களி னின்றும் பெற்ற இரவலாக இருக்கலாம் அல்லது கருத்துக்கள் மட்டும் இரவல் பெற்றதாக இருக்கலாம் அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட இலக்கியங்களோ அல்லது கருத்துகளோ இணைந்து புதுவகை இலக்கியமாகி இருக்கலாம். குழந்தைப் பேறு இல்லை என்றாலே சமூகம் அந்தப் பெண்ணையும் சரி ஆணையும் சரி 'மலடு' என்ற சொல்லால் தனிமைப்படுத்தி விடும். இது மனித சமூகத்திற்கு மட்டும் அன்று. காய்க்காத மரத்தை, கனிகொடாத விருச்சத்தை 'ஆண்' மரம் என்று கூறிவிடுவர். சமூகத்தில் பெண்களுக்குக் குறிப்பாகக் குடும்ப நிகழ்வுகளில் பிறரை வாழ்த்தும் உரிமை அல்லது ஆசி நல்கும் உரிமை, அவர்களின் குழந்தைப் பேற்றை கொண்டே நிர்ணயிக்கப் படுகிறது. குழந்தைச் செல்வம் இல்லாத வீடு பேய் வாழும் இடமாகவே கருதப் படுகிறது.

ஆகவேதான், இறைவர்களில் கூட கண்ணன், முருகன், விநாயகன் போன்ற கடவுளர்கள் குழந்தைகள் வடிவில் மக்களிடத்தில் செல்வாக்குப் பெற்றுள்ளனர். கிருட்டிண ஜெயந்தி நாளாகிய கோகுல அட்டமியில் குழந்தையின் பாதத்தை மாக்கோலத்தில் இட்டு அதன் வழி குழந்தைகள் வருகை தர வேண்டும் என்ற உணர்வோடு இன்னும் மக்கள் வேண்டி விரும்பி விழா எடுப்பத்தைக் காணலாம்.

ஆறுதலை, பன்னிருகைகள், பன்னிரு கண்கள் என முருகப் பெருமான் நிமிர்ந்து நின்றாலும், ஔவையிடம் சுட்ட பழம் வேண்டுமா சுடாதபழம் வேண்டுமா என்று வேடிக்கை செய்த பால பருவத்து முருகனுக்குத் தனிச்சிறப்பு உண்டு.

குழந்தையைப் போல அவளுக்கும், பொரிக்கும், அப்பத்திற்கும் ஏங்கும் விநாயகன் குழந்தைகளின் நலன் கருதும் கடவுளாகப் பேசப்படுவது சமயம் குழந்தைகளுக்குத் தந்துள்ள உரிமையைக் காட்டும்.

'தாயைப் போலப் பிள்ளை நூலைப்போல சேலை'

'தாய்ப்பத்தடி பாய்ந்தால் குட்டி பதினாறடி பாயும்'

'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே'

'பெயர் சொல்லப் பிள்ளை வேண்டும்'

'விதையொன்று போட்டால் சுரை ஒன்றா முளைக்கும்'

போன்ற பழமொழிகள் குழந்தையை மையமாக வைத்து எழுந்தவை ஆகும். திருமணம் கண்டவர்கள் குடும்பம் என்ற கட்டுக்குள் வருவதற்கு அவர்கள் குழந்தை பெற்றாக வேண்டும் என்பது சமூக விதி.

இன்றையக் குழந்தை நாளைய தந்தை. Child is the father of a Man என்பது ஆங்கிலக் கவிஞன் வாக்கு. இப்படிச் சமூகத்தின் ஆணிவேராக விளங்கும் குழந்தை நல்லமுறையில் வளர்க்கப்படாவிட்டால் அச்சமூகம் சீர்குலைந்து, நலிந்து மனித வரலாற்றிலிருந்து மறைந்து போகும். நாகரிகம், பண்பாடு போன்ற தொன்மைமிகு சிறப்புகள் அவற்றை ஏற்றுச் சிதைந்து விடாது பின்பற்றும் இளைய தலைமுறையினர் கையில்தான் உள்ளது என்பது வெள்ளிடைமலை. மொழி பண்பாடு ஆகியவற்றின் பெருமைகளைப் பேணிக்காக்க வேண்டிய பெரும்பொறுப்பு தந்தை - மகன் என்ற உறவின் பிடிப்பிலேதான் உள்ளது. ஆகவே தான் வள்ளுவர், தன்னைத் தந்தையாக்கிய தனையனுக்கு ஒரு தந்தை நன்றி காட்ட வேண்டும் எனில் அவனை அவையத்து முந்தியிருக்கச் செய்தல் வேண்டும்; அதற்கான அடிப்படைக் கல்வி முதல் உயர் கல்வி வரை தவறாது தந்து சமூகத்தில் அறிவுடையவனாக, சான்றோனாக அம்மகன் விளங்க வழி வகை செய்ய வேண்டும் என்கிறார். இதே போன்று, சங்கப் புலவர் பொன்முடியார் தமது கவிதையில் கூறும்போது குழந்தைச் செல்வத்தைப் பெண் என்ற முறையில் பெற்றுத் தருவது தமது கடன் என்றும் அக்குழந்தையைச் சான்றோனாக அறிவுடையவனாக ஆக்க வேண்டிய கடப்பாடு வேந்தனைச் சார்ந்தது என்கிறார். சமூகத்தின் தலைமகனாக விளங்கும் வேந்தன் மேற்கொள்ள வேண்டிய தலையாய கடமைகளில் இளஞ்சிறார்களுக்குக் கல்வி தரல் என்பதாகும். இவ்வாறாகக் குழந்தைச் செல்வங்களில் நலம் கருதும் அரசியல் அமைப்புகளை அன்றைய சங்ககாலத்தில் காணமுடிகிறது.

***'எந்தக் குழந்தையும் நல்ல குழந்தைதான் மண்ணிற் பிறக்கையிலே***
***அவன் நல்லவன் ஆவதும் தீயவன்***
***ஆவதும் அன்னை வளர்ப்பதிலே'***

*(நீதிக்கு தலைவணங்கு, திரைப்படப்பாடல்)*

என்ற இற்றைக் கவிஞனின் கருத்து ஈண்டு சிந்திக்கப்பாலது. குழந்தை இச்சமூகத்தில் தகுதியான இடத்தைப் பெற்று வாழ்வாங்கு வாழ்வதற்கு அக்குழந்தையின் பெற்றோர்க்கே முதற் பொறுப்பு அமைகிறது. நீர் உயர வரப்புயரும்; வரப்புயர நெல் உயரும்; நெல் உயரக் குடியுயரும்; குடி உயரக் கோன் உயரும் என்பது வேளாண் தொழிலுக்கான கோட்பாடு எனச் சங்க இலக்கியம் விளம்பும். அதுபோல ஒரு வீடு சீர்பெற்றால் ஓர் ஊர் உயரும். ஓர் ஊர் சீர்மையடையும்போது, நாடு உயரும், ஆகவே நாடுயர வேண்டுமானால் நல்ல குடிமக்கள் வேண்டும். நல்ல குடிமக்கள் உருவாக வேண்டும் என்றால் நல்ல குழந்தைகள் உருவாக்கப்பட வேண்டும். நல்ல குழந்தைகள் உருவாக வளமான சிந்தனைகள், பொது நல அக்கறை, மொழிப்பற்று, போன்ற உயர்ந்த குணங்கள் பெற்றோராலும் மற்றோராலும் புகட்டப் படவேண்டும். அப்படிப் புகட்டப்பெறுவதற்கு இத்தகைய கருத்துடைய சிறப்புறு இலக்கியங்கள் உருவாக வேண்டும்.

இத்தகைய பணியில் தன்னை முழுவதுமாக செயற் படுத்திக் கொண்ட இலக்கியம் தான் பிள்ளைத் தமிழ். உலகிற் காணும் உயிரினங்கள் அத்தனையுமே வளரும் இயல்புடையன. இவ்வாறு வளரும் பருவங்களில் அவற்றின் இளமைப் பருவம் எல்லாருடைய உள்ளத்தையும் கொள்ளை கொள்ளவல்லன. கரும்புலியின் குருளை, பூனையின் குட்டி, கமுகின் கன்று, மனிதக் குழந்தை போன்றன அத்தனையுமே இளமை என்ற இனிய தோற்றத்தால் அனைவரையும் கவர வல்லன என்பது வெள்ளிடை மலை. அன்பு செலுத்துவதற்கும் அன்பை ஏற்பதற்கும் உரிய பருவம் இளமைப் பருவமாகிய குழந்தைப் பருவமே. இப்பருவத்தின் சிறப்புணர்ந்தே மகாகவி பாரதியார்,

***'அன்பு தருவதிலே – உனை நேர்***
***ஆகுமோர் தெய்வம்உண்டோ***
***சீர்பெற்று வாழ்வதற்கே – உன்னைப் போல்***
***செல்வம் பிறிது முண்டோ'***

*(பாரதியார் பாடல் :*
*கண்ணம்மா என் குழந்தை, 9-10)*

என்று பாராட்டுவதைக் காணலாம். அதிலும் குறிப்பாகத் தாயின் மார்பகமே உலகம் எனக் கருதி, மின்மினி எனக் கண்ணைச்

சிமிட்டி, புற உலகின் துயரங்கள் அறியாது புன்சிரிப்புச் சிந்தி, மழலை பேசி காண்போரை மகிழ்விக்கும் பிள்ளைப் பருவம் இறைவனுக்குச் சமமானது என்பர்.

இரவு, பகல், வெள்ளை, கருப்பு போன்ற வண்ணத்தின் நிற பேதங்கள், தாய் மற்றவர் எனக் கண்டு கொள்ளும் ஆற்றல், இப்படி உலகியலைப் புரிந்து கொள்ள நடைபோடும் இளஞ்சிறார்ப் பருவம், அப்பருவத்தில் அக்குழந்தைகள் செய்யும் அறியாச் செயல்கள் காண்போரின் கவனத்தை ஈர்ப்பன.

இளங்கன்று பயமறியாது என்பது பழமொழி. அதற்கொப்பத் தீயைக் கண்டாலும், பறக்கும் ஈயைக் கண்டாலும், ஊர்ந்து செல்லும் தேளைக் கண்டாலும் தொட்டுப் பிடித்து விட வேண்டும், இந்தப் பிரபஞ்சத்தை முற்றிலும் அறிந்து விட வேண்டும் என்ற வேட்கையில் தவழ்ந்து ஓடும் குழந்தைப் பருவத்துக் குறும்புகள் கண்டு களிப்புறாதவர் எவரும் இருக்க முடியாது.

அதனால்தான் வள்ளுவர் கூறும் போது 'அமிழ்தினும் அற்ற இனிதே தம்மக்கள் சிறுகை அளாவிய கூழ் (64) எனப் பாராட்டுவார். இத்தனைச் சிறப்புமிக்க இப்பால பருவத்து நிகழ்வுகளைக் கற்போர் மனம் களிப்பூட்டும் வாழ்க்கைச் சித்திரத்தைச் சொல் வண்ணத்தால் தன் சிந்தனை என்னும் தூரிகை கொண்டு வண்ணமயமாய் இலக்கிய ஓவியங்களாக வரைந்துள்ளனர் பிள்ளைத் தமிழ்ப் பாடிய கவிஞர்கள்.

பெற்றோரின் அன்பையும், பாசத்தையும் வெளிப்படுத்தும் ஊடகமாகப் பிள்ளைத் தமிழ் விளங்குகிறது எனலாம். கவிஞன் தாயாக இருந்து அகக்கண் கொண்டு புறநிகழ்வுகளைப் படம் பிடித்துக் காட்டுவது, கவிஞனின் இலக்கிய ஆற்றலை மட்டும் வெளிப்படுத்துவது அன்று. அதோடு குடும்பம் என்ற சோலையில் பூத்துக் குலுங்க வந்திருக்கும் புதுவடிவின் முக்கியத்துவத்தைப் பெற்றோரும் மற்றோரும் அறிய வேண்டும் என்பதற்காகவே.

இப்பிள்ளைத் தமிழ் இலக்கியம் காப்புப் பருவம், செங்கீரைப் பருவம், தாலப் பருவம், சப்பாணிப் பருவம், முத்தப் பருவம், வருகைப் பருவம், அம்புலிப் பருவம், சிற்றில் பருவம், சிறுபறை பருவம், சிறுதேர்ப் பருவம் என்ற வகையில் ஆண் குழந்தைகள் பற்றியும் பெண்பாற் குழந்தைக்கு அம்புலிப் பருவத்திற்கு அடுத்து நீராடற் பருவம், அம்மானைப் பருவம், ஊசல் பருவம் என மூன்றை இணைத்து மொத்தத்தில் பத்துப் பருவங்களாக அமைந்து குழந்தை வளர்ப்பிற்கான அரிய பல கருத்துக்களை வழங்குவதைக் காணலாம். இனிப் பருவ வாரியாக

இப்பிள்ளைத் தமிழ் இலக்கியம் குழந்தை நலன் கருதிச் சொல்லும் செய்திகளைத் தொகுத்துக் காணலாம்.

### காப்புப் பருவம்

பிள்ளைத் தமிழ் நூல் படைக்கும் படைப்பாளன் தான் மேற்கொண்டுள்ள சமயத்தை வலுப்படுத்த வேண்டி அல்லது தான் மதிப்புத் தரும் கடவுளை முதன்மைப்படுத்த வேண்டி அல்லது சமூகத்தில் செல்வாக்குப் பெற்ற சமயம் சார்ந்த கடவுளரை முன்னிருத்தித் தன் படைப்பில் தலைமை ஏற்கும் பாத்திரத்தைக் காத்தருள வேண்டுவதே காப்புப் பருவம் ஆகும்.

காப்புப் பருவத்தில் இடம்பெறக் கூடிய கடவுளர் பட்டியல் ஒன்றைப் பன்னிரு பாட்டியல் இவ்வாறு கூறுகிறது.

**திருமால் அரனே திசைமுகன் கரிமுகன்**
**பொருவேல் முருகன் பரிதி வடுகன்**
**எழுவகை மங்கயைர் இந்திரர் சாத்தன்**
**நிதியவன் நீலி பதினொரு மூவர்**
**திருமகள் நாமகள் திகழ்மதி என்ப**
**மருவிய காப்பினுள் வருங் கடவுளரே[1]**

என்பதாகும். இதன்படி திருமாலே காப்புப் பருவத்தில் முதன்மைக் குரியவர் ஆகிறார். இதுபற்றிப் பன்னிரு பாட்டியியல் கூறும்போது,

**அவற்றான்**
**காவல் கிழவன் ஆகலானும்**
**பூவின் கிழத்தியைப் புணர்த லானும்**
**முடியும் கடகமும் மொய்பூந்தாரும்**
**குழையும் நூலும் குருமணிப் பூணும்**
**அணியும் செம்மல் ஆகலானும்**
**முன்னுற மொழிதற்கு உரியன் என்ப[2]**

இவ்வாறு திருமாலுக்குரிய பெருமைகளைக் கூறி அவரே காப்புக் கடவுளர்களில் முதன்மைக்குரியவர் என்கிறது. ஆயின் இவ்வரையறை இருந்தும் திருவாவடுதுறை 'மாசிலா மணி தேசிகர் இயற்றிய திருஞான சம்பந்தர் பிள்ளைத்தமிழ் காப்புப் பருவத்தில் பிரமீசர், திருநிலை நாயகி, திருநீறு, கால்மாறியாடிய கடவுள், சிற்சித்தி, விநாயகர் கடவுள், முருகக் கடவுள், திருப் பொய்கை, பன்னிரு திருப்பெயர்ப் பழம்பதி, திருப்பதிகம், சட்டை நாதர் போன்ற தெய்வங்கள் இடம்பெற்றுள்ளதைப் பேராசிரியர் டாக்டர் கு. முத்துராசன் தனது பிள்ளைத் தமிழ்

இலக்கியங்கள் ஓர் ஆய்வு, வசந்த செல்வி பதிப்பகம், 1992, ப. 32இல் குறிப்பிடுவதைக் காணலாம்.

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய சேக்கிழார் பிள்ளைத் தமிழில், காப்புக்குரிய கடவுள்களையெல்லாம் விடுத்துத் திருத்தொண்டத் தொகை செய்யுள் முறைப்படி அமையும் திருத்தொண்டர்களையெல்லாம் காப்புக்குரிய கடவுள்களாகப் பாடப்பெற்றுள்ளது. மேலும் பிள்ளையவர்கள் இயற்றிய திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர் பிள்ளைத் தமிழில் பாட்டியல் கூறும் முறைப்படி அமைக்காமல் திருநந்தி தேவர், சனற்குமார முனிவர், சத்தியஞான தரிசினிகள் பரஞ்சோதி முனிவர், மெய்கண்டார், அருண்நந்தி சிவாச்சாரியர், மறைஞானசம்பந்தர், உமாபதி சிவம், அருணமச்சிவாயர், சித்தர் சிவப்பிரகாசர், நமச்சிவாய மூர்த்திகள் பதினான்கு சுத்தாத்துவித சைவ சித்தாந்த ஆசாரியர்களைக் காப்புக் கடவுளராகப் போற்றியுள்ளார்.

இதுபோலவே வைகுந்தநாதன் பிள்ளைத் தமிழில் நம்மாழ்வார், சரசுவதி, ஆண்டாள், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், திருப்பாணாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், மதுரகவியாழ்வார், இராமாநுசர், பெரிய நம்பி, மணவாளமாமுனி ஆகியோர் காப்புக் கடவுளராக இந்நூலில் பேசப்பட்டுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

மறைமலையடிகள் பிள்ளைத்தமிழில் தமிழ்த்தாயும், ஆங்கிலச் செவிலித்தாயும், திருவள்ளுவரும் காப்புக் கடவுளராக அமையப் பெற்றுள்ளதைக் காணமுடிகிறது. இவ்வாறாக சமயத்திற்கேற்ப, படைப்பாளரின் மனநிலைக்கேற்ப, பிள்ளைத் தமிழுக்கு எடுத்துக் கொண்ட கருவிற்கேற்ப காப்புக் கடவுள் அமையப்பெற்றதைக் கண்டோம்.

பிறந்த குழந்தைக்கு ஆயுட்காப்பிற்கும், உடல் நலக் காப்பிற்கும் கடவுளர் அருள் வேண்டும் என எண்ணி, பல்வேறு இறைவர்களை வணங்குவது பொது மரபு. ஆயின், இதற்கு அப்பாலும் எண்ணிப் பார்ப்போமேயானால் குழந்தையின் வளர்ச்சியின் நல்லன எல்லாம் நிகழ இறையருள் வேண்டப் படுவதாகவும் கருத இடமுண்டு. பொதுவாகக் குழந்தைகளைத் தீயகாற்று எனப்படும் பேய், பிசாசுகள் அண்டும் என்பது பொது நம்பிக்கை. குழந்தை நோய், நொடி இன்றி வாழ்வாங்கு வழாத் தாய்மார்கள் இன்றும் தங்கள் குழந்தைகளுக்கு அவை பிறந்த ஏழாவது நாளில் காப்பணி வதைக் காணலாம். இவை ஒருபுற மிருக்க, நல்ல மனம் கொண்ட தாய் தந்தையர் அமையப்

பெற்றால் தான் குழந்தை சிறந்த பண்பைப் பெற முடியும். ஆன்மிகம் மனிதர்க்கு நல்ல மனம் அமையத் துணையாக அமைகிறது. இறைவணக்கம், மூலம் தான் மனம் மென்மை அடைகிறது. இறைநேயம் தான் உள்ளத்தைத் தூய்மையாக்கு கிறது. இறைநேயம் கொண்ட பெற்றோர்தான் தங்கள் குழந்தைகளுக்குக் கருணை, அன்பு, பாசம், நேயம் போன்ற உறவு சார்ந்த வேர்களை பதியன் செய்ய முடியும் என்ற வகையில் காப்பு இங்கே அமையப்பெற்றுள்ளதாக கருதலாம்.

### செங்கீரைப் பருவம்

பிள்ளைத் தமிழ் இலக்கியத்தில் இரண்டாவது பருவமாக அமைவது செங்கீரைப் பருவம் ஆகும். மழலைச் செல்வமாக ஒப்பனை செய்து பாடப்படும் பாட்டுடைத் தலைவனின் ஐந்தாம் திங்களில் நிகழ்வது எனக் கூறுவர். 'கீர் என்ற சொல்லுக்கு', 'சொல்' என்பது பொருள் எனப் பொருள் கொண்டு தொடையமைதிகள் இல்லாத ஒன்றைச் செந்தொடை எனக் கூறுவது போலச் சொல்லுக்குரிய அமைதி இல்லாததைச் செங்கீர் என்றார் என்றும் இது குழந்தைகள் மழலையைக் காட்டிலும் இளமைப் பருவத்தையுடையதான பொருள் தெரியாத ஒலியை எழுப்பும் பருவத்தைக் குறிப்பதாகுமென ஒரு கருத்து பரவலாக நிலவுகிறது" என ஒரு கருத்தைத் தருகிறார் டாக்டர் கு. முத்துராசன்.[3]

பொதுவாக ஆடுக செங்கீரை எனும் செய்யுள் வழக்கைக் கொண்டு, குழந்தை ஒரு காலை முடக்கி ஒரு காலை நிமிர்த்தி இரண்டு கைகளையும் நிலத்தில் ஊன்றி முகத்தை மேல் நிமிர்த்தாடுதலாகிய பருவமே செங்கீரை ஆகும் என ஒரு சாரார் கூறுவர். அவ்வாறு ஆடுகின்றபோது சுற்றத்தார் செவ்விய சொற்களைச் சொல்ல வேண்டும் என்று வேண்டிக் கொள்வதாக இரண்டு கருத்துக்களையும் சேர்ந்தமைத்துப் பாடுதல் செங்கீரை என்பது மற்றொரு கருத்தாகும் என்பார் கு. முத்துராசன்.[4]

ஈண்டு ஒன்றைக் கவனிக்க வேண்டும். இறையருளோடு தாயின் அன்பு சேர எல்லாக் குழந்தைகளுமே தேவையான ஆரோக்கியத்தைப் பெற்றுத் திகழும். பிறந்த குழந்தை எழுந்து நடைபயில வேண்டும் என்பது இயற்கை விதி. அம்முயற்சியில் குழந்தை ஈடுபடும் போது, அதற்குத் துன்பம் தெரியாமலும், அம்முயற்சியில் சோர்வு கண்டு விடாமலும் தன் உடல் வளைத்து மெல்லிய கீரைத் தண்டு காற்றில் ஒடிந்து விடாமல் அசைவது போலக் குழந்தை மண்ணை விட்டு நிமிரும்போது அதன் உடல் புவியீர்ப்பு விசைக்கு ஏற்பத் தனக்குத் தானே சமநிலைப் படுத்திக் கொள்ளும் அழகு மேற்சொன்ன மெல்லிய செந்நிறத் தண்டையுடைய

கீரைக்கு ஒக்கும். அத்தகைய இளத்தளிரின் முயற்சியை, ஆர்வத்தைத் தூண்டும் வகையில் இனிய, எளிய பதங்களின் மூலம் உற்றார் உறவினர் பாராட்டி ஊக்குவிக்கும் செயற்பாட்டின் செய்யுள் வடிவமே செங்கீரைப் பருவம்.

## தாலப் பருவம்

பாட்டுடைத் தலைவனின் ஏழாம் திங்களில் நிகழ்வது. தால் என்பது நாக்கு. அந்நாக்கை அசைத்து இசை எழுப்பி, இசையின் வாயிலாகக் குழந்தையைத் தூங்கச் செய்வது தாலாட்டு எனப் பொருள் கூறுவர். பொதுவாகத் தூளியில் குழந்தையை உறங்கப் போட்டால் போட்டவுடன் குழந்தை தூங்கி விடாது. அதிலும் குறிப்பாக ஒன்று ஒன்றை வயதைத் தொட்ட குழந்தை துறுதுறு என்று இருக்கும். தூளியில் சீலையை ஒதுக்கிக் கொண்டு தன் தாயைத் தேடும். அப்படித் தாயைக் கண்டால் மகிழ்வதோடு, இப்புறவிலகின் சலனங்களைப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்திலே அல்லது உலகியலை உடனே அறிந்து கொள்ள வேண்டும் என்ற துடிப்பிலேயோ, அக்குழந்தை உறக்கத்தோடு கூடிய ஒருவித விழிப்பில் தவிக்கும். ஓர் ஆண்டு அகவைக்கு உட்பட்ட குழந்தை தன்னைத் தூக்கம் தழுவ வேண்டும் என்று எண்ணியது போல அதனைத் தாய்க்குத் தெரிவிக்க உரத்த குரலில் அழும்.

தாய்க்குத் தான் தன் குழந்தை பசிக்காக அழுகிறதா அல்லது உறக்கத்திற்காக அழுகிறதா என உணர முடியும். பசி என்றால், பாலூட்டிப் பசியமர்த்தி உறங்கத் தொட்டிலில் இடுவாள் அம்மா. உண்ட மகிழ்ச்சியில் அக்குழந்தை முக மலர்ச்சியோடு தாயின் சேவைக்கு நன்றி சொல்லும். அப்போது பொருள் விளங்காத ஒலிகளில் சிரித்து மகிழும். அத்தருணத்தில் தாய் தன் குழந்தை உறங்கத் தாலாட்டை ஊடகமாகக் கொள்வாள்.

அங்கும் இங்கும் அலைந்து திரியும் தூளியின் உள்ளே குழந்தை இதமான காற்றுக்கும், தாயின் பரிவுக்கும் மனம் மகிழ்ந்து உறங்குவதற்கு முயலும். அப்போது அன்னை அக்குழந்தையின் செவிக்கு இதமான ஓசையில் நாவசைத்து தாலே தாலேலோ என்ற அடிகள் பின்ன இசைத்துப் பாடுவாள்.

மாமன் பெருமை, அத்தையின் சீர், தாத்தாவின் புகழ், பாட்டியின் பரிவு என உறவுகளின் சிறப்புகளை முறைப்படுத்தி அன்னை தன் குழந்தைக்குத் தாலாட்டாகப் பாடுவாள். 'நாடாளப் பிறந்தவன், சுற்றம் காக்க வந்தவன், தாய்க்கு மகனாய்ப் பிறந்து மலடி என்ற சொல்லை நீக்க வந்தவன், அழகன்,

பண்பாளன் எனத் தாய் வருணிப்பில் பொருள் அறிய முடியா விட்டாலும்' அவளது பண்ணில் கவனத்தைத் திருப்பிக் கொண்டு கண்ணையர் தலை நடைமுறையில் காணலாம்.

குழந்தைப் பருவத்தில் கடுமையான பார்வை, கடுமையான பேச்சு, கடுமையான கையாடல் (அதாவது குழந்தையைத் தூக்கும் போது வன்முறை காட்டுதல்) இன்றி, அதன் மனம் மகிழும்படி பொறுமையோடு பேசவும், அருமையோடு அரவணைப்பு செய்யவும் வேண்டும் என்பதே உளவியலார் கருத்து. இதனை நம் முன்னோர்கள் அன்றே அறிந்திருந்தனர். எழிலார்ந்த சொல், இன்பம் தரும் வருணனை, நெஞ்சைத் தொடும் குரல், பாடல் அமைப்பில் வஞ்சிப்பாவின் சாயல்; இப்படி அணையப் பெற்றதே தாலாட்டு. தாலாட்டு கேளாத பிள்ளையும், தார்குச்சி அறியாத மாடும் இறுதியில் நிலை கெட்டுப் போகும் என்பது உலக வழக்கு. தாலாட்டு கேளாவிட்டால் அக்குழந்தை மண்ணில் முரடனாக மாறும். வண்டியிற் பூட்டிய மாட்டை ஒழுங்குபடுத்தப் பயன்படும் நீண்ட பிரம்பு ஒன்று வண்டி ஓட்டுபவர் கையில் இருக்கும். அது இல்லை என்றால் மாடு படியாது; முரட்டுக் காளை ஆகி விடும் என்பர். தொட்டிலில் உறங்கும் குழந்தைக்குத் தாலாட்டு என்பது உறக்கத்தை மட்டும் வரச் செய்வதன்று. அதோடு குழந்தையின் பண்பு நலத்தையும் சிறக்கச் செய்வது. அத்தகைய தாலாட்டை... நாட்டுப் புற இலக்கியத்திலிருந்து செம்மொழி இலக்கியம் பெற்றதா? செவ்வியலிலக்கியத்தில் இருந்து நாட்டுப்புற இலக்கியத்திற்குச் சென்றதா என்ற வினா எழுப்பினால், விடை காண்பது அரிது. ஆயினும் மக்கள் மன்றமாகிய நாட்டுப்புற இலக்கியத்திலிருந்தே செவ்வியல் இலக்கியத்திற்குப்பல செய்திகள் சென்றிருக்க வேண்டும் எனத் துணியலாம்.

ஆனால் இன்று 'தாலாட்டு' பாடும் பெண்கள் நகர்ப் புறங்களில் அருகி வருகின்றனர். கிராமத்து மக்கள் நகரங்கள் நோக்கிக் குடிபெயர்வதால் இன்று கிராமத்திலும் தாலாட்டு நசிந்து வருகிறது. ஆயின் பிள்ளைத் தமிழ் இலக்கியத்தில் ஒரு அங்கமாக இன்றும் வாழ்ந்து வரும் தாலாட்டு நம் பண்பாட்டு வரலாற்றிற்கு ஒரு சிறப்புறு இலக்கியப் பதிவு எனலாம்.

### சப்பாணிப் பருவம்

இது பிள்ளைத்தமிழின் நான்காவது பருவம் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனின் ஒன்பதாம் திங்களில் நிகழ்வது என்பார். குழந்தை உட்காரத் தொடங்கிய பிறகு மகிழ்ச்சிப் பெருக்கால் கையாட்டுதல் கைகொட்டுதல்

போன்ற விளையாட்டுகள் இதனிடத்து இயல்பாகவே தோன்றும். பெற்றோரும் உற்றாரும் உறவினரும் கைகளைக் கொட்டிக் காட்டிக் குழந்தையையும் அதுபோலச் செய்ய வேண்டுவர் குழந்தைகளும் அவ்வாறு பாவனை செய்யும்போது கையைக் கொட்டி ஒலி எழுப்பும். அவ்வொலி சப்பென ஒலிப்பதன் காரணமாகச் சப்பாணி ஆயிற்று என்பர். பாணி என்பது கையெனப் பொருள் படும். கையொலியாகிய 'சப்' என்ற ஒலியும் பாணியாகிய கையும் இணைந்து சப்பாணி ஆயிற்று என்பர்.

குழந்தை நிமிர்ந்து அமர்ந்திருக்கும் அமைப்பைச் சப்பாணி என்று கூறும் வழக்கம் உண்டு. இதன் காரணமாகவே இது சப்பாணி பருவமாயிற்று என்றும் 'சப்பாணி' என்பதைச் சகபாணி எனப் பிரித்து 'சக' என்பதன் பொருள் கடன் என்றும், பாணி என்பதன் பொருள் 'கை' எனக்கொண்டு இரண்டு கைகளையும் உடன்சேர்த்துக் கொட்டுதலாலேயே சப்பாணி ஆயிற்று என்றும் 'ச' என்றால் சேர்த்தல் என்றும் பொருள் கொண்டு கைகளைச் சேர்த்து ஒலி எழுப்புதல் என்னும் கருத்தும் நிலவுவதாக டாக்டர் கு. முத்துராசன் கூறுவது' ஈண்டு எண்ணத் தக்கது.

முத்தப் பருவம்

இது பதினோராம் திங்களில் நிகழ்வதாகக் கூறுவர். பிள்ளைத் தமிழ்இலக்கியத்தில் இப்பருவம் தொடர்பாக அமைந்த பாடல்கள் சந்தம் மிகுந்த இசைப்பாடலாகவும், கருத்தாழம் மிக்க இலக்கியச் சுவையுடைய பாடலாகவும் அமையப் பெற்றுள்ளமையை பல பிள்ளைத் தமிழ் இலக்கிய நூல்களின் வழி அறியலாம். 'முத்தம்' என்பது அன்பின் வெளிப் பாட்டினை குறிக்கும் குறியீடு. குழந்தையிடத்து முத்தம் தந்து அன்பினை வெளிக்காட்டிக் கொள்ளாத மக்களைக் காண முடியாது. குழந்தையின் மென்மையான இனிமையான பரிசம் முத்தம் இருவோர்க்குப் பெரும் புலகாங்கிதத்தை ஏற்படுத்தும் என்றால் மிகையாகாது. இதைக் கருத்திற் கொண்டு தான் பாரதி கூட,

கன்னத்தில் முத்தமிட்டாள் உள்ளந்தான்
கள்வெறி கொள்ளு தடீ

(கண்ணன் பாட்டு, கண்ணம்மா - தன் குழந்தை)

எனப் பாராட்டிப் பேசுவதைக் காணலாம்.

உலகில் எதையும் விலை கொடுத்து வாங்கிவிடலாம்., ஆனால் அன்பு என்பது விலைக்கு அப்பாற்பட்டது. அன்பின்

வெளிப்பாடாகத் தங்கள் உணர்வினைப் பிறர்க்குத் தெரிவிக்கும் போது, நல்ல உணவு வகைகளை விருந்தோம்பல் என்ற பெயரில் படைத்து அன்பை வெளிக்காட்டுவதும், நல்ல விலையுயர்ந்த பரிசுப் பொருள்களைக் குறிப்பாக ஆடை, ஆபரணங்கள், பயன்படு பொருட்கள், நினைவுப் பொருட்கள் எனப் பல நிலைகளில் பரிசுப் பொருட்களை வழங்கித் தங்கள் அன்பை வெளிப்படுத்துவதைக் காண முடிகிறது. தூய்மையான காமம் கலவாத அன்பு என்பது பச்சிளம் குழந்தையிடம் மக்கள் காட்டும் அன்பு ஆகும். பொருள் விளங்காது கபடமற்றுச் சிரிக்கும் குழந்தையின் சிரிப்புக்கு ஈடானது எதிர்பார்ப்பற்ற நிலையிலும் உள்ள நெகிழ்ச்சியோடும், விகற்ப மற்ற தன்மையோடும் ஒரு தாய் தன் உணர்வெலாம் ஒருங்குகூட்டி ஆசையோடும், பூரிப்போடும் தரும் முத்தமே என்பது வழிவழி கண்ட உண்மை.

அவ்வகையில் முத்தப்பருவம் பாடும்பொழுது அறிஞர், மற்ற விலைமதிப்புள்ள முத்தங்களின் இயல்புகளையெல்லாம் எடுத்துரைத்து விலை மதிப்பில்லா குழந்தையாகிய பாட்டுடைத் தலைவனின் முத்தமே மிக உயர்ந்த முத்தம் எனப் பாராட்டுவர். அவ்வாறு பாராட்டும்பொழுது பாட்டுடைத் தலைவனின் சிறப்பியல்புகளையெல்லாம் எடுத்துரைத்து அவனது திறம், அருட்தன்மை முதலியனவற்றை விதந்து பேசிப் போற்றுதற்குரிய அத்தலைமகனின் முத்தத்தை வேண்டி நயம்பட நவில்வதே முத்தப்பருவம்.

சிவானந்தன் பிள்ளைத் தமிழில் பத்துவகையான முத்தங்கள் எடுத்துக் கூறி அவற்றினும் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையின் முத்தமே அருளொடு புணர்ந்த உயர்ந்த முத்தமாக விளங்கும் தன்மையது எனப் பாராட்டப்படுவதாக டாக்டர் கு. முத்துராசன் கூறுகிறார்.[6]

மணவை திருவேங்கடமுடையான் பிள்ளைத் தமிழ் முத்தப் பருவத்தில் திருவேங்கட முடையானின் வாய் முத்தம் சாலச்சிறந்தது என்றும் முத்துக்கள் தோன்றும் பலவகை இடங்களை எடுத்துக்கூறி அவ்வவ்முத்தங்கட்குள்ள குறை பாட்டையும் கூறுகின்றது. கடல்படு முத்து அலைக்கண் அலைக்கப்படும்; அன்றி வலைக்கண் அகப்படும் சிறுமையது; அரும்பினிடத்துக் கிடைக்கும் முத்தம் கரும்பாலைக் கண்பட்டு உடைபடுகின்றது. தாமரையிடத்துக் கிடைக்கும் முத்தம் சேறாகிய கறையை உடையது. யானையினது கோட்டின்கண் கிடைக்கும் முத்தம் கோட்டிடைப்பட்டு அளவில் குறைந்து போய் குறையுடையதாகின்றது. மூங்கிற் கண் காணும் முத்தமோ

வெந்தீயால் துளைக்கப்பட்ட குற்றமுடையது. மேகத்தில் தோன்றுகின்ற முத்தம் இடியால் தாக்கப்படுகின்றது. ஆதலால் இம்முத்தங்கள் சிறப்புடையனவல்ல. ஆயின், குணவொளி நிறைந்த வேதம் பொழிகின்ற கனிவாயையுடைய திருவேங்கட முடையானின் கனிவாய் முத்தமே உயர்ந்தது; விலைமதிப்பற்றது; எனத் திருவேங்கடமுடையான் பிள்ளைத் தமிழின் முத்தப் பருவத்து ஒன்பதாம் பாடல் சுட்டுவதைக் காணலாம்.[7]

## வருகைப் பருவம்

இது பிள்ளைத் தமிழின் ஆறாவது பருவம். பாட்டுடைத் தலைவனாக விளங்கும் குழந்தையின் பதின்மூன்றாம் திங்களில் நிகழ்வது. இதனை வாரானைப் பருவம் என்றும் வழங்குவர். தத்தித் தத்தித் தளர்நடை இட்டு வரும் குழந்தையின் தளிர் நடையில் மனம் ஒன்றாதவரே இருக்க முடியாது. அன்புக் குழந்தையின் ஆடிவரும் அழகை வருக வருக என வரவேற்காத மானுடரைக் காணமுடியாது. தள்ளாடித் தள்ளாடி நடந்து வரும் பேரெழில் கூடிய இக்குழந்தையின் நடையைக் கண்டு வருக வருக என உற்சாசப்படுத்துவதே ஒருவகை இன்பம். இந்த இன்பத்தைத் தான் இப்பருவத்தில் பத்துப் பாடல்களில் வருணிக்கிறது பிள்ளைத் தமிழ் இலக்கியம்.

## அம்புலிப் பருவம்

விண்ணில் வலம் வரும் சந்திரனைக் குழந்தையாகிய பாட்டுடைத் தலைவனோடு விளையாட வருமாறு அழைப்பதை முன்வைத்து அவனுடைய பெருமைகளையெல்லாம் எடுத்து ரைத்து விளையாட வருமாறு அழைக்கும் முறையில் பாடுவது இப்பருவத்தின் அமைப்பாகும். சாம, பேத தான தண்டம் என்ற முறைகள் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையின் பதினைந்தாம் திங்களில் நிகழ்வதாகக் கருதிப் பாடப் பெறுவது.

அம்புலி என்ற சொல்லை அம் + புலி எனப் பிரிக்கலாம். புல்லி என்பது புல்லும் இயல்புடையது. ஏனைய நாட்களோடு (நட்சத்திரங்களோடு) புல்லும் சிறப்பு நோக்கிப் புல்லி என்பது நிலவைக் குறிப்பதாகக் கொள்ளலாம். புல்லி என்பதன் இடைக்குறையே புலி ஆகும். அழகுமிக்க தண்ணிய ஒளிர்க் கதிர்களைப் புல்லியுள்ளதால் அம்புலி என்று நிலவைக் கூறினும் பொருந்தும் என்றும் டாக்டர் கு. முத்துராசன் கருத்து ஈண்டு எண்ணத்தக்கது.[8] நிலவிற் காணும் களங்கத்தை முயல் என்பர். புலி என்றும் கூறுவர். அகம் + கை அங்கை என்றாவது போல அகத்தில் புலி உடையது அம்புலி என்றாயிற்று என்பர்.

பிள்ளைத்தமிழ் இலக்கியம் படைக்கும் படைப்பாளனுக்கு அறை கூவலாக விளங்குவது அம்புலிப் பருவம் என்றால் மிகையாகாது. பிள்ளைக் கவிக்கு அம்புலி புலியாம் என்னும் வழக்கு மேற்சொன்னதை உறுதிப்படுத்தும். வானில் உலவும் மதியைப் பாட்டுடைத் தலைவனுடன் விளையாட வா என அழைக்கும் போது சாம, பேத, தான தண்டம் என்ற நான்கு உபாயங்களைப் பயன்படுத்தி நிலவை, வேண்டுவது போலவும், நிலவை எச்சரிப்பது போலவும், நிலவை வேண்டிக் கொள்வது போலவும், இத்தனை முறை வேண்டியும் விளையாட வராத நிலவைத் தண்டிக்கப் போவதாகவும் கற்பனை செய்து பாடுவதே இப்பருவத்தின் தனித்தன்மையாகும். பாட்டுடைத் தலைவனின் பல்வேறு சிறப்புகளையும், பண்புகளையும், கலைத் திறனையும் எடுத்துக்கூறி நிலவை அழைக்கும் கவியில் கவிஞனின் படைப்பாற்றலின் திறனை அவன் கையாளும் உவமை, உருவக, சிறந்த அடைகள் போன்றவற்றால் நாம் உணரலாம்.

இன்னின்ன வகையில் சந்திரனும், பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையும் ஒத்திருக்கின்ற காரணத்தால் சந்திரனைப் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தைக்குச் சரிநிகர் சமானமாக எண்ணி விளையாட அழைப்பது முதல்நிலை. சந்திரனும் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையும் இன்னின் வகையில் வேறுபடுகின்றார்கள்; என்றாலும் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தை அருள் உள்ளம் வாய்க்கப்பெற்றது. ஆதலின் சந்திரனை விளையாட அழைக்கின்றது. எனவே விண்ணிறிங்கி வருக என அழைப்பது இரண்டாம் நிலை. சந்திரன் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையுடன் விளையாடவரின் 'இன்னின்ன நலன்களைப் பெறுவாய்' என எடுத்துரைத்து அழைப்பது மூன்றாம் நிலை. பாட்டுடைத் தலைவனாகிய குழந்தை இத்தனை வகையில் வருந்தி அழைத்தும் சந்திரன் வரவில்லையாயின் சந்திரன் இன்னின்ன வகையில் தண்டனைக்கு உள்ளாவான் என ஒறுக்கு முகமாக அழைப்பது இறுதி நிலை.

பொதுவாக, இந்நால்வகை நிலைகளில் அம்புலிப் பருவம் அமைதல் மரபு. சில பிள்ளைத் தமிழில் தானம், தண்டம் என்ற நிலைகள் மட்டும் இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகிறது. வைகுந்தநாதன் பிள்ளைத் தமிழ் இதற்கு ஏற்ற எடுத்துக்காட்டு.

இத்தனைச் சிறப்பு மிக்க இவ்வம்புலி பருவத்திற்கு அடுத்து அமையும் பருவங்கள் இருநிலைகளிற் பிரிந்து ஆண்பாற் பிள்ளைத் தமிழ் எனவும் பெண்பாற் பிள்ளைத் தமிழ் எனவும் அமைந்து விளங்குவதைக் காணலாம். ஆண்பாற் பிள்ளைத் தமிழ் அம்புலிப் பருவத்திற்கு அடுத்து, சிற்றில்

இழைத்தல், சிறுபறை முழக்கம், சிறுதேர்ப் பருவம் என்ற முறைமையில் அமையும். பெண்பாற் பிள்ளைத் தமிழ் நீராடற் பருவம், அம்மானைப் பருவம், ஊசல் பருவம் என்ற முறைமையில் அமைந்து விளங்கும்.

சிற்றில் . பருவம் (சிற்றில் இழைத்தல்) சாண்பிள்ளை என்றாலும் ஆண்பிள்ளை என்பது வழக்கு. மனவளர்ச்சி அடிப்படையில் ஆண்பிள்ளையை விடப்பெண் குழந்தை யிடத்துப் பொறுமை, அரவணைப்பு, மருட்சி, சினம் காத்தல் என்ற பண்புகள் இயற்கையிலே அதிகமாக அமைந்திருத்தல் என்பது பொது. ஆண்குழந்தைக்குத் துறு துறுப்பு, சகிப்புத் தன்மையின்மை, விளையாட்டுக் கோபம் போன்றன இயல்பாக இருப்பதைக் காணலாம். இதன் காரணமாகத்தான் குழந்தைகள் விளையாடும்போது பெரும்பாலும் ஆண் குழந்தைகள் பாதி விளையாட்டிலேயே ஆட்டத்தைக் களைத்து விடுவதைக் காணலாம்.

பொதுவாகக் குழந்தைகள் கலை நுணுக்கத்தோடு மணல் வீடுகட்டி விளையாடுதல் என்பது காலங்காலமாக இருந்து வரும் விளையாட்டு. சிற்றில்கட்டிச் சிறுகுடித்தனமே நடத்துவது என்பது 'கூட்டாஞ்சோறு ஆக்குதல்' என்ற கிராமிய விளையாட்டாக விளங்குவதைக் காணலாம். மணற்சோறு, மணற் குழம்பு, செங்கற் பொடிக் கூட்டு எனப் பாவனைச் சமையலும் இதில் அடங்கும். இப்படிக் கூட்டாகக் காமம் என்றால் என்னவென்று அறியாத பருவத்தில் இணைந்து விளையாடும் ஆண், பெண் குழந்தைகள் உணர்ச்சிவசப்படுவது இயற்கை.

பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையின் பதினேழாம் திங்களில் நிகழ்வது இப்பருவத்து நிகழ்வுகள் அருமைக் குழந்தையின் அழகு நடை காண வருக வென்று அழைப்பதும் குழந்தையோடு வெண்ணிலவு விரைந்து வந்து விளையாட அதனை வருக என வேண்டுவது முந்தையப் பருவத்துச் செய்திகள் அதைப்போல, பாட்டுடைத் தலைவனைப் பெண் குழந்தைகள் தங்கள் சகதோழர்களாக விளங்கும் ஆண் குழந்தைகளைத் தாங்கள் கட்டிய மணல் வீட்டினைச் சிதைக்க வேண்டாம் என்று சொல்லுவதற்காக, விளையாட்டிற்கு வர வேண்டாம் எனத் தடுப்பர். உடனே பொய்க் கோபம் கொண்ட ஆண்பிள்ளைகள் பெண்கள் கட்டிய மணல் வீட்டைக் களைப்பர். பிள்ளைத் தமிழில் இச்செயல் பாட்டுடைத் தலைவன் மேல் ஏற்றப்பட் டு அவனைப் பார்த்து அருள்கூர்ந்து வாராதே வாராதே என மருட்சியுடன் கூறுவது இப்பருவத்துப் பாடல்களின் தனிச் சிறப்பாகும்.

பெற்றோரும் உற்றாரும் புகழ்ந்து பாடுவதாக அமைந்த பருவங்கள் முன்னே அமைய இப்பருவம் மட்டும் சிறுமியர் பாடுவதாக அமைந்திருப்பது இதன் தனித்தன்மையாகும்.

தீமைகளை ஒறுத்து அளிக்கும் இறைவனாகிய நீ குழந்தைகளாகிய சிறுமியர் நாங்கள் கட்டி விளையாடும் தீதற்ற இச்சிறு வீட்டை அழித்திட வேண்டாம் எனப் பாட்டுடைத் தலைவனின் பல அருளிச் செயல்களைச் சொல்லிப் போற்றிப் பாடுவதுதான் இப்பருவத்தின் பொருண்மை.

## சிறுபறைப் பருவம்

இது பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையின் பத்தொன்பதாம் திங்களில் நிகழ்வதாகப் பாடப்பெறுவது. தமிழ்ச் சமூகத்தில் எந்தவிதமான இன்பதுன்ப நிகழ்வுகளில் முக்கிய இடம்பெறுவது முரசு ஒலியாகும். சங்க காலத்தில் மணமுரசு, கொடை முரசு, போர் முரசு என முரசு அறையும் முறையைக் காண்கிறோம். நையாண்டி மேளம், சிறப்புச் செய்தியைத் தெரிவிக்கவும், திருவிழாக் காலத்தில் விழா நிகழ்வுகளை வெளிப் படுத்தவும் பயன்பட்டு வருகின்றது. மேலும் கரகாட்டத்திற்கு இதுவே அடிப்படை இசை. இறப்புச் செய்தியைத் தெரிவிக்கும் போது சாவு மேளமாகவும் விளங்குகிறது. மங்கள மேளம் எனக் கோயிற் பூசை மற்றும் திருமணம் போன்ற இல்லச் சடங்குகளைத் தெரிவிக்கத் தோற் கருவிகள் இன்றும் நடைமுறையில் இருப்பதை நாம் அறிவோம். அதுபோல துயர்களையும், இன்னல்களையும், தீமைகளையும் வெல்லும் நோக்கில் பறையடித்து இன்பமூட்ட உற்றார் உறவினர் வேண்டுவதே இப்பருவத்தின் சிறப்பியல்பு ஆகும்.

## நீராடற் பருவம்

பொதுவாக உடற்சுத்தம் என்பது காலைக் குளியலில் தான் உள்ளது என்பர். குளியலின் முக்கியத்துவம் கருதியே ஔவை கூட, 'சனி நீராடு' எனக் குழந்தைகளுக்கு வற்புறுத்திக் கூறுவதைக் காணலாம். சங்ககாலப் புலவன் முதல் இற்றைப் புலவன் பாரதி வரை பல புலவர்கள் நீராடுதலின் இன்றியமை யாமையைச் சுட்டியுள்ளனர். 'பாவை நோன்பு' என்பது கூட தைத்திங்களில் நோன்பு ஏற்று நீராடுதலே என்பது சங்க இலக்கியம் கூறுகிறது. ஆண்டாள், மணிவாசகர் ஆகியோர் திருப்பாவை, திருவெம்பாவை ஆகிய நூல்களில் பெண்கள் கூட்டமாகக் கூட்டாக நீராடப் போகும் காட்சிகளை வருணனை யோடு கூறி யிருப்பதைக் காணலாம்.

புனிதம் என்ற நிலையைப் பஞ்ச பூதங்களில் நீரால் தான் செய்ய முடியும் என்பதாலேயே நீர்நிறைந்து ஓடும் ஆறுகள், குளங்கள் முதலியன புண்ணிய தீர்த்தங்களாகப் புகழப் படுகின்றன. இல்லறப் பெண்கள் அதிகாலையில் கதிரவன் உதயத்திற்கு முன்னே குளித்திட வேண்டும் என்பது தமிழ் மரபு. ஆகவே, 'குளித்தல்' என்ற ஒன்று குழந்தைகளுக்குப் பிறந்த பொழுதிலிருந்தே பழகித்தரப்படுவதாகும். அவ்வகையில் பாட்டுடைத் தலைவியாகிய குழந்தையை நீராட வேண்டுவதாக பாவனை செய்து பாடும் பருவமாக இப்பருவம் அமைகிறது.

## அம்மானைப் பருவம்

பெண்டிர் விளையாட்டில் அம்மானை ஆடுதல் என்பதும் ஒன்று. இது இல்லத்திலிருந்து விளையாடும் விளையாட்டாகும். சோழி, கழங்கு போன்றவற்றை இவ்விளையாட்டிற்குப் பயன்படுத்துவர். இதிற் கழங்கு என்பது மரத்தாலோ ஈயம் போன்ற பொருட்களாலோ செய்யப்பட்ட சிறிய உருண்டை வடிவம் எனக் கூறுகிறார் டாக்டர். கு முத்துராசன்[5] பந்து போன்று செய்யப்பட்டு உருண்டை வடிவுடைய காய்களை ஒன்றன்பின் ஒன்றாக எறிந்து கையால் பிடித்து விளையாடுவது இவ்விளை யாட்டின் விதியாகும். ०

உலா நூல்களில் பேதை அல்லது பெதும்பைப் பருவ மகள் உலாவரும் தலைவனைக் காண முற்படுவதற்கு முன்பு அம்மானை ஆடிக் கொண்டிருப்பர். அம்மானை கலம்பகம் என்ற சிற்றிலக்கிய வகையில் ஓர் உறுப்பாகவும் அமையப் பெற்றுள்ளதைக் காணலாம். மகளிர் மூவர் ஒன்றுகூடித் தம் தலைவனைக் குறித்து மூவருள் ஒருத்தி வினா எழுப்ப மற்றொருத்தி அதற்கு விளக்கம் சொல்ல, வேறொருத்தி இவ்விருவர்க்கும் விடைகூறி அம்மானைக் காய்களை மேலே எறிந்து ஆடி மகிழ்வர். இவ்வாறு அமையும் பாடலில் இறுதிச் சீரில் அம்மானை எனும் சொல் மகுடமாக அமைந்திருக்கும்.

பதினேழாம் நூற்றாண்டுக்குப்பின் 'அம்மானை' பெண்களுக்குரிய ஓராடல் வகை எனும் நிலைமாறி கதையமைப்பை இசையோடு கூறும் இலக்கியம் எனும் நிலை தோன்றியது. சிலம்பிலுள்ள அம்மானைப் பாடல்கள், திருவாசகம் காட்டும் திருவம்மானை ஆகிய பாடல்கள் இவ்வம்மானை என்பது நாட்டுப்புற இலக்கியத்திலிருந்து செம்மொழி இலக்கியத்திற்கு வந்திருக்க வேண்டும் என்பதைக் காட்டும் படியாக அமைந்துள்ளது.

பிள்ளைத் தமிழ் இலக்கியத்தில் பாட்டுடைத் தலைவியின் அருமை பெருமைகள் இவ்வம்மானைக்குப் பொருண்மையாக அமைந்து கேட்போர்க்கு மகிழ்ச்சியைத் தூண்ட வல்லனவாக அமைந்துள்ளதைக் காணலாம்.

**ஊசல் பருவம்**

ஊசல் எனினும் ஊஞ்சல் என்னும் ஒரு பொருளே. சோலையில் அல்லது தோட்டத்தில் அல்லது முன்றிலில் ஊஞ்சல் அமைத்து அசைந்தாடுவது என்பது இளையோர் முதல் முதியோர் வரை உள்ள எந்த வயதினருக்கும் மகிழ்ச்சியை ஊட்டுவது ஆகும். அதிலும் குறிப்பாக வாலைப்பருவத்துக் கன்னியர்க்குத் தங்கள் தோழியரோடு ஊஞ்சல் ஆடுதல் என்பது பேருவகையை அளிப்பதாகும்.

அகநானூற்றில் 'வளைந்த கழியிலுள்ள தாழை விழுதாலாய கயிற்றால் புலிநகக் கொன்றையின் உயர்ந்த கிளையில் கட்டித் தொங்கவிட்ட ஊசலில் ஆடியும் என்னும் செய்தி காணப்படுகிறது.[10] சிலப்பதிகாரத்தில் ஊசல் பற்றி மூன்று பாடல்கள் சுட்டுகின்றன.[11] சிலப்பதிகாரத்தில் பிறிதொரு இடத்தில் கொடுஞ் சொல்லினையுடைய யவனரது வளமிக்க நாட்டினையும் இமயமலையினையும் ஆண்டு போர்க்குரிய வில், கயல், புலி ஆகியவற்றை உடையானாய்க் குடிகளைப் புரக்கும் தலைவ னாகிய சேர மன்னனது பண்புகளைப் புகழ்ந்து, மின்னலைப் போன்ற நுண்ணிடை துவள ஊஞ்சல் ஆடுவோம். வெற்றி பொருந்திய வில் இலக்கினைப் புகழ்ந்து ஊஞ்சல் ஆடுவோம் என்ற ஒரு குறிப்பு உள்ளது.[12]

இறைவனை ஊஞ்சலில் வைத்து ஊஞ்சல் ஆட்டிவித்து அடியார்க்கு மகிழ்ச்சியூட்டுவதும், மனக்கவலை தீர முதியோர் ஊஞ்சலில் அமர்ந்து ஆடுவதும், மணமக்களை ஊஞ்சலில் அமரச் செய்து பெண்களும், ஆண்களும், கூடி நகைச்சுவையோடு ஊஞ்சலை ஆட்டி அவர்களுக்கு இடையே நெருக்கத்தை ஏற்படுத்தும் படியான சடங்கு செய்வதும், இன்றும் திருமணத்தில் ஓர் அங்கமாக இருப்பதைக் காணலாம்.

## சிற்றிலக்கியமும் பிள்ளைத்தமிழும்

முந்நூறுக்கு மேற்பட்ட சிற்றிலக்கிய வகைகள் தமிழ் மொழியில் தோன்றியிருந்தாலும். பிள்ளைத் தமிழ், அந்தாதி, உலா, கலம்பகம், தூது, பரணி, ஆற்றுப்படை, குறவஞ்சி, பதிகம், சதகம், கோவை போன்றனவே இன்றும் செல்வாக்குப் பெற்றுத் திகழ்கின்றன. இவற்றுள் 'தமிழ்' என்ற சொல்லைத் தன்னோடு

இணைத்துக் கொண்டு பெருமையுடன் விளங்கும் பிள்ளைத் தமிழ், தமிழ் இலக்கிய வகைகளுள் பலராலும் அறியப் பெற்ற ஒன்றாகும்.

ஒப்பற்ற இறைவனையோ, இறைவியையோ, இறைநேயர்களையோ, மக்களுள் மாண்புற்ற மன்னர்களையோ, வள்ளல்களையோ நாடு போற்றும் நல்லவர்களையோ, பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு, அவர்களைக் குழந்தைப் பருவத்தினராகப் பாவித்து, பத்துப் பருவங்கள் அமைத்து, அவற்றின் வழியே மேற்சொன்னோரின் செயற்கரிய செயல்களை எல்லாம் எடுத்தியம்பு முகமாகப் பாடப்பெறும் இலக்கிய வகையே பிள்ளைத் தமிழாகும்.

இப்பிள்ளைத் தமிழ் இலக்கியத்தின் வரலாறு நெடியது. தொன்மையுடையது. பொதுவாகச் சிற்றிலக்கியங்களின் இலக்கணங்களை எடுத்துரைக்கும் இலக்கணமாகப் பாட்டியல் விளங்குவதைக் காணலாம். பாட்டியல்களே பிள்ளைத் தமிழ் இலக்கியத்திற்கு முன்னுரிமை தருகின்றன. வெண்பாப் பாட்டியல் நவநீதப் பாட்டியல். சிதம்பரப் பாட்டியல், இலக்கண விளக்கப் பாட்டியல் பிரபந்த மரபியல் போன்ற பாட்டியல் நூல்கள் பிள்ளைத் தமிழ் பற்றிப் பேசுவதைக் காணலாம்.

பாட்டியல் நூல்களில் தொன்மைமிக்கதாகக் கருதப்படும் பன்னிரு பாட்டியல் 'மேதகு சாதகம் பிள்ளைப் பாட்டே' எனப் பிள்ளைத் தமிழை இரண்டாவதாகக் குறிப்பிடுகின்றது.[13] இதுபோன்றே பிரந்த தீபிகை, சதுரகராதியும் இரண்டாவது இடத்தை வழங்கியிருக்கின்றன.[14] இம்மூன்று நூல்களில் மட்டும் முதலாவதாய்க் காணப்படும். 'சாதகம்' என்னும் இலக்கிய வகை குழந்தை பிறந்த ஆண்டு, நாள், கிழமை, பக்கம், ராசி முதலியவற்றைக் கூறுவதாகும். அதாவது குழந்தையின் பிறப்புப் பற்றிய சதகம். அதனை அடுத்து வருவது பிள்ளைத் தமிழில் என விவரிக்கிறார் டாக்டர் கு. முத்துராசன்.[15]

அந்தாதி, கோவை, உலா, தூது முதலிய சிற்றிலக்கிய வகைகளையெல்லாம் ஒரோ வழித் தன்னேரில்லாத தலைமை சான்ற ஆண்டவனையும் அரச மரபினரையும், பெரு நிலக் கிழார்களையும் மையமாகக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளன. பிள்ளைத் தமிழ் இலக்கியம் மட்டுமே ஆண்டவன் முதல் அடியவர் வரை எல்லோரையும் போற்றி வீரவழி பாட்டுக்கான வழிவகை செய்வதில் பரந்து விரிந்த இலக்கிய எல்லையை யுடையதாகத் திகழ்கின்றது. மக்கள் இலக்கியமாகவும், வரலாற்றுக் கருவூலமாகவும், சமயச் சின்னமாகவும், தத்துவக்

குறியீடாகவும் இவ்விலக்கியம் விளங்குகிறது. எனவேதான் மற்ற சிற்றிலக்கிய வகைகளைக் காட்டிலும் இன்றும் இவ்வகை இலக்கியம் நாளும் தோன்றிக் கொண்டே இருக்கின்றது என்ற கருத்தை நல்குகிறார் டாக்டர் கு. முத்துராசன்.[16]

தொல்காப்பியர் காலத்திலேயே பிள்ளைத் தமிழுக்குரிய கரு இருந்ததை அறியமுடிகிறது. என்றாலும் அக்காலத்தில் தோன்றியதாக எந்த ஒரு பிள்ளைத் தமிழ் நூலும் இல்லை. சங்க கால, சமய கால இலக்கியங்களில் பிள்ளைத் தமிழுக்குரிய கூறுகள் காணப்படுகின்றன. அவற்றை இங்குப் பருவ அடிப்படையில் காண்போம்.

### காப்புப் பருவம்

தொல்காப்பியம் மாயோன், சேயோன், வேந்தன், வருணன் என்னும் நானிலத் தெய்வங்களையும் கொடிநிலை கந்தழி, வள்ளி எனும் தெய்வங்களையும் மக்கள் வாழ்த்தி வழிப்பட்டு வந்தததாகக் கூறுகின்றது.[17] பரிபாடலில் இன்று கிடைத்துள்ள இருபத்திரண்டு பாடல்களுள் ஆறு பாடல்கள் திருமாலின் சிறப்பியல்புகளையும், எட்டுப் பாடல்கள் செவ்வேளின் சீர்மைகளையும் எடுத்துரைக்கின்றன.[18] புறநானூறு, பாண்டியன் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறனைச் சிவன், திருமால், முருகன், வாலியோன் ஆகிய நால்வருடன் ஒப்பிட்டுப் பாடியுள்ளது.[19]

சிவன் முக்கண்ணன், நீலகண்டமுடையவன், திங்கட் உமையொரு பாகன்;[20] கண்ணியான்; அவன் மாலை கொன்றை; அவன் படை கணிச்சி; அவன் நாள் திருவாதிரை எனச் சிறப்பிக்கப் பெற்றுள்ளான்.[21]

திருமால் நீல நிறத்தான்; கையில் சக்கரம் உடையவன்; மார்பில் திருமகள், திருத்துழாய் மாலை கொண்டவன்; கருடக் கொடியுடையவன்; பாற்கடலில் அரவணையில் அறிதுயில் கொள்பவன்; அவன் நாள் ஓணம்; அவன் வேத முதல்வன்; அவன் ஞாலம் அளந்தவன் எனச் சங்க இலக்கியம் சிறப்பித்துக் கூறும்.

திருக்குறளில் கடவுள் வாழ்த்து அதிகாரம், நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு ஆகியவற்றின் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் திருமுருகாற்றுப் படை முதலியனவெல்லாம் காப்புப் பருவத்தின் கூறுகளை நினைவூட்டுகின்றன.

இடைக்காலம் சமய காலமாகத் திகழ்ந்தது. பன்னிரு திருமுறையும், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தமும் கம்ப ராமாயணமும், வில்லிபாரதமும் இதற்குச் சான்றாகின்றன.

குழந்தை பிறந்த முதல் வாரத்தில் தாய்மார்கள் இன்றும் குழந்தைகளுக்குக் காப்பணி விக்கிறார்கள். மேலும் நோயுற்ற குழந்தைகளைக் கடவுள் முன் கிடத்தி மஞ்சள் துணியில் நெல், அவரை, துவரை முதலிய தானியங்களை முடிந்து அக்குழந்தை யின் கையில் காப்பாக அணிவிப்பது இன்றும் வழக்கமாக உள்ளது. மேலே குறிப்பிட்ட பக்தி இலக்கியக் கூறுகளும் இவ்வுலக வழக்கும் பிள்ளைத் தமிழின் காப்புப் பருவத்திற்குத் தோற்றுவாய் எனக் கருத இடம் உண்டு.[22]

## தாலாட்டுப் பருவம்

தாலாட்டுப் பற்றிய செய்திகளைப் பழந்தமிழ் இலக்கண, இலக்கியங்கள் எங்கும் காண்பதற்கு இடமில்லை எனக் கூறுகிறார் டாக்டர் கு. முத்துராசன்.[23] ஆயின் குலசேகராழ்வார் இராமபிரானின் குழந்தைப் பருவத்தைப் பாடுங்கால் தாலேலோ எனத் தாலாட்டுப் பாடி அப்பிரானின் முன்னைச் சிறப்புகளை யெல்லாம் எடுத்துக்கூறி உறங்க வைக்கிறார்.[24] திருத்தொண்டர் புராணத்தில் சேக்கிழார் திருஞானசம்பந்தரின் குழந்தைப் பருவத்தைப் பாடும் பொழுது தாலாட்டுப் பருவப் போக்கில் அமையும்படியான பாடலில் பாடியிருப்பது காணத்தக்கது.[25] செங்கீரைப் பருவம் பெரியாழ்வார் யசோதை நிலையில் தன்னை உருவகித்துக் கொண்டு, அவர் வணங்கும் கண்ணபிரானைச் சேயாகக் கருதிக் கொண்டு அக்குழந்தையைச் செங்கிரையாடு மாறு பதினோரு பாடல்களில் வேண்டுகின்றார்.[26]

ஆற்றல் வாய்ந்த நரசிம்மன் வடிவம் கொண்டு இரணியனை வென்ற வெற்றி வீரனே! தேவர்களின் தலைவனான இந்திரன் தனக்கிட்ட சோற்றை உண்டு விட்டதால் பசியோடு மிகவும் சினந்துவர, அதனால் மேகங்கள் காற்றோடு கல்மாரி பொழிய, அவ்வேளையிலே கோவர்த்தனகிரியையே குடையாகப் பிடித்துப் பசுக்கூட்டங்களைக் காப்பாற்றியவனே! ஆண்மை பொருந்திய வீரனே! எனக்கு ஒருமுறை செங்கிரை ஆடி அருள்க! ஆயர்களின் காளை போன்றவனே! செங்கிரை ஆடுக! ஆடுக என அவர் வேண்டுவதாகப் பாடும் பாடல் சிறப்புடைய பாடலாகும்.[27]

திருத்தொண்டர் புராணத்தில் சேக்கிழார் திருஞான சம்பந்தரின் குழந்தைப் பருவத்தைப் பாடும் பொழுது அவர் செங்கீரை ஆடியதாகப் பாடியுள்ளார்.[28]

## சப்பாணிப் பருவம்

பெரியாழ்வார் தனது இன்னுயிராம் கண்ணனை சப்பாணி கொட்ட வேண்டிப் பாடிய பாடல்கள் பதினொன்றும்

இன்சுவைமிக்கன. மாற்றுக் குறையாத பசும்பொன்னால் செய்த பொன்மணிக் கோவையுடைய இடுப்பின்மேல் உள்ள மாணிக்கத்தைக் கொண்ட அணி சதங்கை ஒலி செய்யவும், பவளவாயில் முத்துப் பற்கள் ஒளிவீச, முன்னொரு காலத்தில் பூமியென மாவலி அரசனிடமிருந்து பெற்றுக் கொண்ட கை களினால் விரும்பிச் சப்பாணி கொட்டியருள்க என வேண்டியது ஈண்டு இதற்கு ஏற்ற சிறப்புறு சான்று ஆகும்.[29]

பதினோராந் திருமுறையில் இப்பருவப் போக்குள்ள பாடல் ஒன்று இடம்பெற்றுள்ளது.[30] திருத்தொண்டர் புராணத்தில் சேக்கிழார் ஞானசம்பந்தரின் குழந்தைப் பருவத்தைப் பாடும் பொழுது அவர் சப்பாணி கொட்டியதாக ஒரு பாடலைப் பாடியுள்ளார்.[31]

## முத்தப் பருவம்

பெருமாள் திருமொழியில் மருவு நின்திரு நெற்றியில் சுட்டி என வரும் பாடல் முத்தப் பருவத்திற்கான முன்னோடி எனக் கருதலாம். குலசேகர ஆழ்வார் திருமாலின் குழந்தைப் பருவத்தில் ஈடுபட்டு அத்தெய்வக் குழந்தையிடம் முத்தம் தருமாறு வேண்டுகிறார்.[32] திருத்தொண்டர் புராணத்தில்,

**பொருபுலிப் பார்வைப் பேழ்வாய்**
**முழைஎனப் பொற்கை நீட்டப்**
**பரிவுடைத் தந்தை கண்டு**
**பைந்தழைக் கைக்கொண் டோச்ச**
**இருசுடர்க் குறுகண் தீர்க்கும்**
**எழில்வளர் கண்ணிர் மல்கி**
**வாய்முத்தம் கொள்ள மாற்றி**[33]

என்ற பாடல் முத்தப் பருவத்திற்கான பக்தியிலக்கியக் குறிப்பு ஆகும். பிள்ளைத் தமிழுக்கான கூறுகள் காலங்காலமாக வெவ்வேறு நிலையில் இருந்துள்ளன என்பதற்கு இது ஒரு சான்றாகும்.

## வருகைப் பருவம்

பெரியாழ்வார் திருமொழியில் இப்பருவப் பாடல்கள் பதினொன்று இடம்பெற்றுள்ளன. இரும்புச் சங்கிலியானது சலார் சலார் என்று ஒலி எழுப்பவும், தொங்குகின்ற பொன்னால் செய்யப்பெற்ற கயிற்றோடு பொருந்திய மணிகள் ஒலிக்கவும் உண்டான மூன்று வகையான மதநீர் வடிய மெல்ல நடந்து வரும் யானை போலக் காலில் கட்டப்பெற்ற சதங்கை ஒன்றோ டொன்று மோதி ஒலி செய்ய இடுப்பில் மணிகள் பறைபோல்

முழங்க இங்ஙனம் சார்ங்கம் எனும் வில்லினைக் கையில் ஏந்திய குழந்தையாகிய கண்ணபிரான் இளநடை இட்டு வந்து எனக்கு இன்பம் வழங்க மாட்டானா" எனும் கருத்தமைந்த பாடல் இதற்குத் தக்க சான்றாகும்.[34]

சூழவரும் பெருஞ்சுற்றத் தோகையரும் தாதியரும்
காழியர்தம் சீராட்டே கவுணியர்கற் பகமே என்
றேழிசையு பலகலையும் எவ்வுலகும் தனித்தனியே
வாழவரும் அவர்தம்மை வருகவரு கென அழைப்ப

எனும் வருகைப் பருவம் சார்ந்த பாடல் திருத்தொண்டர் புராணத்தில் இடம்பெற்றுள்ளது.[35]

## அம்புலிப் பருவம்

இப்பருவம் சார்ந்த செய்திகள் சங்க இலக்கியங்களிலும், பிற்கால இலக்கியங்களிலும் காணப்படுகின்றன.

ஐய திங்கட் குழவி வருகென யான் நின்னை
அம்புலி காட்டல் இனிதுமற் றின்னாதே

என்ற கலித்தொகைப் பாடலடிகள்,[36]

முகிழ்நிலாத் திகழ்தரும் மூவாத் திங்கள்
பொன்னுடைத் தாலி யென்மகன் ஒன்றி
வருகுவை யாயின் தருகுவென் யாலென

என்ற அகநானூற்றுப் பாடலின் அடிகள்[37]

மறப்புலி யுரைத்து மதியங் காட்டியும்
நெந்தன ளாகி நுந்தையை யுள்ளி
பொடிந்தநின் செவ்வி காட்டெனப் பலவும்

என்ற புறநானூற்று அடிகளும்[38] அம்புலிப் பருவத்திற்குரிய கருவாக அன்றே திகழ்ந்தமையைக் காணலாம்.

பெரியாழ்வார் தம்மை யசோதையாகப் பாவித்து வானத்திலே விளங்கும் வெண்மதியை, நிலவே என அழைத்து கண்ணனாகிய தன் குழந்தையுடன் விளையாட வருமாறு அழைப்பதற்கு சாம, பேத, தான, தண்டம் என்ற நான்கு உத்திகளைப் பயன்படுத்தி வேண்டுகோள் விடுக்கிறார்.

சுற்று மொளி வட்டஞ் சூழ்ந்து சோதி பரந்தெங்கும்
எத்தனை செய்யிறு யென்மகன் முகம்நே ரொவ்வாய்
வித்தகன் வேங்கடவர்ண னுன்னை விளிக்கின்ற
கைத்தலம் நோவாமே யங்புலீகடிதோடி வா[39]

(பெரியாழ்வார். திருமொழி 1:4:3)

என்ற வரிகளின் விளக்கம் வருமாறு கவின் நிலவே! ஒளிமயமான மண்டலம் உன்னை எவ்வளவுதான் ஒளியூட்டி அழகு செய்தாலும், என் கனியமுத வாயுடைய அன்பு மகன் கண்ணன் திருமுகத்திற்கு நீ ஒப்பாக மாட்டாய்! உலகத்தார் வியந்து பாராட்டும் நற்குணங்களையுடையவனும் திருவேங்கட மலையில் கோயில் கொண்டுள்ளவனுமாகிய இவன் உனை ஓயாது அழைத்த வண்ணம் உள்ளான். உனை அழைத்த அன்பு மகனின் பைந்தளிர்க் கரம் பலவாறு அசைக்கப்பெற்றதால் அந்நோவால் அவன் வருத்த முறலாம். அவன் அவ்வாறு வருந்தாவண்ணம் மகிழ்வு கொள்ள விரைந்து நீ வருவாயாக என அழைப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### சிற்றில் இழைத்தல்

கலித்தொகையில்,

> சுடர்தொடி கேளாய் தெருவில் நாம் ஆடும்
> மணல் சிற்றில் காலில். சிதையா அடைச்சிய
> கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
> நோதக்க செய்யும் சிறுபட்டி[40]

என இப்பருவப் போக்குள்ள பாடலடிகள் இடம் பெற்றுள்ளதைக் காணலாம். நாச்சியார் திருமொழியில் பத்துப் பாடல்கள் சிற்றில் இழைத்துப் பற்றி வருவதைக் காணலாம்.

> பொய்யு மாமுகில் போல் வண்ணா உன்றன்
> பேச்சும் செய்கையும் எங்களை
> மைய வேற்றி மயக்கவும் முகம்
> மாய மந்திரந்தான் கொலோ
> நொய்யர் பிள்ளைக ளென்பதற்குன்னை
> நோவநாங்களு ரைக்கில்லோம்
> செய்யதாமரைக் கண்ணினா யெங்கள்
> சிற்றில் வந்து சிதையே லே[41]

என்னும் பாடல் சிறப்புடையதாகக் குறிப்பிடத்தக்கது.

### சிறுபறை முழக்கல்

சிறுபறை முழக்கல் பற்றிய சேதி நற்றிணையில் இவ்வாறாக இடம்பெறுகிறது.

> பெறுமுது செல்வவர் பொன்னுடைப் புதல்வர்
> சிறுதோள் கோத்த செவ்வரிப் பறையின்
> கண்ணகத் தெழுதிய குரீஇப் போலக்
> கோல்கொண் டலைப்பப் படீஇயர் மாதோ[42]

### சிறுதேர்ப் பருவம்

மரத்தாலான சிறிய தேரினை உருட்டி மகிழும்படிப் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையை வேண்டும் முகமாகப் பாவனை செய்து பாடுவது. பெற்றோரோ அல்லது பிறரோ, மடநடை பயிலும் பருவத்தாகிய குழந்தையைத் தனது நடைப் பயிற்சிக்கு உறுதுணையாக உதவும் பொருட்டுச் சிறுதேரினை உருட்டி மகிழச் செய்வர். குழந்தை வளர வளர தரையில் நடந்து செல்லுதலேயன்றித் தேர் முதலியவற்றின் மீது ஊர்ந்து செல்லவும் விரும்பும் இவ்விருப்பத்தை நிறைவேற்றி வைக்கும் பொருட்டுப் பெரியோர் தேர் முதலியவற்றை உருட்டி மகிழச் செய்வர். குழந்தையாகிய பாட்டுடைத் தலைவனின் சிறப்பியல்புகளை யெல்லாம் எடுத்துரைத்துச் சிறுதேர் உருட்டி மகிழுமாறு பாவனை செய்து பாடப்பெறுவதே சிறுதேர்ப் பருவம்.[43]

இப்பருவம் பற்றிய முன்னோடிய செய்திகளாகப் பின்வரும் குறிப்புகள் அமைகின்றன. பொன் போன்ற கால்களை யுடைய சிறுவர்கள் இல்லத்தின் முற்றத்தில் மூன்று கால்களையுடைய சிறிய தேரினை உருட்டி விளையாடுவர் எனும் குறிப்பு பட்டினப் பாலையில்,

> அகனகர் வியன் முற்றத்துச்
> சுடர்நுதல் மடநோக்கின்
> நேரிழை மகளிர் உணங்குணாக் கவரும்
> கோழி யெறிந்த கொடுங்காற் கனக்குழை
> பொற்காற் புதல்வர் புரவியின் உருட்டும்
> முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்

இடம்பெற்றுள்ளதாகவும்,

அன்றியும் சிறுவர்கள் சிறுதேர் உருட்டி விளையாடுவர் எனும் குறிப்பு கலித்தொகை பாடல் 81இல்,

> அரிபொலி கிண்கிணி யார்ப்போவா அடிதட்பப்
> பாலோ டலாந்த முலைமறந்து முற்றத்துக்
> காவல்தேர் கையின் இயக்கி நடை பயிற்றா
> ஆலமர் செல்வன் அயிசால் பெருவிறல்

என்ற பாடலும், அதுபோன்றே பெரும்பாணாற்றுப்படையில் 248-49ஆக அமைந்த வரிகளும்,

> தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த
> ஊரா நற்றேர் உருட்டிய புதல்வர்

குறுந்தொகை பாடல் 61ம்,

**தச்சன் செய்த சிறுமா வைய**
**மூர்ந்தின் புறாஅ ராயினுங் கையி**
**வீர்த்தின் புறூஉ மினையோர்**

ஐங்குறுநூற்று பாடல் வரி 66இல்,

**தேரொடு தளர்நடைப் புதல்வனை**

இடம்பெற்றுள்ளதைக் காணலாம்.

நீராடற் பருவம்

சிறுவர்கள் நீராடிக் களித்தல் பற்றிய செய்தி புறநானூற்றில்,

**ஊர்க்குறு மாக்க ளாடக் கலங்கும்**
**தாட்படு சின்னீர்க் களிறட்டு வீழ்க்கும்**
**ஈர்ப்புடைக் கராஅத் தன்ன வென்னை**[44]

என்ற குறிப்பின் வாயிலாக நீராடற் தொடர்பான செய்தியை அறிய முடிகிறது. தைத் திங்களில் நீராடல் சிறப்புடையதாகக் கருதப்படுகின்றது. இதனை,

**தாயருகர் நின்றுதவத்தைந் நீராடுதல்**[45]

எனப் பரிபாடலும்,

**நறுவீ யைம்பான் மகளி ராடுந்**
**தைஇத் தண்யாம் ..........**[46]

என ஐங்குறுநூறும்,

**நீ தையினீராடிய தவந்தலைப் படுவாயோ**[47]

என குறிஞ்சிக் கலியிலும்.

**தைஇத் திங்கள் தண்யகம் படியும்**[48]

என நற்றிணைப் பாடலும் பல்வகையாக எடுத்தியம்புகின்றன.

அம்மானைப் பருவம்

தொடக்கத்தில் அம்மானைப் பாடல் நாட்டுப்புறப் பாடல் வகையைச் சார்ந்ததாகவே இருந்திருக்க வேண்டும் என்பார் முனைவர் கு. முத்துராசன்.[49] சிலப்பதிகாரத்திலுள்ள (வாழ்த்துக் காதை)யில் இடம்பெற்றுள்ள அம்மானைப் பாடல்களும், திருவாசகத்திலுள்ள திருவம்மானைப் பாடல்களும் இதற்குச் சான்றாகின்றன.

'புறா ஒன்றிற்காகத் துலாத்தில் ஏறி, விண்ணவர் போற்றத் தன் உடம்பை அரிந்த மன்னன் யார்? தன் உடம்பினை அரிந்த

மன்னன் யாவரெனில் அரண்மனை வாயிலின் முன்வந்த பசுவின் பொருட்டுத் தன் மகன் மீது தேர்க்காலைச் செலுத்தி முறை செய்த வேந்தனாவன். அத்தகைய மன்னனுடைய புகார் நகரினைப் புகழ்ந்து அம்மானை பாடுக என்றும் திசையானைகள் எட்டும் அஞ்சி இமையாமல் பார்க்குமாறு இமய நெற்றியில் புலியினை எழுதியோன் எவன்? இமயமலையில் புலியைப் பொறிந்தோன் எட்டுத்திசைகளையும் தன்னுடைய குடை நிழலில் வைத்துக் காத்தவன் சோழ மன்னனாவான். அத்தகைய சோழ மன்னனுடைய புகார் நகரைப் புகழ்ந்து அம்மானை பாடுக. என்ற சிலம்பு வாழ்த்துரைக்காதை பகுதியை துணையாகக் கொண்டு அம்மானைப் பருவத்திற்கான தடையம் அன்றே உள்ளதாக எடுத்துக் கூறுகிறார் முனைவர் கு. முத்துராசன்.[50]

கலம்பக உறுப்புக்கள் பதினெட்டனுள் அம்மானை நான்காவது உறுப்பாக அமைந்துள்ளது. மூன்று பேர்கள் பாடிக் கொண்டே அம்மானைக் காய்களை வைத்து ஆடுவர் ஒருத்தி தலைவனைச் சிறப்பிக்க கதை அல்லது புராணச் செய்தி ஒன்று கூறுவாள். இரண்டாமவள் அதிலோர் ஐயத்தை எழுப்புவாள். மூன்றாமவள் இருவரும் ஏற்கக்கூடிய விடையினை வழங்குவாள். அவ்விடை சிலேடை நயத்துடன் அமையும். மூவரும் 'அம்மானை' எனும் சொல்லைச் சொல்லித் தத்தம் உரையாடலை முடிப்பர். உலா நூல்களிலும் அம்மானை இடம்பெறுவதுண்டு.

**ஊசற் பருவம்**

அகநானூற்றில் 'வளைந்த கழியிலுள்ள தாழை விழுதாலாய கயிற்றால் புலிநகக் கொன்றையின் உயர்ந்த கிளையில் கட்டித் தொங்கவிட்ட ஊசலில் ஆடியும் என்று கருத்து விளங்கும் படியாக தாழை வீழ்கயிற்றூசல் தூங்கி என்ற குறிப்புக் காணப்படுகிறது.[51] சிலப்பதிகாரத்தில் ஊசல் பற்றி மூன்று பாடல்கள் உள்ளன[52] (வாழ்த்துக் கதை) (23-25).

ஆகவே தொல்காப்பியம் தொடங்கி, சங்க இலக்கியங் களான நற்றிணை, புறநானூறு, ஐங்குறுநூறு, பரிபாடல், கலித்தொகை ஆகிய எட்டுத் தொகை நூல்களிலும், பத்துப் பாட்டிலும் சிலப்பதிகாரத்திலும் பிள்ளைத் தமிழ் தொடர்பான செய்திகள் விரவிக் கிடப்பதைக் காணமுடிகிறது.

அதுபோன்றே இடைக்கால பக்தி இலக்கிய நூல்களாகிய பெருமாள் திருமொழி நாச்சியார் திருமொழி, பெரிய திருமொழி, பெரியபுராணம், திருவாசகம் போன்ற நூல்களிலும் இவ்விலக்கியத்திற்கான கூறுகள் மிகுத்துக் காணப்படுவதை உணரலாம். பக்தி இலக்கிய காலத்தில்தான் பெரியாழ்வார்

போன்ற பெருமக்கள் தங்கள் அன்பிற்குரிய கடவுளர்களைக் குழந்தையாக உருவகம் செய்து கொண்டு, பிறப்பு, உருவ அழகு, தாலாட்டு, நிலா அழைத்தல், செங்கீரை, சப்பாணி, வாரானை, புறம் புல்குதல், அப்புச்சி காட்டுதல் முலையுண்ணுமாறு அழைத்தல் போன்ற பல்வேறு பொருண்மைகளில் பிள்ளைத் தமிழுக்கான வித்தினை வித்திட்டுள்ள அழகைக் காணலாம்.

## நாட்டுப்புற இலக்கியமும் பிள்ளைத் தமிழும்

பெண்ணுக்குரிய பட்டறிவுக் கல்வியில் தாலாட்டும் ஒன்று. திருமணம் கண்ட பெண் அவ்வுறவின் வரவாக வரப் பெற்ற மழலையினிடத்துத் தன் தாய்மையைக் காட்ட, பால் அமுது தருதல் இயற்கை தன் குழந்தை உலக அறிவு பெற்றுத் திகழவும், விழுமிய அன்போடு வாழவும் ஒரு தாயானவள், பண் பாட்டுப் 'பாசுரமாக விளங்கும் தாலாட்டை' ஏற்ற ஊடகமாகக் கொண்டு அப்பாடல்களின்வழி தான் எண்ணியதைக் குழந்தையின் அடிமனதில் பதியச் செய்வது என்பது இம்மண்ணின் மாண்பு ஆகும்.

பொதுவாக மக்கள் மனத்தில் எழும் எண்ணங்கள், ஏக்கங்கள், இலட்சியங்கள், நம்பிக்கைகள், வாழ்க்கைப் பாடுகள் என எத்தனையோ பொருண்மைகளை உள்ளடக்கியது தான் நாட்டுப்புற இலக்கியம். அந்த அந்த மண்ணின் பண்பிற்கேற்ப வளர்ந்து வளம் பெற்றதுதான் அவ்விலக்கியம். தொல் காப்பியத்திலேயே நாட்டுப்புற இலக்கியக் கூறுகள் பற்றிய செய்திகள் பதிவாகி உள்ளதைக் காணலாம். ஒரே கருத்தைத் திரும்பத் திரும்ப கூறுதல். ஒரே வகையான பெயரடைகள் மீண்டும் மீண்டும் வருதல், அடி இயைபு பழமொழி, விடுகதை, உவமை, உருவகம் முதலியன மிகுதியாக வருதல், கொச்சை சொற்கள், மருவுச் சொற்கள் போன்ற கூறுகள் மிகுதியாக இடம் பெறுதல் முதலியன நாட்டுப்புற இலக்கியத்திற்குரிய உத்தி களாகும். இவ்வகையில் நோக்கும் போது தமிழ் மொழியிலுள்ள பெரும்பாலான இலக்கியங்களில், ஏதாவது ஒரு வகையில் நாட்டுப்புற இலக்கியத் தாக்கத்தைக் காண முடிகின்றது. என முத்துராசன் கூறுவது எண்ணத்தக்கது.[53] 'டாக்டர் வி.ஐ. சுப்பிரமணியம் தமிழ் இலக்கிய வரலாற்றில் திருப்பு முனைகள் எனும் ஆங்கிலக் கட்டுரையில் நாட்டுப்புற இலக்கியம் இருந்து கொண்டேதான் இருக்கும். வரலாற்றில் நாட்டுப்புற இலக்கியம் இல்லாத இலக்கியம் இல்லை என்று அறுதியிட்டுக் கூறலாம் எனக் கூறியிருப்பதாக முனைவர் முத்துராசன் எடுத்துக் காட்டுவது சிந்திக்கத்தக்கது.[54]

மேலும், அவர் கூறும் மற்றொரு கருத்தும் இங்கு மனம் கொளத்தக்கது எனக் கூறுகிறார் முனைவர் கு. முத்துராசன். அதாவது இலக்கியக் கூறுகள் மக்கள் தம் பண்பாட்டினைப் போன்றே வழி வழி வந்தவையாக இருக்கலாம். அல்லது 2. பிற இலக்கியங்களினின்றும் பெற்ற இரவலாக இருக்கலாம். 3. அல்லது கருத்துகள் மட்டும் இரவலாக இருக்கலாம். 4. அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட இலக்கியங்களோ, அல்லது கருத்துகளோ இணைந்து புதுவகையாகவுமாகியிருக்கலாம் என்றும் வழிவழி வந்த இலக்கியக் கூறுகளுக்கு அடிப்படை நாட்டுப்புற இலக்கியமாகத் தான் இருக்க முடியும் எனக் கூறுவது ஈண்டுச் சிந்தனைக்குத் துணைசெய்யும்.

இவ்வகையில் பிள்ளைத் தமிழ் இலக்கியங்களில் நாட்டுப்புற இலக்கியத் தாக்கத்தை அரிய இடமுண்டு. தாலாட்டுப் பருவம், அம்மானைப் பருவம், ஊசல் பருவம் ஆகிய மூன்று பருவங்களும் நாட்டுப்புற இலக்கிய வகையைச் சார்ந்தவை ஆகும். இம்மூன்று பருவப் பொருளமைதியுள்ள பாடல்கள். தனித்தனியான நாட்டுப்புற இலக்கிய வகையாக வளர்ந்துள்ளன.

ஆகவே, பிள்ளைத் தமிழ் இலக்கியம் என்பது சமூக இலக்கியம். இவ்விலக்கியத்தின் ஆணிவேர் நாட்டுப்புற இலக்கியம். இதன் கருத்தாடல் என்பது சமூகத்தில் சிறப்புற்று விளங்கும் அறவோர்களும், அறிஞர்களும் அரசோச்சுவரும் மற்றும் இவர்களுக்கு மேலான கடவுளர்களும் ஆவர். இவ்விலக்கியத்தின் வீதி, பக்தி, தேசப்பற்று, சமூகப்பற்று எனலாம். இதன் பெருமை நல்ல இலக்கியச் செறிவு. இவ்வாறாக இவ்விலக்கியம் காலங் காலமாக வாழ்ந்து வந்த இலக்கியத்திலிருந்தே தனக்கு வேண்டியதைப் பெற்று இன்றைக்கும் பெருவிருட்சமாக வாழ் வாங்கு வாழ்ந்து வருவதைக் காணலாம்.

# நூலாய்வு

பிள்ளைத்தமிழ் அல்லது சேய்த்தமிழ் எனப் போற்றப்படும் சிற்றிலக்கியம் இலக்கிய வகைகளில் எல்லாராலும் அறியப்பெற்ற ஒன்றாகும். இத்துறையில் குமர குருபரர், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, கவிராசர் பண்டாரத்தையா, மார்க்கசகாயதேவர் மற்றும் வீரபத்திர கவிராயர் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

ஆண்பால் பிள்ளைத் தமிழ், பெண்பால் பிள்ளைத் தமிழ் என அமைந்த பிள்ளைத் தமிழ் நிலைகளில் இக்குமரமலைப் பிள்ளைத் தமிழ் ஆண்பால் பிள்ளைத் தமிழ் வகையைச் சார்ந்ததாகும். இந்நூலின் சிறப்புகளைத் தொகுத்துக் காண்பது இந்நூலாய்வின் நோக்கமாகும்.

## நூல் வரலாறு

இரணியர் வணிகர் குலத்தில் தோன்றிய சிதம்பரம் நாச்சியப்பன் தவத்தால் உதித்த கதிரேச வணிகனுக்குக் குழந்தைப் பேறு வேண்டும் என்ற காரணத்தை முன் வைத்துப் புல்வயல் எனப் போற்றப்படும் குமரமலை என்ற நகரில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் மீது வீரபத்திரக் கவிஞன் இயற்றியதே இக் குமரமலைப் பிள்ளைத் தமிழ் ஆகும். இதுபற்றிச் சிறப்புப் பாயிரம் பாடிய இராயபுரத்திலிருக்கும் மழவைத் திருவிளையாடற் சுப்பிரமணிய பாரதி அவர்கள் புத்திரர் திரு-இராமசுவாமி ஐயரவர்கள் குறிப்பிடும் பொழுது,

வணிகர்தம் மரபின மருவிய விரணியூர்ப்
பணிதருங் குலத்திற் பாங்கமர் வாழ்வாஞ்
சிதம்பரம் பெறுநாச் சியப்பன் றவத்தா
லிதம்பெற வருகதி ரேச வணிகன்
சந்ததி வேண்டித் தழைக்கும் புல்வயற்
குந்த மணிந்திடு குமரே சன்மேற்
பிள்ளைத் தமிழ்க்கவிப் பிரபந்தத்தைக்
கொள்ளைக் கவிக்குழாங் கொண்டுவப் பெய்தவும்
வேண்டிய வண்ண நீண்ட புகழ்சேர்

வள்ளற் பெருங்கவி வான்புக ழேந்தியின்
விள்ளற் கரியதாய் விளங்கு மரபினான்
திருவணா மலையா தீனம் விளங்க
வருபரம் பரையின் மயின்மலை மலையாக்
குன்றாக் குடியுள குன்றாக் குடிநகர்
நன்றா மடமதி னண்ணிய வித்துவான்
பகர்ந்திடு வீரபத்திரக் கவிஞன்
மகிழ்ந்திடு சுதனா மான்முத் துசாமி
புத்திரன் வீர பத்திரக் கவிஞன்
சுருதிய பொருளைச் சுருதியின் வழியே
சுருதியுட் கமலக் கண்ணக நிறீஇ
யெந்நல முந்தரு சொன்னலம் புணர்த்திக்
கன்ன லமுதெனக் கன்னம திற்கொளப்
பன்னினன் புலமையிற் றன்னின் மேலலாக்
சேயருள் கொண்டே சேயருள் செயவே[55]

இதே போன்று இந்நூலுக்குச் சிறப்புப்பாயிரம் பாடியருளிய ஸ்ரீ விஷ்ணுபுராண நூலாசிரியராகிய செந்நெற்குடி, சாமிக்குட்டி ஐயரவர்களென்று பெயர் விளங்கும் சுப்பராய ஐயர் அவர்களின் இளைய சகோகரர் வீமகவிராயர் அவர்கள் இதனை இன்னுஞ் சற்று வலியுறுத்திக் காட்டுவதைக் காணலாம்.

வைசியர் குலத்தின் வந்தவ தரித்தோன்
கதிரைமா நகரிற் கண்ணிய முதல்வன்
றன்பேர் 'தாங்கு சதிருடை யறிஞன்
மகிதலந் தன்னின் மகப்பே றொடுமிகு
நிதியினை யருளு நின்மல மூர்த்தியாம்[56]

மேற்சொன்னக் கருத்தை வலுவாக நிலைநிறுத்துவதற்கு இந்நூலாசிரியரின் மாணக்கரில் ஒருவராகிய கிருஷ்ணய்யர் அவர்களது சாற்றுக்கவி கூறுவது ஈண்டு எண்ணத்தக்கது.

துதன பதிக்குமிருந் தனபதியா யெஞ்ஞான்றுஞ்
செல்வ மோங்க
வருங்குணவான் கதிரேச வணிகனெனத் திருநாமம்
வனை வள்ளற்கே
புத்திரப்பே றுண்டாகி வாழையடி வாழையெனப்
புவியின் வாழச்
சித்திதருங் குமரமலைக் குகன்மேற் பிள்ளைத் தமிழைச்
செய்த ..............[57]

மேற்கண்ட சிறப்புப் பாயிரங்களின்படி ஒருவருடைய வம்ச விருத்திக்காகப் பிள்ளைத் தமிழ் பாடும் மரபு இருந்திருக்கிறது

என்பதை அறிய முடிகிறது. இத்தகைய காரணத்திற்காக எழுந்த நூல்கள் மிகச்சிலவே இருக்கலாம். இதுபற்றிய பதிவுகள் அதிகம் கிடைக்கப்பெறாததால் கிடைத்த அளவில் இந்நூலே ஒரு தக்க சான்றாக அமைகிறது.

குமரகுருபரர் போன்ற பெரும்புலவர்கள் தங்கள் இறை நேயத்தையும் தமிழ்மொழியிடத்து அவர்கள் கொண்ட காதலையும் வெளிப்படுத்த ஏற்ற களமாக இப்பிள்ளைத் தமிழைப் பயன்படுத்தியுள்ளனர். மன்னர் பெருமை, நிலக் கிழாரின் கொடைச்சிறப்பு இறைவனின் அருளிச்செயல் போன்ற மாண்புடைக் காரணங்களுக்காகப் பல பிள்ளைத் தமிழ் நூல்கள் எழுந்துள்ள நிலையில், இந்நூல் தனக்கென ஒரு கருத்தைக் கொண்டுள்ளதைக் காணமுடிகிறது.

## நூலாசிரியர் வரலாறு

இந்நூலாசிரியர் பெயர் வீரபத்திரக் கவிராயர் ஆவார். இவருடைய தந்தையார் முத்துச்சாமிக் கவிராயர். இவரது பாட்டனார் வீரபத்திரக் கவிராயர். இவர்கள் பரம்பரை புகழேந்தி புலவர் பரம்பரையாகும். நளவெண்பா பாடிய புகழேந்தி புலவர் வேறு; இவர் வேறு. இப்புலவர் பெருமகனார் தம் பாட்டனார் குன்றாக்குடி. திருவண்ணாமலை ஆதினமடத்து வித்துவான் ஆவார். தந்தையைப் பின்பற்றி இவரும் அவ்வாதீனப் புலவராக விளங்கியுள்ளார், என்பதோடு தந்தையுடனே சென்னை இராயபுரத்தில் வாழ்ந்து வந்திருக்கிறார் என்பது முதற்பதிப்பாக 1909-இல் வெளிவந்த அச்சு நூலின் முகப்புரையில் இருந்து அறியலாம்.

இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் தந்த இந்நூலாசிரியரின் மாணக்கரில் ஒருவரான பஞ்சாபகேச ஐயர் அவர்கள் தன் ஆசானைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது,

மஞ்சுலாங் குமர மலையினின் மேவுங்
குஞ்சரி மருவுங் குமரே சன்மேற்
றென்னுறும் பாண்டி தேய மதிலார்
மன்னில வளமும் வாய்ந்த பொற்பதியாங்
குன்றாக் குடியிற் குன்றாக் குடியான்
மன்புக ழேந்தி வங்கிஷத் துதித்தே
யியலிசை நாடக மென்னுமுத் தமிழு
நயமுறு நாற்கவி நன்குறப் பயின்றும்
பற்பல நூல்கள் பாங்குற வியற்றியும்
விற்பன ரெவரும் விம்மித முறவே
நலமிகும் புலவர் நாமல வெனவும்

புலவர் சிகாமணிப் புங்கவ னெனச்சொல்
பாவலன் வீரபத்திரக் கவிஞன்
ஓவருந் தவத்தா லுதித்தருண் முத்துச்
சாமிக் கவிஞன் சந்ததி விளங்கி
மாமிக் கோங்க வந்திடும் வீர
பத்திரக் கவிஞன்[58]

மேற்படி வரிகளில் தன் ஆசானைப் **புலவர் சிகாமணி** எனவும் **புங்கவன்** எனவும் **பாவலன்** எனவும் **விற்பனன்** எனவும் பாராட்டுவதைக் காணலாம்.

வீமகவிராயர் இந்நூலாசிரியரைப் பாராட்டும்பொழுது,
குன்றைமா நகரிற்குலவிய திருவார்
அண்ணா மலையா தீனத் தமர்ந்திடு
தலைமைப் புலவர் தங்குல மதனின்
மகுடமென் றோங்கி வந்திடு புலவன்
புகடனை யேந்து புகழேந் தியென்னும்
பெருந்தமிழ்ப் புலவனைப் பேசுதன்குலத்தின்
முதல்வனாக் கொண்டு விளங்கி முதல்வன்
வீரபத் திரனென வியற்பேர் பெறு
மருங்கவிப் புலவன்[59]

கோட்டையூர் மீனாட்சி சுந்தரமய்யரவர்கள் புத்திரர் திரு. சுப்பையர் நூலாசிரியரை,

'வெள்ளமுத தியிற்கவர்ந்த வெழிலியெனக் கவிபொழியு
மேன்மையாளன்
தெள்ளமுதத் தினுமிகுந்த மதுரமுற்ற தெனப்புலவர்
செவிவாய்த் தேக்கி
யுள்ளமுதத் தொடுபுகழச் சிறந்தபிள்ளைத் தமிழ்பாடி
யபர்ந்தா னன்றே'[60]

எனப் பாராட்டுவதைக் காணலாம்.

### நூற்பயன்

பொதுவாகத் தமிழ் இலக்கியத்தில் நூற்பயன் பற்றிக் கூறுவது பக்தி இலக்கியக் காலத்தில் தோன்றியது எனலாம். சங்கப் பாடல்களில் இச்செய்யுளைக் கற்பதால் இன்னபயன் ஏற்படும் என்று கூறும் மரபு இல்லை. சங்கம் மறுவிய காலத்திலும் இது குறித்த குறிப்புகள் கிடைக்கப்பெறவில்லை.

ஆயின் மூவர் தேவராத்தில் ஞானசம்பந்தர் தேவாரம் நூற்பயன் பற்றிப் பல குறிப்புக்களைத் தருகின்றது. நூலாசிரியரே இதன் பயன் இன்னது என்பதைத் தெளிவுபடுத்திக் கூறும்

நிலையைக் காணமுடிகிறது. தேவாரத்திற்குப் பின்னாள் எழுந்த பெரும்பாலான நூல்கள் நூற்பயன் பற்றிக் கூறுவதைக் காணமுடிகிறது. தலபுராணங்கள், புராணங்கள், கவச நூல்கள் முதலியன இந்த மரபைப் பின்பற்றி எழுந்துள்ளன எனலாம். அவ்வகையில் குமரமலைப் பிள்ளைத் தமிழ் நூலாசிரியரும் நூற் பயன்பற்றி நான்கு பாடல்களில் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

குலங்கள் தோறும் நிறைந்த நீர் நிலைகளில் எல்லாம் ஒரு கதிரவனின் பல தோற்றம் புலப்படுவது போல, அகண்ட பரபிரம்மமானது ஒவ்வொரு உயிரிடத்து அதன் உடம்பாய் விளங்குவதுபோல அஃதாவது வரையப்பட்ட ஓவியங்கள் தோறும் பல்வேறு உருவங்கள் காணக்கிடப்பது போல அவ்வுயிரின் மேவிய அருளாய் பிரமமாய் முருகன் தாயாய் விளங்குவான் என்ற அரிதற்கரிய செய்தியையும் முருகப் பெருமானின் பன்னிரு செவிகள் தோறும் பன்னிரு செங்கதிர்த் தோற்றமாகப் பன்னிரு பொற் குண்டலங்கள் விளங்குகின்ற தன்மையும், அவனது பன்னிரு பொன்மலை ஒத்த உயர்ந்த தோள்களும், மாமணி வாகுவளையம் அணிந்து விளங்குகின்ற தன்மையும், பன்னிரு கற்பகக் கைகளும் பன்னிரு திண்டைக் கருவிகளைக் கொண்டு சமர் செய்வான் என விளங்கும் தன்மையும் பன்னிரு கண்மலர்களைக் கொண்ட மலர் முகம் பன்னிரண்டும் கருணை பூந்து விளங்கும் தன்மையுடையன எனவும், பன்னிரு தாமரைத் திருவடிகளும் வீரக் கழலணிந்து விளங்க வல்லன எனவும் அவ்வகையில் அவன் கோமான் எனவும் கேட்டது தரவல்லவன் என்பதை உணர வைக்கும் பயனைச் செய்ய வல்லது இந்நூல். அது மட்டுமல்லாது,

'பைந்தமிழ்ப் பிள்ளைக் கவிப்ர பந்தந் தன்னைப்
பாருலகின் மன்பதையாய்ப் பிறந்தோர் தம்முட்
சிந்தையுறக் கற்றோருங் கேட்போர் தாமுந்
செல்வமொடு நன்மகப்பே றுடைய ராகி
நிந்தையறப் பிணியகன்று பகையும் வென்று
நிகழிந்தர போகமுந்துய்த் தெவரும் போற்றச்
சந்ததமு மழியாத ஞான மோங்கிச்
சாயுச்ய பதந்தனையே சார்வார் மாதோ'[61]

என்ற வரிகளின் வாயிலாக ஒவ்வொரு உயிரும் கடவுளுடன் ஐக்கியப்படுவதோடு இவ்வுலகில் வாழும் வரை நிறைந்த செல்வமும் வளமான ஆரோக்கியம் கூடிய உடல் நிலையும் நல்ல கல்வியறிவும், குழந்தைச் செல்வங்கள் நிறையப் பெற்ற மனையறமும், விண் உலகத்து வேந்தன் இந்திரனைப் போல எல்லா வகையான இன்பமும் நிறையப் பெற்று மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வர். மறுபிறப்பு அற்ற வாழ்க்கையினைப் பெற்று

உம்பர் உலகத்தில் உவகையில் திளைத்து இருப்பர். இறைவனுக்கு அனித்தியமாக இருந்து மக்களால் வணங்கப்பெறுவர். அதற்கான அருள்பாலிப்பு இந்நூலை கற்றோர்க்கும், செவிமடுத்துக் கேட்போர்க்கும் கிடைக்கப்பெறும் என ஆசிரியர் நூற்பயனைத் தெளிவுபடுத்துகிறார்.

## தல வரலாறு

திருப்புல்வயல் என்னும் திருப்பதி சோழ வளநாட்டில் புதுக்கோட்டையை அடுத்துள்ள தலம். அங்கேயுள்ள மலைமேல் முருகக் கடவுளுக்கான ஆலயம் ஒன்று அமைந்துள்ளது. இத்தலத்தைச் சுட்டி அருணகிரிநாதர் அருளிய திருப்புகழும் ஒன்றுள்ளது என்பர். இத்தலம் சோணாட்டிலுள்ளது என்பதற்கு சதக நூல்வழி அறியலாம்.

மாடமிசை யன்னக் கொடிந்திறன்கொள் சோணாடு
வாழவந் திடு முதல்வனே (செய்.51)

வானாடு புகழுமொரு கோணாடு தழைய லிவண்
வந்தவ தரித்த முதலே (செய். 60)

மதிலுடன் கோபுரமும் விவியும் புடைசூழ
மருவுகோ ணாட்டதிலனே (செய். 68)

என்ற குறிப்புகளின் வழி இத்தலச் சிறப்பை உணரலாம்[62]

மலைமீதிற் கோயில் கொண்டு அருளும் முருகனுக்குக் குமரன் அல்லது குமரேசன் என்ற பெயர் அமையக் காரணம் பற்றிக் குமரேச சதகம் தரும் குறிப்பு ஈண்டுச் சிந்திக்கத்தக்கது. அதுவருமாறு:

குமரேசன் : இது குமரனாகிய ஈசன் என இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. குமரன் என்பது குரன் எனக் குறுகி நின்றது. குமாரன் (கு+மாரன்) மன்மதனை அழகினால் குற்சிதமாகச் செய்பவன். குறுகுற்சிதம் - அற்பம்.

குமர + ஈசன் : குமரேசன் என உம்மொழி குசைந்தி எனும் என பெயர் விளக்கம் தருகிறாய்.

குமரேச சதகம் பதி: கவ நமச்சிவாய முதலியார் தமிழ்க் கடல் ஆபிஸ், சாந்தோம் சென்னை, 1932.

## அவையடக்கப் பாடலும் கவிராயரும்

நூலுக்கு அவையடக்கம் பாடுதல் என்பது ஒரு மரபு. கற்றவர் கூட்டத்தில் புலனடக்கத்துடன் இருப்பது என்பது ஒரு வகையான மரியாதை. தன்னை விஞ்சியவர் இல்லை என்ற

ஆணவம் எழும்போது அது மும்மலமாய் விரிந்து அவனையே அழித்து விடும் என்பதே ஆன்றோர்கள் கருத்து. ஆகையின் படைப்பாள னாக விளங்கும் கவிஞன் அவைக்கு வணக்கம் தெரிவிப்பதோடு அடக்கத்துடனும் நடந்து கொள்ள வேண்டும் என்பது எழுதாச் சட்டம். அவ்வகையில் கவிஞர் அவையடக்கம் புலப்படுத்தும் போது தனது புலமைத் திறமும் வெளிப்படும்படி இசைத் திருப்பது படித்து இன்புறத்தக்கது.

கவிஞனின் பாடுபொருளை அன்றி அவர்தம் கவிதையின் கண் மறைந்துள்ள யாப்பை யாரும் சுவைக்க விரும்பார். அது எவ்வாறு எனில் தேனை விரும்பும் மாந்தர் தேனடையைத் தேடி அலைவதில்லை. இந்திரன் மகளாம் தெய்வயானையை மணந்து பின் மான் வயிற்றில் பிறந்து வேட்டுவக் குடியில் சிறந்து வளர்ந்த வள்ளியின் வளைக்கரம் பற்றிய புல்லைநகர் எழுந்தருளிய பெருமகனாம் முருகப் பெருமானின் புகழ்பாடும் காரணத்தால் இக்கவி, மக்களால் ஏற்றுக் கொள்ளப்படுமேயன்றி எளிய இக்கவிஞனின் புகழ் நினைந்தன்று என்று 'ஒருமையுள் ஆமை போல் ஐந்தடக்கி'க் கவிஞர் பாடியுள்ள அவையடக்கப் பாடல் நினையத் தகுந்தது. நம்மை நினைக்கச் செய்யும் கவிஞரின் வரி வருமாறு:

தேன்றுளிக்குங் கற்பகமா ரிறைவேண்டக் குஞ்சரிதோள்
சேர வேட்டு
மானகட்டி னுதித்திழிஞர் மனைவளர்கன் னியைவலிய
வாஞ்சித் தேனற்
கானினுற்றார் புலாங்கிசா மணியாமிந்
நூற்குரிய கடவு ளென்றால்
நானியற்றிப் புன்கவிகள் கவியெனத்தா
நயவாரோ நாவல் வோரே (அவையடக்கம்)

என பாடியுள்ளார்.[63]

**நூல் நயம்**

கவிஞனின் உள்ளக் கிளர்ச்சியில் எழுந்த சிந்தனைகள் மொழியிற் தோயும் போது அது படைப்பாவது மட்டுமன்றி, கவிஞனின் உணர்ச்சிக் கூறுகளான சொற்கட்டுகள் பாறை அடுக்குகள் போலப் படிந்து கிடக்கும். பாறையை உளி வைத்துத் தட்டினால் ஒவ்வொரு இடத்திலிருந்தும் அதன் இறுக்கத்திற்கு ஏற்றார் போல இனிய ஓசையைப் பலவண்ணங்களில் எழுப்புவது போலக் கவிஞனின் படைப்பை நுகரும் படிப்பாளன் உள்ளத்தில் அக்கவிஞனின் படைப்பிற் காணும் செம்மாந்த சொற்கட்டுகள் இலக்கிய நயமாக உணரப்பெற்றுப் புது விதமான உணர்ச்சிகளை

ஏற்படுத்தி அவனை மகிழ்விக்கும். இதனையே படைப்பின் சுவை என்றும் படிப்பாளனின் ரசனை என்றும் போற்றுகிறோம்.

> எல்லாக் கவிஞர்களுக்கும் சொல்லாட்சி என்பது கவிதை யியற்றத் தேவையான பொதுக்கூறு. அதிலும் குறிப்பாகத் தெய்வீகத் தொடர்பான பொருண்மையை எடுத்துக் கூறும்போது இயல்பான சொல்லாட்சி அமைதலே சிறப்புடையதாக இருக்கும்.
>
> தெய்வீக சொல்லாட்சி அமையப் பெறவேண்டு மென்றால் அக்கவிஞன் இறைஉணர்வு உடையவனாக இருத்தல் வேண்டும். தெய்வீகக் கவிஞரான திருஞான சம்பந்தர் இயல்பாகவே இறைவுணர்வு மேலோங்கப் பெற்றவர் என்பதனால்த்தான் அவர் கவிதையில் சொல்லாட்சிகள் இசைப் பிரவாகமாகத் திகழ்கின்றன. அதுவே குமரகுருபரர் பாட்டில் சந்தத்துள்ளளாக விளங்குகிறது. அருணகிரியின் தமிழிற் திருப்புகழாக மிளர்கின்றது. கவிஞர் வீரபத்திரக் கவிராயரின் குமரமலைப் பிள்ளைத் தமிழில் பயின்றுவரும் சொல்லாட்சிகள் குமரமலைக் குன்றில் எழுந்தருளி யுள்ள செவ்வேளின் திருவடி போற்றும் வண்ணத் துதிகளாக அமைந்துள்ளன.

தமிழில் முருகப்பிரானுக்குத்தான் அதிகமான பிள்ளைத் தமிழ்கள் காணப்படுகின்றன. ஒவ்வொரு, பிள்ளைத் தமிழும் ஒவ்வொரு வகையில் சிறந்து விளங்கும். குமரகுருபரர் இயற்றிய முருகன் மேல் அமைந்த பிள்ளைத் தமிழில் முருகனது தொன்மை விளங்கும். வீரபத்திரக் கவிராயர் இயற்றிய இந்நூலில் முருகனின் அருட்தன்மை விளங்கும்.

கவிராயர் நூறு பாடல்களில் அமைத்த இப்பிள்ளைத் தமிழ், பருவம் ஒன்றுக்குப் பத்துப்பாடல் பெற்று இலங்குகின்றது. இப்பாடல்களுக்குச் சுவை கூட்டக் கவிராயர் ஒரு உத்தியைக் கையாளுகிறார் ஒவ்வொரு பருவத்தில் 1 முதல் 5ஆம் பாடல் வரை ஒருவகை மகுடமும், 6 முதல் 9 வரை பிறிதொரு வகை மகுடமும் இறுதிப் பாடலான பத்தாம் பாட்டிற்குத் தனி மகுடமும் என்ற வகையில் நூலை அமைத்துள்ளார்.

பிள்ளைத் தமிழ் இலக்கியத்தின் தொடக்கமாக விளங்குவது காப்புப்பருவம். மூத்த கடவுள்; முதற் கடவுள்; வேண்டியதை யார்க்கும் நல்கும் இளங்களிறு. இளஞ்சிறார் முதல் முதிர்ந்த வயதுடையோர் வரை விதந்து போற்றும் பேற்றினைப் பெற்ற கடவுள். செய்யும் காரியத்தில் ஏதேனும் குற்றம்

குறையிருப்பின் அவற்றை அகற்றி அக்காரியம் தடையின்றி நடைபெற நல்லாசி அருளும் தன்மை பெற்ற கடவுள். சிறுவர் விரும்பி உண்ணும் அப்பம், பொரி, அவல், கடலை மோதகம் போன்ற தின்பண்டங்களைத் தனக்கு ஏற்ற படையலாக ஏற்கும் பிள்ளைக் கடவுள் - ஞானவேழம்.

அத்தகைய கடவுளை இந்நூலாசிரியர் பிறிதொரு கோணத்தில் சிந்தித்து, நினைந்து பாராட்டுகிறார். கயிலை மலையைக் கைகளால் பெயர்த்த இராவணனைத் தன் ஒற்றைக் கொம்பினால் தூக்கியெறிந்த கடவுள். அவன் கமலாம்பிகையின் அன்புச் செல்வன் மட்டுமன்று, முன்னொரு சமயம் அன்னை பார்வதி நீராடப் புகும்போது விநாயகனை வெளியிற் காவலுக்கு நிறுத்த, சிவபெருமான் அப்பொழுது அங்கு வந்து அன்னையைப் பார்க்க முயல விநாயகனால் தடுத்து நிறுத்தப்பட, சினந்தெழுந்த சிவனார் பாலகனின் சிரத்தைத் துண்டிக்க, அன்னை பார்வதி யானையின் தலையை வெட்டி மகனின் சிரத்திற்கு மாற்றாக வைக்க அது முதல் விநாயகனானான் என்பது தொன்மச் செய்தி. அத்தகைய மூத்த புதல்வன் தன் தம்பி முருகவேள் வள்ளியை மணக்க முயன்ற காலத்து அவனுக்குப் பக்க துணையாய் நின்றவன். இவ்வாறாக அன்னைக்கும், தம்பிக்கும் துணைநின்ற அவனை ஆசிரியர் நன்றியோடு வணங்குகிறார்.

அப்படி வணங்குவதிலும் ஆசிரியர் ஒரு நயம் காட்டுகிறார். விநாயகனின் தந்தை சிவபிரான் முக்கண் பெற்றவர். இந்நிலவுலகை வளைத்து நிற்கும் பெருங்கடலினும் பெரிது அச்சிவபெருமானின் கருணைதரு கண்கள். அது மட்டுமா நீர் நிலைகள் பெருகிட, நாடு நல்வளம் காண பெய்யும் பெரு மழையையும் விஞ்சும் படியான ஞான மழையாய் விளங்கும் வேழ முகத்தானின் சிறப்பு அளப்பரியது. அத்தகைய இறைவன் ஈண்டு குமரமலையில் எழுந்தருளியிருக்கும் இறைவனைக் காக்க வர வேண்டுகிறார்.

'தாமேவு முக்கட் பெருங்கருணை வாரியுஞ்
சலதரம் பொழியு மழையைத்
தனிஞான மதமழையு நுங்கமே லோங்கத்திச்
சரணமல ரேத் தெடுப்பாம்'[64]

என்ற வரிகளே மேற்சொன்ன கவித்துவத்திற்கான வரிகள்.

அடுத்து செங்கீரைப் பருவத்திற் ஒரு பாடல் காணலாம். இங்குக் கூறப்படும் பாடல் கருத்துவகையில் மிகவும் சிறப்புற்று விளங்குவதாகும். இறையுணர்வில் தன்னை மறக்கும் இறைநேயன், தன்னுடைய தகுதியின்மைகளைச் சுட்டிக்காட்டி இறைவனிடம் அவற்றையெல்லாம் பொறுத்தருள வேண்டுவதோடு தன்னையும் உய்விக்க வேண்டுகிறான்.

'தவமும் புரிகில மரபுந் தழைசுத
சந்தா னத்தாநற்
றமர்தந் தையெவரு நினையன் றிலையடி
தந்தா ளெந்தாயென்
றவிழ் நெஞ்சகமல ருருகும் படியெம
தன்பே யன்பேயென்
றவர்சஞ் சலமற வருளுஞ் சுருதியி
னந்தா கந்தா[65]

தவம் புரிந்து அறியாத தனக்கு நல்ல மகப்பேற்றை அருள வேண்டும்; நல்ல தந்தையாக இருந்து வாழ்க்கையை நடத்துவதற்காணப் பக்குவத்தைக் கற்றுத் தரவேண்டும். நிறைந்த அன்போடு நாளும் நெஞ்சுருக உன்னை மனதார நினைத்து பாடும் தன்னைப் போன்ற இறைநேயர்களுக்கு நல்லருள் பாலிக்க வேண்டும் என்று தனது வேண்டுதலை முன் வைக்கிறார். இது வள்ளலார் இறைவனிடத்து,

அப்பா வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாநா னன்பு செயல் வேண்டும்
எப்பாரு மெப்பதமு மெங்கணுநான் சென்றே
எந்தைநின தருட்புகழை இயம்பிடல் வேண்டும்
செப்பாத மேனிலைமேற் சுத்தசிவ மார்க்கந்
திகழ்ந்தோங்க அருட்ஜோதி செலுத்தியிடல்
வேண்டும்
தப்பேது நாண்செயினு நீ பொறுத்தல் வேண்டும்
தலைவ நினைப் பிரியாத நிலைமையும்வேண்
டுவனே[66]

என்ற அருட்பாவுடன் ஒப்பிட்டு எண்ணத்தக்கது.

செங்கீரை ஆடிவரும் முருகப் பெருமானைப் போற்றும் காலத்து, கவிஞர் பணிவோடு, தன் நெஞ்சமானது இன்னும் பக்குவப் படவில்லை என்ற கருத்தோடு இயைத்து இறைவனின் பெருஞ்சிறப்பைக் காட்டும் நயம் படித்து இன்புறத்தக்கது.

பொதுவாகத் தாலாட்டுப் பாடலில் மூன்று நிலைகளைக் காணலாம். குழந்தையின் பாரம்பரியத்தை புகழ்ந்துப் பாடுவது. குழந்தையின் உற்றாரைக் குறித்து உயர்த்திப் பாடுவது. குழந்தையின் சிணுங்களுக்கான காரணம் என்ன என்று ஆராய்ந்து அதற்கான தீர்வும் கூறுவது போலப் பாடுவது

மாமன், மாமி, அத்தை, பாட்டன், பாட்டி போன்ற உறவுகளின் சிறப்புகளை எடுத்துக் கூறும் பாடல்களை நாட்டுபுறப் பாடல்களில் அதிகம் காணலாம். எடுத்துக்காட்டாக ஒரு நாட்டுப்புறப் பாடலைக் காணலாம்.

செக்கச் சிவப்பரோ - உங்க மாமா
சீமைக்கோர் அதிபதியோ
அழகு சிவப்பரோட - ஐயா நீ
அருமை மருமகனோ!

என்ற இப்பாடலில் மாமன் பெருமையையும்,

சின்னக் கிணறு வெட்டி
சிங்கார வெண்புரவி
துவை வேட்டி போட்டு வரும்
துரை ராஜா உங்கள் மாமா

ஏலக்காய் காய்க்கும்
இலைநாலு பிஞ்சுவரும்
ஜாதிக்காய் காய்க்கும்
உன்தாய் மாமன் வாசலிலே

ஓசந்த தலைப்பாவாம்
உல்லாச வல்ல வட்டாம்
நிறைஞ்ச சபையிலே
நிப்பாக உங்களய்யா[67]

என்ற பாட்டில் தந்தையின் பெருமையையும்,

குளிக்கக் கிணறு வெட்டி
கும்பிடவோர் கோயில் கட்டி
பிடிக்க மடம் கட்டி வைத்த
பாட்டியனார் பேரனோ[68]

என்ற பாட்டில் பாட்டனின் சிறப்பையும் வருணிப்பதைக் காணலாம்.

அழும் குழந்தை எது குறித்து அழுகிறது என்ற ஐயம் அன்னைக்கு ஏற்படும் போது அந்த அன்னை, பலவிதமான வினாக்களைத் தனக்குத் தானே கேட்டு விடையும் கூறுவது போலக் குழந்தையையும் தேற்றவும் செய்வாள்.

ஆரடிச்சா நீ யழுத
அடிச்சாரைச் சொல்லியழு
பேரனடிச் சாரோ
பிச்சிப் பூ கைனாலே!
மாமன் அடிச்சாரோ
மல்லிகைப் பூகை னாலே
மாமன் கைச் சிலம்போ
மச்சி னமார் கைச்சிலம்போ - நீ

என்று வினவி,

பேரனார் கொண்டைக்கு
வாடா மருக் கொழுந்தோ[69]

எனப் போற்றுவதன் மூலம் குழந்தையின் அழுகையை நிறுத்துவதாக ஒரு நாட்டுப் புறப்பாடல் புகல்வதைக் காணலாம்.

கல்லிலே எலுமிச்சை காய்க்கும்
கதலிப் பழம் பழுக்கும்
முல்லைப்பூ பூக்கு தில்ல
உன்தாய் மாமன் கொல்லையிலே[70]

இந்தப் பாடலில் மாமனின் சிறப்புகள் எடுத்துக் கூறப்பட்டுள்ள பாங்கைப் பாடலைப் படிக்கும் போதே உணரலாம்.

பால்குடிக்கக் கிண்ணி
பழந்திங்கச் சேணாடு
நெய்குடிக்கக் கிண்ணி
முகம் பார்க்கக் கண்ணாடி
கொண்டைக்குக் குப்பி
கொண்டு வந்தான் தாய்மாமன்[71]

இப்படி மாமன் பெருமை மற்றும் பிறரது பெருமைகளை எடுத்துக் கூறும் பாடல்கள் பல நாட்டுப்புற இலக்கியத்தில் உண்டு.

நாட்டுப்புறத் தாலாட்டுப் பாட்டின் உத்தியை உள் வாங்கியது போல இப்பிள்ளைத்தமிழ் பாடல் அமைந்துள்ளதைக் காணாம். பாட்டுடைத் தலைவனின் நலச் சிறப்பு, அவனின் பாரம்பரியச் சிறப்பு அவனது அருளிச் செயல் ஆகியவற்றை அருஞ்சொற்களாலும் நற்கற்பனையாலும் பின்னி எழுதப்பட்ட இந்நூற் பாடல் வருமாறு:

கன்ன லொடித்துக் கடாவடித்துக்
கருங்கா லுழுந ருழுஞ் சாலிற்
கமலத் தரும்பு மரும்பொடு செங்
காவி யரும்பின் முருக்கவிழப்
பன்னு மிசைவன் டினமூசும்
பதும நாளங் கடைசியர்செம்
பதுமத் தடிபின் னலிற் பெயர்ந்து
படரா நிலைகண் டவணாரும்
அன்ன மனையார் நடைக்கு முன
மாற்றா ததிநா ணுற்றன மீ
தற்ற மாமே ளனஞ் செயற்கென்
றார்க்கும் பணைசூழ் சோணாடா
பொன்னின் மருவு புல்லை நகர்ப்
புலவா தாலோ தாலேலோ

புனமான் றந்த குறமானைப்
புணர்வோய் தாலோ தாலேலோ[72]

இப்பாடலில் விண்ணும் மண்ணும் புகழும் வீரனே! தேவர்கட்குரிய யாக மந்திரங்களைக் குற்றமறத் தெரிந்துள்ள பாடியினாலே தேவர்களுள் மாசுமறு அற்றவனே கண்ணுறங்கு. தீங்கு செய்யும் அசுரர் உறைவிடம் கண்டு அங்குச் சென்று சமர் செய்து அசுரர் குலத்தை அழித்து தேவர்குலம் வாழ அருள் பாலித்தவன்.

சிரத்தில் கங்கையை அணிந்து உலகைப் புரக்கும் சிவபெருமான் அருட்கண்ணில் உதித்த கந்தவேள் பற்றுநீங்கிய ஒப்பற்ற இறைநேயராய் விளங்கும் தொண்டர்க்கும் தொண்டராய் விளங்கும் இறைவ! மயில் பரி ஏறுபவனே! என்று பொது நிலையில் ஆசிரியர் இறைவனைப் பாராட்டினாலும் அவன் எழுந்தருளியிருக்கும் சோழநாட்டின் சிறப்பைக் கூறும் போது, எருதை ஒட்ட முற்றிய கன்னலை ஒடித்து அதட்டுவார் களாம் சோழநாட்டு உழவர்கள். உழவர் உழுகாலின் வழியில் செந்தாமரை அரும்பும், அவ்வரும்போடு செவ்வல்லி அரும்பும் இவ்வரும்புகள் அழகு பெறுமாறு அதன் மீது முரளும் இசைவண்டினங்களும், நீரின் அடியில் காணப்படும் தாமரைத் தண்டுகள் உழுதல் காரணத்தால் பெண்களின் கால்களில் சிக்குண்டு அவர்கள் நடைபோட முடியாதபடி தடை செய்ய, இச்செயலினைக் கண்ட அன்னப் பெடைகள் அப்பெண்களின் நடைகண்டு நாணுற்றதாக கற்பனை செய்வதன் மூலம் 'முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள நாட்டின் வளம் இங்கே சிறப்புற பேசப்பட்டுள்ளதைக் காணலாம்.

ஞானமே உருவானவன்; தந்தைக்கு உபதேசம் செய்தவன் சிறந்த அறிவாளன் என்பது விளங்கும்படியாக 'பொன்னின் மருவு புலவா' என்ற பாராட்டு வரி அமைந்துள்ளதன் மூலம் அறியலாம்.

சின்னக் குழந்தையின் குறுநடையைக் காணும்போது நமது உள்ளத்தில் ஒருவகையான உவகை ஏற்பட்டு, நாம் அக்குழந்தையை இருகை நீட்டி வா வா என அழைத்து அதனோடு விளையாடத் தொடங்கி விடுவது இயல்பான ஒன்று.

பொதுவாக நடைகள் பலவாகும். பெண் நடந்தால் அன்ன நடை, ஆண் நடந்தால் சின்ன யானையின் கம்பீரமான நடை. போர் வீரன் நடந்தால் நன் நடை, குழந்தைகள் நடந்தால் குறுநடை என இலக்கியம் பாராட்டும். முருகப் பெருமானை இவ்வாசிரியர் பலவகையான 'மணி'யாக ஒப்பிட்டுப் பேசுவது இலக்கிய நயத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். பாடல் வருமாறு:

'பொன் மணி' எவ்வுலகும் புகழும் மணி. வள்ளி, தெய்வானை ஆகிய உயர்ந்த பொன்மணிகளின் மணவாளனாய் விளங்கும் செம்மணி, அடியவர்கள் பாராட்டும் அன்பு மணி, மாமறைகளுக்கும் எட்டாத உயர்மணி, பன்னிரு தோள்களை யுடைய வீரமணி. அசுரரை அழித்துத் தேவர் நலங்காக்கும் அருள்மணி, பேரின்பத்தை அடைய அடியவர்களுக்கு வழிகாட்டும் ஞானமணி. அழகிய கண்களும், சிவந்த வாயும் கொண்டு தாமரையில் வீற்றிருக்கும் பச்சைப்பசுங் கொண்டல் அனைய திருமாலின் மார்பில் தங்கும் திருமகள் நாள்ளும் தங்க விழையும் புல்லை நகர்தனைக் காத்துவரும் நன்மணி. தனக்கு இணை என்று கூறும்படி அசுரரை வென்று வெற்றிக் களிப்பை ஆறுமுகத்திலும் தேக்கி சண்முக மணியாய் விளங்கும் ஒண்மணி. அம்மையப்பன் மனம் மகிழ குன்றிறுக்கும் இடமெல்லாம் எழுந்தருளி தமிழ் காக்கும் குமர மலைக் கண்மணியே என முருகனைத் தமிழ்மணியாய் போற்றிப் பாராட்டும் அவ்வழகிய பாடல் வருமாறு:

பொன்மணி யினொளிவீசு வடிவேற் படைக்கரம்
பொலியுமணி யெப்பு வனமும்
புகழுமணி பெண்சிலர் மணியிருவர் நாப்பண்
பொருந்துசெம் மணிய டியாராற்[73]

இசைச் சந்தமும் பொருட் சிறப்பும் இப்பாடலில் பின்னிக் கிடப்பதைக் காணலாம் அன்றோ!

புலவனின் புலமைத்திறத்திற்கு அம்புலிப் பருவமே சான்று என்பர். சொல்விளையாட்டு, உவமை அழகு, கவிதைச் செறிவு எனப் பல உள்ளமைப்புகள் இணைந்து இவ்அம்புலிப் பருவப் பாடல்களுக்குச் சிறப்புச் சேர்க்கும்.

அவ்வகையில் இங்கு ஆசிரியர் நிலவின் பெருமைகளைச் சொல்லி அதனினும் முருகப் பெருமானின் வீரத்தைச் சுட்டிக் காட்டி அவருடன் விளையாட நிலவை அழைக்கிறார்.

பொதுவாகக் குழந்தைகள் ஆடுவதற்கென்று நடை வண்டி, செப்புச் சாமான்கள், பலவிதமான வண்ண பொம்மைகள் என்று வீடுகள் தோறும் பெற்றோர் இன்றும் பொருட்களை வாங்கி அன்பளிப்புச் செய்வதைக் காணலாம்.

மனிதக் குழந்தையில் இருந்து வேறுபட்டவரல்லவா, தெய்வீகக் குழந்தையான முருகப்பெருமான் அதிலும் குறிப்பாக ஏனைய குழந்தைகளைப் போல கருவழி வாராது சிவனார் விழிவழி வந்த சோதியன் அன்றோ முருகப் பெருமான்.

சந்திரனைப் பற்றிக் கூறும்போது உக்கிரப் பெருவழுதி உன்மரபின் தோன்றியவன் என்ற பெருமையின் காரணமா! சிவனார் கங்கையோடு சேர்த்து உன்னையும் சூடிக் கொண்டார் என்ற சிறப்பு காரணமா! 'நிறை நீர நீரவர் கேண்மை பிறை' என வள்ளுவன் வாழ்த்தும் படியான உயர்வு காரணமா! வள்ளி தெய்வானை ஆகிய இருவர் உன்முகம் போல் ஒளிரும் முழுமதி என நினைந்தோ நீ இன்னும் வாராதிருக்கிறாய்.

கடல்நீரை அகத்தியன் உண்ண அருள்பாலித்தவன் முருகன். பேயாய் விளங்கும் பூதகி, கண்ணபிரானுக்குப் பாலூட்டத் தாயாய் வந்தபோது, அவனின் கபடமனம் அறிந்து அப்பேயின் உயிரை முலைவாய் வாய்வைத்துக் குடித்து அழித்த திருமாலின் மருகன் அன்றோ முருகவேள். அத்தகையவனுடன் ஆட உடன் வருவாயாக என ஆசிரியர் இப்பாடலில் நயமாகப் பேசியிருப்பது படித்து இன்புறத்தக்கது.

உணர்வுப் பூர்வமான மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ள மனித சமூகம் கண்டெடுத்த ஊடகமே முத்தம். காதலன் காதலிக்குக் கூட முத்தம் தராமல் போய்விடலாம். ஆனால் அன்றலர்ந்த மலராய் விளங்கும் குளிர்ந்த கண்களையுடைய பச்சிளம் குழந்தையைக் கண்ட மாத்திரத்தில் எவர்க்கும் அக்குழந்தையைத் தூக்கி, முத்தம் தந்து தங்கள் மனமகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ளத் தவறுவதில்லை.

பொக்கைவாய்ச் சிரிப்போடு பார்ப்போர் மனதை ஈர்க்கும் வண்ணம் புரியாத புதிராகச் சின்னச் சின்ன அசைவுகளைச் செய்து கொண்டு இனம் புரியாத ஒருவித இசை மொழியில் சிணுங்கும் சின்னக் குழந்தையின் குறுகுறு விளையாட்டைக் கண்ட எவரும் அதன் அழகில் மயங்கி மெய் மறந்து நின்று விடுவர் என்றால் மிகையாகாது.

பொதுவாக முத்தத்தை உச்சியில், நெற்றியில், கன்னத்தில், உதட்டில், கைகளில் எனப் பல்வேறு இடங்களில் தருவதைக் காணலாம். இப்படித் தரும் முத்தம் இடத்திற்கு ஏற்றவாறு பொருள் தரும். பொதுவான அன்பின் வெளிப்பாடு, ஆசி கூறுதல், மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளுதல், வணக்கத்தை, மரியாதை ஆகியவற்றை அறிவிக்க, மனித சமூகம் ஏற்ற ஊடகமாக முத்தத்தையே கைக்கொண்டுள்ளது எனலாம்.

சிறந்த வயற்வளப்பத்தைப் நாட்டில் எழுந்தருளியிருக்கும் ஏந்தலே பெற்ற சோழ குமரமலை சூழப்பெற்ற புல்லையம்பதிக் கதிபனே பாவாணர் போல வண்டுகள் இசைக்கவும், குயில்கள் பாடவும் படியான அமைப்பைப் பெற்ற வண்ணக் கறவை

மாடுகளை உடைய ஆயர் குலத்துத் தலைவன் வைகுந்தனின் மருகனே! மூவா முழு முதலே, வைகுந்தாதியர், குலிகன் போற்றும் வேலவனே. உன் இனிய இதழால் ஒரு முத்தம் இட்டு அருள் வாயாக என வேண்டும் இப்பாடல் எளிமைக்கும் சந்தத்திற்கும் தக்க எடுத்துக்காட்டு.

அடுத்து வருவது சப்பாணிப் பருவப் பாடல். இந்தப் பாடலில் ஓர் அருமையான இலக்கியக் காட்சியை வருணிக்கிறார் ஆசிரியர்.

குமரமலை என்பது மலைப்பகுதி என்பது சொல்லாமல் விளங்க வல்லது. மலையில் குரங்குகள் கூட்டம் கூட்டமாய் வாழ்ந்து வரும் தன்மையன. மூங்கிற் காடுகளில் இக்குரங்குகள் ஒரு மரத்திலிருந்து மறு மரத்திற்குத் தாவும்போது ஓங்கி உயர்ந்து விண்தொடும் அளவிற்கு வளர்ந்து நிற்கும் மூங்கில் மரத்தின் உயரத்தே காணப்படும் தேன் கூடுகள், அக்குரங்குகள் செய்யும் குறும்புகளின் காரணமாக உடைந்து ஒழுகவும், உயர்ந்த கொம்புகளின் பிடியில் தேனீக்கள் கட்டிய தேன் கூட்டில் இருந்து சிந்துவதால் இத்தேன் கொம்புத்தேன் எனவும், பருத்துப் பெருத்த கூரிய கொம்பினையுடைய கடாக்களிறுகள் உம்பர் உலகத்துக் காவலன் நாட்டில், பொன் மதில் சூழ விளங்கும் கற்பக மலர்க் காடுகளை வன்மையாகச் சிதைத்துக் கலக்குதலின் காரணமாக அத்தெய்வீக மலர்களில் இருந்து சொரியும் செந்தேனும், முற்றி முதிர்ந்த முக்கனிகள் வெடித்துச் சிதறுவதால் ஒழுகும் தீந்தேன் ஆகியன ஒன்றாய் கலந்து ஓடி ஆரவாரமிக்க அருவியிற் கலந்து நால்வகை நிலமும் சிறக்கவும் வாவி, குலம், ஏறி போன்றன நிரம்பியதோடு, கொடிய வறுமை நீங்க குத்து நிலம் கிழித்து வந்து வளப்பம் சேர்க்கும்படியான வளத்தைப் பெற்ற நாட்டினை உடையவனாக இப்பிள்ளைத் தமிழ் நாயகன் ஆசிரியரால் பாராட்டப்படுவது நயம்மிக்க இலக்கியச் சுவை கொண்டது என்றால் மிகையாகாது.

இப்பாடல்வழி பாண்டியர்கள் சந்திர குலத்தினர் என்றும், தன்னைக் கொள்ள வந்த அரக்கியைத் திருமால் வதம் செய்த செய்தியும் சிறப்புறு குறிப்புகளாகும். 'சற்குரு கடாட்சம் வைத்துனை வருக வென்றனன்' என்ற வரியின் வாயிலாக, ஆன்மாக்கள் அல்லது உயிர்கள் முருகப் பெருமானைத் துதித்தால் நல்லஞானம் பெறுவர் என்பது ஆசிரியர் நமக்குக் கூற விரும்பும் செய்தி ஆகும் அத்தகு சிறப்புடைய பாடல் வருமாறு:

குலவு நின் மரபினுக் கிரவமுதி[74]

'சிற்றில் சிதையேல்' இது ஒருவகையான தத்துவக் குறிப்பு எனலாம். இவ்வுலகத்துத் தோன்றிய ஆன்மாக்கள் இல்லறத்தில் ஈடுபட்டுக் கூட்டங்கூட்டமாக வாழ்ந்து வருகின்றன. சிற்றின்பச் சேற்றில் வீழ்ந்து ஏற முடியாமல் கிடக்கின்றன. ஆகவே பேரின்ப நிலையை எய்த முடியாது வாழ்நாள் எல்லாம் வீணாளாகக் கடத்தி விடுகின்றன.

ஞானவடிவான முருகன் இவ்வான்மாக்கள் செய்யும் தவற்றைக் களைய இல்லறமாகிய மணற்வீட்டை அழித்துப் பேரறமாகிய பேரின்ப வீட்டை நல்க வருகிறார்.

ஆனால் இம்மனிதக் கூட்டம் அதனை ஏற்காது பாசத்தால் கட்டுண்டு மீண்டும் இத்துன்ப ஆழியில் சிக்கிக் கொள்கின்றன என்ற தத்துவ உண்மையை மறைபொருளாக வைத்துப் பேசுவதே இப்பருவத்தின் நோக்கம்.

இதில் ஆசிரியர் பேரின்பம் தரவல்ல ஆசானாகிய முருகனின் அருளிச் செயல்களை அச்சிறுமியர் வாயாலேயே சொல்லச் செய்து ஆட்கொள்ள வந்த அவனைத் தூரப்போகச் சொன்னாலும், அருள் உள்ளம் கொண்ட இறைவன் அச்சிற்றில் அழித்து அவர்களை உய்விக்க வேண்டி அவர்களைச் சுற்றிச்சுற்றி வருவதாகப் பாடலை அமைத்துள்ளார் ஆசிரியர். அவ்வகையில் ஈண்டு முருகனை இருவினைப் பிணி அழிக்க மருந்தாய் விளங்குபவன் என்றும், அன்னை பார்வதியார் அருமை மைந்தன் என்றும், பாராட்டுவதோடு இந்திரன் அணியும் பொன்னாலாகிய பூக்களால் ஆகிய மாலையணிந்த வெற்றிச் சிங்க ஏறே! வடிவவேல் விடுத்துச் சூரபதுமன் பின்வாங்குமாறு அழித்துத் திருவேரகத்தில் எழுந்தருளியவனே.

சுவாமி மலை ஏந்தலே! விளையாட்டிற்காக சிறியோர் கட்டிய இம்மணல் வீட்டை அழித்துத் துன்புறுத்தாது எங்களை மகிழ்விப்பாயாக என வேண்டப்படும். இப்பாடலில் இறைவனின் சிறப்புக் கூறுகளையும் ஆன்மாக்களாகிய சிறார்க் கூட்டத்தின் விருப்பத்தையும் எண்ணி கருதத்தக்கது. இத்தனைச் சிறப்புமிக்க பாடல் வருமாறு:

பேய்த்தேர் நிலையின் பிரபஞ்சப்
பித்தைத் துடைத்துன் சரண்மலரே
பேணுந் தொண்டர் பழவினையாம்
பிணியைத் தணிக்கு மருமருந்தே
வேய்த்தோ ளுமைசீ ராட்டிநிதம்
விரும்புங் கரும்பே மகபதியான்
மிலைச்சும் பொற்பூந் தாரணிந்த
விறற்சிங் கேறே யமைக்கவொணா

வாய்த்தான் சமைந்த செழும்பாதே
வடிவேல் விடுத்துச் சூர்மாவின்
மறுவில் வாழ்வும் புயவலியு
மணித்தேர் வலியும் பின்வாங்கச்
சீய்த்தே மூகத்தா ரோகணித்தோய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே.[75]

நல்லன நல்லன அல்லன போன்ற நிகழ்வுகளை ஊர் அறியச் செய்வதற்குக் காலங்காலமாகப் பறை அறைதல் நம் சமூகத்தில் இருந்து வந்த பழக்கமாகும். மன மகிழ்ச்சியின் வெளிப்பாடாகவும், இப்பறை முழக்கப்பட்டுள்ளது. திருமணம், பிள்ளைப்பேறு, மரணம் போன்ற குடும்ப நிகழ்வுகளிலும், போர், கொடை போன்ற அரசியல் நிமித்தமாகவும் ஆலயத்தில் நடைபெற்றுக் கொண்டிருக்கிற பூசையை அறிவிப்பதற்கும் இப்பறை ஒலியே ஏற்றதாகக் கருதப்பட்டமையால் பறையறைதல் இன்றும் நடைமுறையில் இருந்து வருவதைக் காணமுடிகிறது.

இறைவனாகிய முருகப் பெருமான் மக்களுக்கு நல்லன வற்றையே செய்ய வேண்டும்; அவனது அறிவிப்பால் உலகத்து உயிர்கள் உவகையும் பேரின்பமும் அடைதல் வேண்டும் என்ற நோக்கோடே பிள்ளைத் தமிழ் இலக்கியத்தில் சிறுபறைப் பருவம் இடம்பெற்றுள்ளது எனலாம்.

இந்நூலாசிரியர் முருகவேளைப் பறை கொட்டச் சொல்லும் காரணம் இந்நிலவுலகில் தோன்றிய உயிர்கள் மும்மலம் காரணமாக (ஆணவம், மாயை, கன்மம்) அறவழியில் இருந்து பிறழ்ந்து செல்லும் உள்ளத்தினராய் உள்ளனர். செவ்வேளாகிய இறைவா, மாந்தர்தம் மன இருளை அகற்ற உன் பறையொலி பெரிதாய் முழங்குதல் வேண்டும் என வேண்டுகிறார். அவ்வாறு வேண்டும் போது முருகனை அவர் வருணிக்கும் விதம் படித்துப் போற்றுதற்குரியது.

'கானின்' வாழ் ஐ கன்னியொடு மா இன் கன்னியும் விருப்ப முறுங்' என்ற வரியின் மூலம் கானகத்துப் பெண் வள்ளியையும் வானரசன் புதல்வி தேவயானையை மா இன் கன்னி' என்ற அடைமொழியால் போற்றி இருப்பது நயம் மிகுந்த சொற்றொடர்களுக்கு நற்சான்றாகும். காண்பார் கண்டு கொண்டே இருக்கும்படியான வடிவழகினைப் பெற்றவன் முருகப் பெருமான் என்பதை 'காமரு மேனிக் கோமள செல்வக் கடவுளர் நாயகமே' என்ற தொடர் உறுதி செய்யும். கூரிய ஞானப் பேரருள்; 'தேவின் னீபப் புய சயிலேசன்' என பலவாறாக ஆசிரியர்

பாராட்டுவன அத்தனையுமே சிறந்த இலக்கிய நயம்மிக்க தொடர்கள் ஆகும்.

இறுதியாக அமைவது சிறுதேர்ப் பருவம். தேரில் பவனி வருதல் என்பது அக்காலத்தில் மன்னர்கள் போரில் வெற்றி பெற்ற பின் அதனை நாட்டு மக்கள் அறியும் வண்ணம் தேரில் உலா வருவதும், மன்னனாகப் பதவி ஏற்றபின் நாட்டு மக்கள் அறியும் வண்ணம் உலா வருவதும், வேற்றுநாட்டு விருந்தினரை வரவேற்று உபசரித்தல் குறித்து அவ்வேந்தனோடு தேரில் வருவதும் அன்றைய மரபு என்பது இலக்கியத்தின் வழி அறியலாம்.

ஈண்டு முருகப் பெருமானைச் சிறுதேர் உருட்டி மகிழும்படியாக வேண்டுவதன் நோக்கம் அவன் மகிழ்ச்சியோடு இருந்தால் அவன் எண்ணத்தில் வாழும் அடியவர்களும் மகிழ்வோடு இருப்பர். அதாவது சைவசமயத் தத்துவப்படி இறைவனை நோக்கி ஆன்மா பயணித்து விட்டால் உலகத் துன்பத்தில் இருந்து அதற்கு விடுதலை கிடைத்துவிடும். ஆனால் அது கடினமான காரியம். ஆகவேதான் இறைவனே அடியவரை நாடிவரும் செய்திகளும் உண்டு. சிவபிரான் அடியவர்களைச் சோதித்தல் என்ற பெயரில் பல அடியவர்களுக்கு அருள்பாலித் துள்ளார். அதுபோல முருகப்பெருமானும் செய்துள்ளார். ஆகவேதான் சிறுதேர் உருட்டி, அடியவரை நோக்கிச் சீறிவரும் துன்பங்களைக் களைய வேண்டும் என இலக்கிய நயத்தோடு வேண்டுகிறார் ஆசிரியர். அதன் காரணமாக ஆசிரியர் முருகப் பெருமானை இவ்வாறு வந்திக்கிறார்.

## முடிவுரை

இவ்வாறாக இந்நூல் தரும் பாடல்களில் பயின்று வரும் தமிழ்ச் சுவையும் பக்திச் சுவையும் படிப்போரை மகிழ்விக்கும் தன்மையன. பிள்ளைக் கவியில் சிறப்புற்று விளங்கிய குமரகுருபரன் தமிழ் போல் இவர்தம் தமிழும் விளங்கும் தன்மையது. குமரமலையில் எழுந்தருளியிருக்கும் முருகன் மீது பாடப் பெற்றுள்ள இந்நூல் முருகனின் அழகுக்கு அழகு சேர்க்கும் தன்மையது என்றால் மிகையாகாதன்றோ.

## அடிக்குறிப்புகள்

1. பன்னிரு பாட்டியல் : இனவியல் நூற்பா 22.
2. மேற்படி, நூற்பா 24.
3. பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள் ஓர் ஆய்வு, ப. 35.
4. மேற்படி, ப. 35.

5. மேற்படி, ப. 37.
6. மேற்படி, ப. 38.
7. மேற்படி, ப. 39.
8. மேற்படி, ப. 40.
9. மேற்படி, ப. 44.
10. அகநானூறு, ப. 20.
11. சிலப்பதிகாரம், வாழ்த்துக்காதை : 23 - 25.
12. மேற்படி, பாடல் 25.
13. பன்னிரு பாட்டியல், நூற்பா 172.
14. சிற்றிலக்கிய வகைகள், மு. சண்முகம்பிள்ளை, ப. 1.
15. பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள் ஓர் ஆய்வு, ப.
16. மேற்படி, ப.
17. தொல்காப்பியம், இளம்பூரணர், அகம், நூற்பா 5.
18. பரிபாடல் - பாக்கள் (1-4, 13, 15), (5, 8, 9, 14, 17, 18, 19, 21).
19. புறநானூறு, பாடல் 56.
20. புறநானூறு, பாடல் 6:91.
21. கலித்தொகை, பாடல் 150, மேற்படி, 2.
22. பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள் ஓர் ஆய்வு, ப. 50.
23. மேற்படி, ப. 51.
24. மேற்படி, ப. 51.
25. மேற்படி, ப. 51.
26. மேற்படி, ப. 51.
27. மேற்படி, ப. 51.
28. தாயர்திரு மடித்தலத்தும் தயங்கு மணித்த விசினிலும்
தூயசுடர்த் தொட்டிலிலும் நுங்குமலர்ச் சயனத்தும்
சேயபொருள் திருமறையும் நீத்தமிழும் சிறக்கவரு
நாயகனைத் தாலாட்டு நலம்பல்பா ராட்டினார்.
(திருத்தொண்டர் புராணம் :
ஞானசம்பந்தர் புராணம், பாடல் 44).
29. நாலாயிர திவ்வியபிரபந்தம், பெரியாழ்வார் திருமொழி, 1-6.
30. நிலந்துலங்க மேருத் துளங்க நெடுவான்
தலந்துளங்கச் சப்பாணி கொட்டும் - கலந்துளங்கொள்

காமாரி ஈன்ற கருங்கைக் கடதடத்து
மாமாரி ஈன்ற மணி

(பதினோராம் திருமுறை, மூத்தபிள்ளையார்
திருமும்மணிக்கோவை, பாடல் 2.)

31. நாம்அறியோம் பரசமயம் உலகிர் எதிர்நாடாது

..............................................................

தாமரைச்செங் கைகளினால் சப்பாணி கொட்டினார்

(திருத்தொண்டர் புராணம், திருஞான
சம்பந்தர் புராணம், பாடல் 46).

32. நாலாயிர திவ்யபிரபந்தம், பெருமாள் திருமொழி, பாடல் 3.
33. திருத்தொண்டர் புராணம், கண்ணப்பநாயனார் புராணம், பாடல் 23.
34. பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள் ஓர் ஆய்வு, ப. 52.
35. திருத்தொண்டர் புராணம்: திருஞானசம்பந்தர் புராணம், பாடல் 48.
36. கலித்தொகை, பாடல் 80, அடி 15-19.
37. அகநானூறு, பாடல் 54, அடி 17-19.
38. புறநானூறு, பாடல் 160, அடி 22-24.
39. நாலாயிர திவ்யபிரபந்தம், பெரியாழ்வார் திருமொழி, 1:4:3.
40. கலித்தொகை, பாடல் 86.
41. நாலாயிர திவ்யபிரபந்தம், பெரியாழ்வார் திருமொழி, 2:4.
42. நற்றிணை, பாடல் 58, அடி 1-4.
43. பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள் ஓர் ஆய்வு, ப. 55.
44. புறநானூறு, பாடல் 104.
45. பரிபாடல், பாடல் 11.
46. ஐங்குறுநூறு, பாடல் 84.
47. கலித்தொகை, குந்திக்கலி, பாடல் 12.
48. நற்றிணை, பாடல் 80.
49. பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள் ஓர் ஆய்வு, ப. 64.
50. மேற்படி, ப. 64.
51. அகநானூறு, பாடல் 20.
52. சிலப்பதிகாரம், வாழ்த்துக் காதை (23-24).
53. பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள் ஓர் ஆய்வு, பக். 5-6.

54. மேற்படி, பக். 4-5.

55. மேற்படி, ப. 8.

56. மேற்படி, பக். 10-11.

57. மேற்படி, ப. 16.

58. குமரமலை பிள்ளைத் தமிழ் (மூலம்), ப. 4.

59. மேற்படி, ப. 8.

60. மேற்படி, ப. 10.

61. மேற்படி, ப. 16.

62. குமரேசசதகம்.

63. குமரமலை பிள்ளைத் தமிழ் (மூலம்), அவையடக்கம், ப. 14.

64. விநாயகர் துதி, ப. 17.

65. குமரமலை பிள்ளைத் தமிழ் (மூலம்), செங்கீரைப் பருவம், ப. 31.

66. திருவருட்பா.

67. கொங்கு நாட்டுப்புறப் பாடல் தொகுப்பு, ப. 82.

68. மேற்படி, ப. 82.

69. தமிழர் நாட்டுப் பாடல்

70. மேற்படி

71. மேற்படி.

72. குமரமலை பிள்ளைத் தமிழ் (மூலம்), தாலப் பருவம், ப. 34.

73. குமரமலை பிள்ளைத் தமிழ் (மூலம்), வருகைப் பருவம், பக். 51-52.

74. மேற்படி, அம்புலிப் பருவம், ப. 59.

75. மேற்படி, சிற்றிற் பருவம், ப. 65.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

புதுக்கோட்டை சமஸ்தானம்
இராயபுரம் ப்ரஹ்மஸ்ரீ
ஸி. வெ. இராமஸ்வாமி சாஸ்திரிகள்
இயற்றியது.

[illegible] ।
[illegible] ॥௧॥

[illegible] ।
[illegible] ॥௨॥

[illegible] ।
[illegible] ॥௩॥

[illegible] ।
[illegible] ॥௪॥

இராயபுரத்திலிருக்கும் மழவைத் திருவிளையாடற்
சுப்ரமண்ய பாரதியவர்கள் புத்திரர்
ப்ரஹ்மஸ்ரீ இராமசுவாமி ஐயரவர்களியற்றிய
நிலைமண்டிலவாசிரியப்பா

திருவளர் செந்நெலுந் திகழ்தரு கன்னலு
முருகெழு கமுகுதெங் கோங்கிவா னளந்து
மருவிய நந்தா வனச்சோலைகளும்
பெருகிய மாமறை பேசுசா லைகளும்
பங்கயப் பூமலர்ப் பாயல்போல் விரித்
தங்கயற் றேனுக ரளிகளி னீட்டமு
நீர்நிறை யோடையு நிலவு தடாகமு
மேர்பல கொண்டுயர்ந் தேந்திய சிகரமொ
டாமதின் மண்டப மாவர ணத்துடன்
காமரு மங்கையற் கணியொடு சுந்தரர்
வாழ்வுறு கோயிலு மறையவர் வீதியு
மேழ்நகர் வணிக ரிசைந்திடு மாடமு
மெங்கினுஞ் சித்திர மியற்றிய கூடமுந்
தங்கிடு மலர்க்கூண் டருமறச் சாலையும்
பன்னரும் பல்வளம் பரவிய விராய
நன்னகர் தன்னி னாடொறும் வாழ்வோன்
எண்ணான் கறங்களு மீயுந் திறங்களும்
விண்ணார் தனபதி வியந்துரை செல்வராம்
வணிகர்தம் மரபின மருவிய விரணியூர்ப்
பணிதருங் குலத்திற் பாங்கமர் வாழ்வாஞ்
சிதம்பரம் பெறுநாச் சியப்பன் றவத்தா

விதம்பெற வருகதி ரேச வணிகன்
சந்ததி வேண்டித் தழைக்கும் புல்லயற்
குந்தமணிந்திடு குமரே சன்மேற்
பிள்ளைத் தமிழ்க்கவிப் பிரபந் தத்தைக்
கொள்ளைக் கவிக்குழாங் கொண்டுவப் பெய்தவும்
வேண்டிய வண்ண நீண்ட புகழ்சேர்
வள்ளற் பெருங்கவி வான்புக ழேந்தியின்
விள்ளற் கரியதாய் விளங்கு மரபினான்
திருவணா மலையா தீனம விளங்க
வருபரம் பரையின் மயின்மலை மலையாக்
குன்றாக்குடியுள குன்றாக் குடிநகர்
நன்றா மடமதி னண்ணிய வித்துவான்
பகர்ந்திடும் வீர பத்திரக் கவிஞன்
மகிழ்ந்திடு சுதனா மான்முத் துசாமி
புத்திரன் வீர பத்திரக் கவிஞன்
சுருத்ப் பொருளைச் சுருதியின் வழியே
சுருதியுட் கமலக் கண்ணக நிறீஇ
யெந்நல முந்தரு சொன்னலம் புணர்த்திக்
கன்ன லமுதெனக் கன்னம திற்கொளப்
பன்னினன் புலமையிற் றன்னின் மேலலாச்
சேயருள் கொண்டே சேயருள் செயவே.

இராயபுரத்திலிருக்கும் இந்நூலாசிரியர் மாணாக்கருளொருவரான
ப்ரஹ்மஸ்ரீ பஞ்சாபகேசய்யரவர்களாலியற்றியது
நிலைமண்டிலவாசிரியப்பா

பூங்கடல் சுலவும் புடவியிற் சிறந்து
தங்கரும் வளங்க ணிதமுறுஞ் சோழ
மண்டலந் தன்னிற் றொண்டமா னிசைகூர்ந்
தரசுசெய் புதுவை யம்பதி யடுத்த
சரசுலாம் புல்வய றனிலொரு தொண்டனுக்
காகவே பழனி யணிவரை நின்று
தாகம தாகத் தண்டா யுதமுடன்
ஓங்கும் பிரணவத் துட்பொரு ளுணரா
தேங்கும் விதியை யிருஞ்சிறைப் படுத்தி
யத்தன் மொழியா லவன்சிறை விடுத்தப்
பித்தன் கேட்கப் பிரணவப் பொருளைக்
கூறிய குமரன் குக்குட கேதனன்
ஆறிரு கைய னணிபத மிரண்டினான்
தரணியின் மாந்தர் தம்வினை யகற்ற
விருதயத் துன்னி யெழுந்துடன் போந்து
மஞ்சுலாங் குமர மலையினின் மேவுங்
குஞ்சரி மருவுங் குமரே சன்மேற்
றெள்ளுறும் பாண்டி தேய மதிலார்
மன்னில வளமும் வாய்ந்தபொற் பதியாங்

குன்றாக் குடியிற் குன்றாக் குடியான்
மன்புக ழேந்தி வங்கிஷத் துதித்தே
யியலிசை நாடக மென்னுமுத் தமிழு
நயமுறு நாற்கவி நன்குறப் பயின்றும்
பற்பல நூல்கள் பாங்குற வியற்றியும்
விற்பன ரெவரும் விம்மித முறவே
நலமிகும் புலவர் நாமல வெனவும்
புலவர் சிகாமணிப் புங்கவ னெனச்சொல்
பாவலன் வீர பத்திரக் கவிஞன்
ஓவருந் தவத்தா லுதித்தருண் முத்துச்
சாமிக் கவிஞன் சந்ததி விளங்கி
மாமிக் கோங்க வந்திடும் வீர
பத்திரக் கவிஞன் பத்தியாய்ப் பிள்ளைத்
தமிழினைச் சொற்றன் றரணியோர் செவிவா
வமிழ்திது வென்றே யருந்திட மாதோ.

இராயபுரத்திலிருக்கும் மழவை திருவிளையாடற்
**சுப்பிரமண்ய பாரதியவர்கள் பேரரும், சுப்பராமய்யர்**
**குமாரரும், இந்நூலாசிரியர் மாணாக்கருளொருவருமாகிய**
**பிரஹ்மஸ்ரீ கிருஷ்ணய்யரவர்கள் இயற்றியவை**
**அறுசீர்க்கழிநெடி லடியாசிரிய விருத்தம்**

வக்கும் புகழ்சேர்தென் பாண்டிநா டெனப்பெயர்பூண்
டுயர்கன் னிக்கோ
நுதற் றிலகமெனு மிறைநகர்வாழ் நாச்சியப்ப
னிரணி யூரிற்
சிவ புரந்தேவி யாட்கொண்ட நாதரருள்
கூட்ட முன்செ
தவப் பேறெனவே யவதரித்த சிதம்பரவேட்
கருமைத் தம்பி.

தவத்தோர் பெருங்களிகூர்ந் திடக்கோயி லூரினமர்ந்
தெழில்வே தாந்த
ருங்குணரண் ணாமலைச்சா மிக்கிலக்கு வற்குமுத
லுதித்த சீலன்
துதன பதிக்குமிருந் தனபதியா யெஞ்ஞான்றுஞ்
செல்வ மோங்க
வருங்குணவான் கதிரேச வணிகனெனத் திருநாமம்
வனை வள்ளற்கே.

புத்திரப்பே றுண்டாகி வாழையடி வாழையெனப்
புவியின் வாழச்
சித்திதருங் குமரமலைக் குகன்மேற்பிள் ளைத்தமிழைச்
செய்தத் தேவார்
அத்திருவின் முத்தமிழின் சுவையறிநா வலபவரதி
சயிப்பப் பூவி
னெத்திசையும் புகழ்வீர பத்ரகவி வாணனரங்
கேற்றி னானால்.

காரைக்குடியிலிருக்கும்,

**ப்ரஹ்மஸ்ரீ சதாவதானம் பாலசுப்பிரமணிய ஐயரவர்கள் இயற்றியது**

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்**

இயலிசைநா டகமூன்று தமிழினும்பற் பலதமிழ்க
ளிசைந்திட் டாலும்
டயர்வுநிறை பருவமிலாக் காரணத்தால் வள்ளிகொண்க
னுவக்கான் மேலு
நயமுதவா வெனத்தேர்ந்தே வீரபத்தி ரக்கவிஞ
னம்பி னோர்பாற்
செயமுதவுங் குமரமலைக் குகற்கொருபிள் ளைத்தமிழே
சேர்த்திட் டானே.

இராமநாதபுரம் சிவகெங்கை யென்னும் உபயசமஸ்தான வித்வான்

வேம்பத்தூர் சிலேடைப்புலி

**ப்ரஹ்மஸ்ரீ பிச்சுவய்ய ரவர்களியற்றியது**

**வெண்பா**

பிள்ளைத் தமிழாம் பெருந்தமிழ்க்கெல் லாமிஃதோர்
தள்ளையெனப் பாவலர்கள் சாற்றியே கொள்ளைகொளக்
கற்பனையாய்ப் புல்வயல்வாழ் கந்தற் குகந்துரைத்தா
னற்புகழ்சேர் வீரபத்தி ரன்.

ஸ்ரீவிஷ்ணுபுராண நூலாசிரியராகிய

**செந்நெற்குடி சாமிக்குட்டி ஐயரவர்களென்று பெயர் விளங்கும்**

**ப்ரஹ்மஸ்ரீ சுப்பராய ஐயரவர்கள் இயற்றியது**

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

மாமேவி வளர்புல்லை வளநகர்வாழ் குமரமலை
மன்னி நாளும்
பூமேவு மானிடர்தம் மிடர்தவிர்க்கு மாறுமுகப்
புனிதன் றோண்மேற்
றேமேவு செந்தமிழ்ப் பிள்ளைத்தமி ழாங்கவிமாலை
சிறப்ப வேய்ந்தான்
காமேவு மிராசநகர்தனில்வளரும் வீரபத்ரக்
கவிஞன் றானே.

மேற்படி கனிஷ்ட சகோதரர்

**ப்ரஹ்மஸ்ரீ வீமகவியவர்களியற்றியது**

**இணைக்குறளாசிரியப்பா**

பூவிருந் தொளிரும் புகழ்பெறு மதுவினை
வண்டுந் தேனு மகிழ்ந்தினி தருந்திச்
செவ்வழி பாட
நான்முகன் விண்டு நந்தியூர்ந் திடுவோ
னாகுமுத் தேவர்க் கடுத்திடு சத்திக

ணிறமென விளந்தளிர் தளிர்முதி ரிலைகளைத்
தன்னகத் தமைத்தத் தளிரியல் கண்கள்போற்
றீவிளி காட்டித் தேவர்த முலகுறை
வளந்தனை நோக்க வளர்ந்திடு பான்மையின்
வயங்குந் தேமா மன்னிய குயில்கண்
மணவினை நடாத்தும் வளங்கெழு பொழில்சூழ்
குன்றைமா நகரிற் குலவிய திருவார்
அண்ணா மலையா தீனத் தமர்ந்திடு
தலைமைப் புலவர் தங்குல மதனின்
மகுடமென் றோங்கி வந்திடு புலவன்
புகடனை யேந்து புகழேந் தியென்னும்
பெருந்தமிழ்ப் புலவனைப் பேசுதன் குலத்தின்
முதல்வனாக் கொண்டு விளங்கிய முதல்வன்
வீரபத் திரனென வியற்பேர் பெறு
மருங்கவிப் புலவனைச்
சலதரந் தாங்கு தடித்தது நீங்கிப்
புவியிடை யமர்ந்து பொற்கல சத்தினைத்
தாங்கிநின் றொல்குந் தன்மையின் முலைகளைத்
தாங்கிடு மயிலனார் சஞ்சரித் திலகும்
தடம்பெரு வீதியார்
இராய புரத்தி லிருந்திடு தனதன்
கரிணியார் வீதியி ரணியூ ருடையான்
வைசியர் குலத்தின் வந்தவ தரித்தோன்
கதிரைமா நகரிற் கண்ணிய முதல்வன்
றன்பேர் தாங்கு சதிருடை யறிஞன்
மகிதலந் தன்னின் மகப்பே றொடுமிகு
நிதியினை யருளு நின்மல மூர்த்தியாம்
புனிதமார் புல்லை பொன்மலை நிகர்மலை
மேவிய குமரனா மெய்ப்பொருண் மீது
பிள்ளைத் தமிடனைப் பேருல கத்தோர்
மகிழ்ந்திடப் பாடித் தருகெனத் தந்தனன்
அறிஞரும் வியப்ப வமிழ்தென மன்னோ.

திருமெய்யம் வைக்கீல்

ப்ரஹ்மஸ்ரீ வயித்திநாதய்யரவர்கள் இயற்றியது

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

வளர்கலியு காப்தமையா யிரத்துப் பத்தின்
மருவுகீ லகவருடந் தைவெண் பக்கங்
கொளுங்கதிர்நா டிர்திகைநற் சதையந் தெய்தி
குலவுமிரா நிற்குமர மலைவேண் மீதி
லளகேச னிகர்கதிரே சன்பே ரோங்கி
யாண்மகப்பே றுறப்பிள்ளைக் கவியைப் பாடித்
தளர்வறவே வீரபத்ரக் கவிஞன் வித்வ
சபையொருங்கே மெச்சவரங் கேற்றி னானே.

மதுரை ஜில்லா
கோட்டையூர் மீனாட்சி சுந்தரமய்யரவர்கள் புத்திரர்
ப்ரஹ்மஸ்ரீ சுப்பய்யரவர்களால் இயற்றியது
அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

சீர்பூத்த கடல்வளைக்கும் புவிமதிக்கும் புகழ்நலத்தாற்
செழித்தோன் முல்லைத்
தார்பூத்த மணிநிறத்தான் றனவணிகர் குலமணியாத்
தழைக்குஞ் சீமான்
கார்பூத்த கரதலத்தான் கதிரேச னெனும்பெயரான்
கருத்தின் வேண்டு
கார்பூத்த மொழிநயந்து மெழுவகைச்சீர்த்
தீயினுமொன்றாய் நாடி மன்னோ. 1

பமரமலைத் திடுமி தழித் தொடையிடையுஞ் சடையுடையான்
பரமன் பாகத்
கமரமலைக் கொருபுதல்வ னமரர்தமக் கொருமுதல்வ
னகில மெல்லாஞ்
சமரமலைத் திடவடுகை யசுரர்களைப் பொடிசெய்நெடுந்
தனிவேற் கந்தன்
குமரமலைக் கொருதலைவன் சேயெனப்பேர் கொளலாலக்
குழகன் மீதே. 2

கள்ளமுதற் றிருக்கறுத்த மொழியுடையான் கலைமகடங்
கருணை யாகும்
வெள்ளமுத தியிற்கவர்ந்த வெழிலியெனக் கவிபொழியு
மேன்மை யாளன்
தெள்ளமுதத் தினுமிகுந்த மதுரமுற்ற தெனப்புலவர்
செவிவாய்த் தேக்கி
யுள்ளமுதத் தொடுபுகழச் சிறந்தபிள்ளைத் தமிழ்பாடி
யுயர்ந்தா னன்றே. 3

அத்தகைய பெருந்தகையா னியாவனெனி னுரைக்குதுமிவ்
வகிலந் தன்னி
னெத்தகைய பெருவளமு முடைத்தாகி நிலமகட்கோ
ரிழைபோன் மிக்கோர்
சித்தாய னங்களிக்கு மெழிலுடைத்தா மிராசநகர்
செழிக்க வந்தோன்
முத்தகைய தமிழ்களினுங் கவியுரைக்குந் திறந்தெரிந்த
முதன்மை யாவன். 4

நலமிகுந்த கலைகளெனு நரலையளவறிந்தகற்பா
னளினத் தாடங்
குலமிகுந்த புயமுடையான் முத்துச் சாமிக்கவிரு
னுஞற்றுஞ் செய்ய
குலமிகுந்த தவத்துதித்தோன் கொடைக்கரத்தோன்
குணங்களின்முற்
றுணத்தைச் சார்ந்தோன்

5

புலமிகுந்த வீரபத்தி ரப்பெயரா னெந்நாளும்
புகழ்மிக் கோனே. 5

கோட்டையூர் பெ.அ.க. சிதம்பரஞ்செட்டியார் குமாரர்
**சோமசுந்தரஞ்செட்டியாரால் இயற்றியது**
**அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்**

பூங்கமலத் துறையயனார் போற்றவருள் புங்கவனம்
போல்வா ருய்யத்
தாங்கமலப் பரம்பொருளாங் குமரமலைக் கிழவனருந்
தருவே யென்னப்
பாங்கமலர்ப் பொழில்சூழ்கோ நகர்வீர பத்திரமால்
பரிவிற் பெய்யுந்
தேங்கமலச் சேய்த்தமிழ்மேற் கொளலாலப்பெயர் புலவோர்
செப்பினாரேரோ.

உ
சிவமயம்

## பருவத்தொகை
### வெண்பா

சாற்றரிய காப்புசெங் கீரைதால் சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை - யேற்றுசி
ரம்புலியே சிற்றிலே யாய்ந்த சிறுபறையே
பம்புசிறு தேரோடும் பத்து.

1. **காப்புப் பருவம்** : அஃதாவது, திருமால், சிவபிரான், உமாதேவி, விநாயகர், பிரமன், இந்திரன், இந்திரை, சரசுவதி, முப்பத்து மூவர், என்றிக்கடவுளரை, பிள்ளையைக் காக்கும் பொருட்டு வேண்டிப்பாடுவது.

2. **செங்கீரைப் பருவம்** : அஃதாவது, பிள்ளைகள் ஒரு காலை முடக்கி ஒரு காலை நீட்டி யிருகைகளையு நிலத்தில் ஊன்றித் தலைநிமித்து முகமசைதாடு நிலை.

3. **தாலப்பருவம்** : அஃதாவது, பிள்ளைகளைத் தொட்டிலிற் கிடத்தி மாதர் நாவசைத்துப் பாடுநிலை.

4. **சப்பாணிப் பருவம்** : அஃதாவது, கையுடனேகை சேர்த்துக் கொட்டு நிலை.

5. **முத்தப்பருவம்** : அஃதாவது, பிள்ளையினது வாய் முத்தத்தை விரும்பி கூறும் நிலை.

6. **வருகைப் பருவம்** : அஃதாவது, குழந்தையை, நடந்து வருக என்று அழைக்கு நிலை.

7. **அம்புலிப் பருவம்** : அஃதாவது, பாட்டுடைப் பிள்ளையுடன் விளையாடவரும்படி மாதர் அப்பிள்ளையை ஒக்கலிலிருத்தி வைத்துக் கொண்டு சந்திரனைச் சாம பதே தான தண்டங்களாற் கூறியழைக்கு நிலை.

*8. சிறுபறைப் பருவம் :* அஃதாவது, பாட்டுடைக் குழவியைச் சிறுபறை கொட்டும்படி வேண்டும் நிலை.

*9. சிற்றிற்பருவம் :* அஃதாவது, சிற்றிலிழைக்குஞ் சிறுமியர் தஞ்சிற்றிலைச் சிதைக்கவேண்டாவென்று பாட்டுடைச் குழவியை வேண்டும் நிலை.

*10. சிறுதேர்ப்பருவம் :* அஃதாவது, பாட்டுடைக் குழவியைச் சிறுதேருருட்டும்படி வேண்டும் நிலை.

## நூற்பயன்

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

கடத்தேறு சலந்தோறுங் காணு மொன்றாங்
கதிர்போல வகண்டபரப் பிரமந் தானாய்ப்
படத்தேறு மோவியம்போ லுலகின் மாயா
பந்தத்திற் சிக்கிவினைக் கீடாய்த் தோன்று
சடத்தேறு முயிர்க்குயிராய் நின்ற வெங்க
டனிமுதலன் படியருக்கே தாயன் னான்குக்
குடத்தேறு கொடியுயர்த்தோன் வல்லி தேவ
குஞ்சரிக்கு மணவாளன் குழகன் செவ்வேள். 1

பன்னிருசெங் கதிருதயஞ் செய்தா லென்னப்
பன்னிருபொற் குண்டலங்க ளிலங்கு காதும்
பன்னிருமா மணிவலயந் தரித்த வாகைக்
பன்னிருபொற் கிரியனைய தோளு நாளும்
பன்னிருதிண் படையகலா தமருஞ் செய்ய
பன்னிருகைக் கற்பகமுங் கருணைபூத்த
பன்னிருகண் மலர்முகமுங் கழலை யார்க்கும்
பன்னிருதா மரைப்பதமுங் கொண்ட கோமான் 2

செங்கமலை மணிமார்ப னயனுங் காணாச்
செழுங்கமலை வேணியற்குக் குருவாய் வந்த
தங்கமலை நிகருமிளைத் தனத்தின் பாரந்
தயங்கமலைக் கோரிளஞ்சேய் தக்கோ ரஞ்சும்
அங்கமலைப் பொருவுநிறத் தவுண ராக்கம்
அடங்கமலை வளர்த்திடுங்கூ ரயில்வி டுத்தோன்
கொங்கமலைக் கும்பொழில்வான் குலவ நீண்ட
குமரமலைக் குமரேசன் மீதிற் சாற்றும். 3

பைந்தமிழ்ப்பிள் ளைக்கவிப்ர பந்தத் தன்னைப்
பாருலகின் மன்பதையாய்ப் பிறந்தோர் தம்முட்
சிந்தையுறக் கற்றோருங் கேட்போர் தாமுஞ்
செல்வமொடு நன்மகப்பே றுடைய ராகி
நிந்தையறப் பிணியகன்று பகையும் வென்று
நிகழிந்த்ர போகமுந்துய்த் தேவரும் போற்றச்
சந்ததமு மழியாத ஞான மோங்கிச்
சாயுச்ய பதந்தனையே சார்வர் மாதோ. 4

# பொருளடக்கம்

# குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்

## அவையடக்கம்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

தேன்றுளிக்குங் கற்பகமா நிறைவேண்டக்
குஞ்சரிதோள் சேர வேட்டு
மானகட்டி னுதித்திழிஞர் மனைவளர்கன்
னியைவலிய வாஞ்சித் தேனற்
கானினுற்றார்புலவர்சிகா மணியாமிந்
நூற்குரிய கடவு ளென்றால்
நானியற்றிப் புன்கவிகள் கவியெனத்தா
நயவாரோ நாவல் லோரே.

### பொழிப்பு

புலவர் சிகாமணியாம் இந்நூற்குரிய கடவுள், தேன் திவலை பொழி கற்பகத்திற்குரிய சிறந்த இறைவனாம் (இந்திரன்) வேண்டிக் கொள்ள தெய்வயானையை மணக்க விரும்பினார். எனினும் மான் வயிற்றில் பிறந்து, வேட்டுவக் குடியில் வளர் கன்னியாம் வள்ளியை வலிய விரும்பித் தினைப்புனக் காட்டிற்குச் சென்றாய் என்றால் நாவல்லோரே நான் இயற்றும் இப்புன்கவியாம் பிள்ளைக் கவிகளை இன்கவிகள் என விரும்பாரோ? விரும்புவர் என்றார் என்க.

இக்கவிக்கண் நூலாசிரியர் வீரபத்திரக் கவிராயர், நூற் கடவுளைத் தம் வழிபடு கடவுளாகவும் கொண்டு அவரை வள்ளி தெய்வயானையோடு மனதின் நினைத்து அவையடக்கம் கூறினார் என்க.

தேனை விடுத்துத் தேனடையை நல்லோர் நாடார். பாடற் பொருளாம் குமரமலைக் குமரேசனை விடுத்து என் புன்மைக் கவியை நாவல்லோர் ஆய்ந்து கொண்டிரார் என்று குமரக் கடவுளின் பெருமையையும், அவரை வழிபடும் புலவர் பெரு மக்களையும் இதனாற் போற்றினார். குமரமலைக் குமரேசனைப் பாடியமையால் தன் புன்கவியும் இக்கவியாம் என்றார் என்க.

புலவர் சிகாமணியாம் குமரமலைக் கடவுள் குமரேசர், தேவேந்திரன் மகள் தெய்வயானையோடு வாழ்ந்த காலையும், மான் வயிற்றுப் பிறந்த வள்ளியை வலிய விரும்பி வேடனாகித் தினைப்புனம் நாடிச் சென்றார். அவர் செய்கை புன்மை நெறிதாம் எனினும் நாவல்லோர் பொன்மையாய்த் தம்மனதுட் பொதிவர்.

எனவே குமரமலைக் குமரேசர் மீது யானியற்றும் பிள்ளைக்கவிகள் என்னளவில் புன்மையாம் எனினும் நாவல்லோர் அளவில் பொன்மையாம் என்று கூறினார்.

மலைகடல் நாடு வளநகர் பருவம் என்று இன்னோரன்ன நற்சொற்களான் நூல் தொடங்கப் பெறுதல் வேண்டும் என்பர் ஆன்றோர். நூற்றொடக்கத்திலும், தான் நூலை அரங்கேற்றுதற் கண்ணும், நூற்பயிறற்கண்ணும் முதற்கண் நிற்பது அவையடக்கம் ஆதலின், அதன் தொடக்கமும் நற்சொல்லான் அமைதல் வேண்டி முதற்கண் “தேன்” எனத் தொடங்கினார். மேலும் நூல் இனிதே செல்லுதல் வேண்டி 'தேன் துளிக்கும்' என்றார். தான் கொண்ட கருவால் நூல் இனிதே செல்லு மென்பார் குமரமலைக் குமரேசனை “தேன் துளிக்கும் கற்பம்” என்றார் என்க. கற்பம் + ஆர் + இறை எனப் பிரித்து ஆர் என்னும் இடைச்சொல்லைக் கற்பகம் என்பதனோடு இணைக்கச் 'சிறந்த' என்ற பொருளையும் தருதல் காண்க. இறைச் சிறப்பு யாதோ எனின் அமிர்தமுண்டு சாகாமல் என்றும் நிலைபெற்றுத் தேவர்களின் தலைவனாக நிற்றலும், நரகர், மக்கள், தேவர் எனும் முத்திறத்தார்க்கும் அவனே எக்காலத்தும் தலைவனாக நிற்றலும் என்க. குஞ்சரி - குஞ்சரம் என்பதன் பெண்பால். தோள் சேர்தலாவது மணத்தல் அகடு = வயிறு. வேட்டுவரைப் புலைத் தொழிலால் 'இழிஞர்' என்றார். குமரக் கடவுள் ஒருகால் சங்கத்துத் தலைமை வீற்றிருந்தார் எனும் வழக்காற்றுண்மையான் அவரைப் புலவர் சிகாமணி' என்றார். இந்நூற் கடவுளைப் புலவர் சிகாமணி என்றமையின் தன் கவிகளைப் 'புன் கவிகள்' என்றார். எனினும் புலவர் சிகாமணிக் குரியன தன் கவிதையாதலின் நடத்தற்குரியன என்பார் 'நயவாரோ' என்றார் என்க.

## நூற்பயன்

கடந்தேறு சலந்தோறுங் காணு மொன்றாங்
கதிர்போல வகண்டபரப் பிரமந் தானாய்ப்
படத்தேறு மோவியம்போ லுலகின் மாயா
பந்தத்திற் சிக்கிவினைக் கீடாய்த் தோன்று

சடத்தேறு முயிர்க்குயிராய் நின்றவெங்க
டனிமுதலன், படியருக்கே தாயன் னான்குக்
குடத்தேறு கொடியுயர்த்தோன் வல்லி தேவ
குஞ்சரிக்கு மணவாளன் குழகன் செவ்வேள். 1

பன்னிருசெங் கதிருதயஞ் செய்தா லென்னப்
பன்னிருபொற் குண்டலங்க ளிலங்கு காதும்
பன்னிருமா மணிவலயந் தரித்த வாகைக்
பன்னிருபொற் கிரியனைய தோளு நாளும்
பன்னிருதிண் படையகலா தமருஞ் செய்ய
பன்னிருகைக் கற்பகமுங் கருணை பூத்த
பன்னிருகண் மலர்முகமுங் கழலை யார்க்கும்
பன்னிருதா மரைப்பதமுங் கொண் கோமான் 2

செங்கமலை மணிமார்ப னயனுங் காணாச்
செழுங்கமலை வேணியற்குக் குருவாய் வந்த
தங்கமலை நிகருமிணைத் தனத்தின் பாரந்
தயங்கமலைக் கோரிளஞ்சேய் தக்கோ ரஞ்சும்
அங்கமலைப் பொருவுநிறத் தவுண ராக்கம்
அடங்கமலை வளர்த்திடுங்கூ ரயில்வி டுத்தோன்
கொங்கமலைக் கும்பொழில்வான் குலவ நீண்ட
குமரமலைக் குமரேசன் மீதிற் சாற்றும். 3

பைந்தமிழ்ப்பிள் ளைக்கவிப்ர பந்தந் தன்னைப்
பாருலகின் மன்பதையாய்ப் பிறந்தோர் தம்முட்
சிந்தையுறக் கற்றோருங் கேட்போர் தாமுஞ்
செல்வமொடு நன்மகப்பே றுடைய ராகி
நிந்தையறப் பிணியகன்று பகையும் வென்று
நிகழிந்தர போகமுந்துய்த் தெவரும் போற்றச்
சந்ததமு மழியாத ஞான மோங்கிச்
சாயுச்ய பதந்தனையே சார்வர் மாதோ. 4

குடங்காள் தோறும் நிறைந்த நீர்களில் எல்லாம் காணும் ஒரு கதிரவனின் பலதோற்றம் போல, அகண்ட பரப்பிரமம் தன்னில் தானாகவும், படங்கள் தோறும் ஏறிய ஓவியம் போலப் பலவாய் உலகின் மாயக் கட்டின் கட்டுண்டு இருவினைக்கேற்ப உடலம் தோறும் சென்று உயிர்க்குயிராய் நின்று விளங்கும். எங்கள் தனி முதல் அன்புடைய அடியாருக்கே தாயானான்

அவன் சேவற் கொடியுயர்த்தோன்; வல்லி தெய்வயானை மணவாளன்; முருகன், செவ்வேளாவான்

அவன் செவிகள் தோறும் பன்னிரு செங்கதிர்த் தோற்றமாகப் பன்னிரு பொற் குண்டலங்கள் விளங்குகின்றன. அவனது பன்னிரு பொன்மலையொத்த தோள்களும் மாமணி வாகுவளையம் அணிந்து விளங்குகின்றன. பன்னிரு கற்பகக் கைகளும் பன்னிரு திண்படைக் கருவிகளைக் கொண்டு சமருஞ் செய்வான் விளங்குகின்றன; பன்னிரு கண் மலர்களைக் கொண்ட மலர் முகமும் கருணை பூத்து விளங்குகின்றன. பன்னிரு தாமரைத் திருவடிகளும் வீரக் கழலணிந்து விளங்குகின்றன. எனவே அவன் கோமானாவான்.

திருமகள் தங்கும் மணிமார்பன் அரியும், அயனும் காண ஒண்ணாத, செழுமையும் கருமை கலந்த பொன்னிறமுமுடைய வேணியன் சிவனுக்குக் குருவாய் வந்தவன், தங்க மலையொத்த இணைக் கொங்கைப்பாரம் வருத்த வந்த மலைமகட்கோர் இளஞ்சேயானவன், அங்கம் யாவும் மலையொத்த நிறத்து அவுணர் பெருக்கம் ஒடுங்க மலைமகள் வளர்த்திடும், கூர் அயில்வேல் விடுத்தவன், தேனொழுகும் பொழில்களான் சிறப்புற்று விளங்கும் நீண்ட குமரமலைக் குமரேசன் அவன் மீது பாடும்.

பைந்தமிழ்ப் பிள்ளைத் தமிழ்ச் சிறுபிரபந்தத்தினை மனதூன்றிக் கற்றோரும், கேட்போரும் பொருட் செல்வமொடு, நன்மக்கட்பேறும் பெற்றுப் பழியற்றுப் பிணியகன்று பகைமை வென்று இந்திரவுலகத்து இன்பமும் துய்த்து எவரும் போற்ற எக்காலும் அழியாத அறிவோங்கி உயிரானது இறைவனோடு கலக்கும் நிலையைப் பெறுவாராவர் (எறு).

இந்நாள்வரைப் புலவர் பெருமக்களும், அன்பர்களும், சிற்பிகளும், ஓவியர்களும் மற்றும் இன்னோரன்ன பலரும் முருகப் பெருமானை ஆறுதிருமுகங்களும், பன்னிருகாதுகளும், பன்னிரு கண்களும், பன்னிரு திண்டோள்களும், பன்னிரு கைகளும், இருதிரு வடிகளும் உடையவனாகவே கண்டனரேயன்றி, அவற்றில் திருவடிகளைக் "கழலலை யார்க்கும் பன்னிரு தாமரைப் பதமும்" உடையராகக் கொண்டு கண்டனர் இலர். ஆயின் ஆசிரியர் குமரேசனைப் பன்னிரு திருவடிகளையுடையவராகக் கருதியதும் உரைப்பதும் என்னை எனின், கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பெற்ற ஆறு குழந்தைகளும் ஒன்றாக

அன்னை ஆதியால் தழுவப்பெற்ற போது முருகனாய் ஒருருவாய் ஒருங்கிணைந்தனன் என்பர். அதுபோழ்து ஆறுதிருமுகமும், பன்னிரு காதும், பன்னிரு கண்ணும், பன்னிரு தோளும், பன்னிரு கைகளும் தோன்றினாற் போலவே பன்னிரு தாள்களும் கொண்டு தோன்றுதல் இயல்பாதலாலும், அவன் தாள்களை மக்கள் தாள்களைப் போன்று நிலத்தூன்றும் இரு தாள்களுக்கு ஒப்பக்கருதி இரண்டே இரண்டு என்றல் அவன் இறைமைக்கு இழுக்காதலினாலும், தெய்வங்களின் திருவடிகள் இரு நிலத்தூன்றா இயல்புடைமையின், அவன் திருவருவடிகளைச் 'சூழலை ஆர்க்கும் பன்னிரு தாமரைப் பதமும்' எனப் பன்னிரண்டாகவே உரைத்தனர் என்க. "கால் நிலந் தோயாக் கடவுளை யாம் நிலம் சென்னியுற வணங்குதும்" எனப் பிறரும் உரைத்தமை காண்க. கழல்-வீரக் கழல்கமலை - திருமகள், கருமை கலந்த பொன்னிறம். கொங்குத்தேன். வான் - மேகம். பதம் - பாதம் என்பதன் குறுக்கல் விகாரம். சாயுக்ய பதம் - உயிர் இறையோடு இரண்டறக் கலக்க அருள்பாலிக்கும் திருவடி

நூற்பயன் நுதலிய நான்கு செய்யுட்களும் சார்வர் எனும் ஒருவினை கொண்டு முடிதலின் 'குளகம்' ஆயிற்று.

## கணபதி துணை

பூமேவு சிமயப் பொலங்குவட் டினைவலம்
புரியமிரு சுடரொளி களைப்
பொன்மணிக் கிம்புரி மருப்பொன்றி னொளிகளும்
புவிமருங் குடைவா ரியைத்
தாமேவு முக்கட் பெருங்கருணை வாரியுஞ்
சலதரம் பொழியு மழையைத்
தனிஞான மதமழையு நுங்கமே லோங்கத்திச்
சரணமல ரேத்தெடுப்பாம்
மாமேவு மாயிரத் தெட்டண்ட முழுதுமிறை
மருவநூற் றெட்டுயுக நாள்
வல்லாணை முன்செலுத் துஞ்சூர் தடிந்தும்பர்
மகிழமணி முடியு மரசுங்
கோமேவும் வாசவன் கொண்டுவா னாடுசெங்
கோனாட தாகவருள் செய்
குமரவெற் பமருமயின் முருகனற் புதவினிய
குமரனற் றமிழ்தழை யவே.

முறை வைப்பு

ஐங்கரனை முதன்மையாகக் கொண்டு வணங்கி வழி பட்டுத் தொடங்கும் வினை முழுமையடையும் எனும் கொள்கைக்கிணங்க, குமரமலைக் குமரேசர் பிள்ளைத் தமிழில் பத்து பருவங்களைப் பாடுவதற்கு முன், காப்புப் பருவத்திற்கு முன் அத்திச் சரணமலர் ஏத்தெடுப்பாராயிற்று.

மாமேவும் - செல்வம் பொருந்திய, ஆயிரத் தெட்டு அண்டம் - ஆயிரத்தெட்டு அண்டங்கள், முழுதும் இறை மருவ - முழுவதும் அரசுரிமை அடைந்து, நூற்றெட்டு யுக நாள் - நூற்றெட்டு யுக வாழ்நாட்களும், வல்லாணை முன் செலுத்தும் சூர் தடிந்து - வன்மையாம் சூரபதுமனை முன்பாகவே செலுத்தி வந்த அவுணரை அழித்து, உம்பர் மகிழ - மேலுலகத்துத் தேவர் மகிழ, மணி முடியும் அரசும் - மணிகள் பதித்த முடியும் அரசுரிமையும், வாசவன் கொண்டு - தேவேந்திரன் அடைந்து, கோமேவும் - மீண்டும் அரசனாவான் வேண்டி, வானாடு செங்கோன் நாடதாமே மேலுலகம் செங்கோன் நாடாக விளங்க, அருள்செய் - அருளைச் செய்யும், குமர வெற்பு அமரும் மயில் முருகன் - அழகிய மலை மேவும் மயில் முருகன், அற்புதமினிய - செயற்கருஞ் செயல்கள் இனியன, குமரன் நற்றமிழ் தழையவே - அவற்றைச் செய்த குமரக் கடவுள் மீது பாடும் நற்றமிழ்ச் செழிக்கவே,

பூமேவு - பூ உலகின் தோன்றிய, சிமயப் பொலங் குவட்டினை - குன்றுகள் பொலியும் மாமேரு மலையை, வலம்புரியும் இருசுடர்களை - வலமாகச் சுற்றிவரும் கதிரும் மதியுமாகிய ஒளிகளை, பொன்மணிக் கிம்புரி மருப்பொன்றின் ஒளிகளும் (நுங்க) - பொன்னாலாகிய மணிகள் பதிக்கப்பெற்ற கிம்புரி எனும் பூண் அணிந்த ஒற்றைத் தந்தத்தின் ஒளிகளும் விழுங்க,

புவி மருங்குடை வாரியை - புவியின் மருங்கில் உடையாக விளங்கும் பெருங்கடலை, தாமேவும் முக்கண் பெருங்கருணை வாரியும் (நுங்க) - தாம் பெற்றுள்ள முக்கண் பெருங்கருணைக் கடலும் விழுங்க,

சலதரம் பொழியும் மழையை - நீர்நிலை பெருகப் பொழியும் மழையை, தனிஞான மதமழையும் (நுங்க) - ஒப்பற்ற

ஞானமத மழையும் விழுங்க, மேலோங்கும் - உயர்வும், அத்திச் சரண மலர் - யானை முகன் திருவடி மலரை, ஏத்தெடுப்பாம் - வணங்குவோம்.

## பொழிப்பு

செல்வம் பொருந்திய ஆயிரத்தெட்டு அண்டங்கள் முழுவதும் அரசுரிமை அடைந்து நூற்றெட்டு யுக வாழ் நாட்களும் வன்மையாம் செங்கோலாணையை முன்பாகவே செலுத்திவந்த அவுணரை அழித்து மேலுலகத்துத் தேவர் மகிழ, மணிகள் பதித்த முடியும் அரசுரிமையும் தேவேந்திரன் அடைந்து மீண்டும் அரசனாவான் வேண்டி, மேல் உலகம் செங்கோன் நாடாக விளங்க அருளைச் செய்யும் அழகிய மலைமேவும் மயில் முருகன் செயற்கருஞ் செயல்கள் இனியன, அவற்றைச் செய்த குமரக் கடவுள் மீது பாடும் நற்றமிழ்ச் செழிக்கவே,

பூவுலகில் தோன்றிய குன்றுகள் பொலியும் மாமேரு மலையை வலமாகச் சுற்றிவரும் கதிரும் மதியுமாகிய ஒளிகளை, பொன்னாலாகிய மணிகள் பதிக்கப்பெற்ற கிம்புரி எனும் பூண் அணிந்த ஒற்றைத் தந்தத்தின் ஒளிகளும் விழுங்க, புவியின் மருங்கில் உடையாக விளங்கும் பெருங்கடலை, தாம் பெற்றுள்ள முக்கண் பெருங்கருணைக் கடலும் விழுங்க, நீர்நிலை பெருகப் பொழியும் மழையை ஒப்பற்ற ஞானமத மழையும் விழுங்க உயர்வும் யானைமுகன் திருவடி மலரை வணங்குவோம் (எ.று).

## அருஞ்சொற்பொருள்

பொலங்குவடு - மாமேருமலை. இருசுடர் - கதிரும் மதியும். வலம்புரியும் - வலமாகச் சுற்றிவரும். பொன் கிம்புரி மூன்றன் உருவும் பயனும் உடன் தொக்கத் தொகை. மணிக்கும்புரி மணிகள் பதித்த கிம்புரி. மருப்பு பொன்றின் ஒளிகண் இவையெனச் சுட்டுவார் பொன்மணிக்கிம்புரி மருப்பு என்றார். சலதரம் - நீர் நிலை, அத்தி - யானை, சரணமலர், கருணை வாலி, மத மழை என்பன உருவகம். நூற்றெட்டு யுகம் - உலகம் தோன்றி இன்றும் நான்கு யுகங்களே முடியவில்லை என்றும் உலக வழக்கிலும் நூற்றெட்டு யுகம் என்பதும், அதுவும் தேவாசுரப் போக்கு முன்னதாகவே நூற்றெட்டு யுகம் என்பதும் மாறுபட உள்ளன. வல்லாணை - கொடூரமான ஆட்சி, சூர் என்பது சூரர் என்பதன் இடைக்குறை. மா எனும் உரிச்சொற்கு செல்வம் எனப்

பொருள் கூறப்படினும் அண்டங்கள் இயல்புகளைச் சிறப்பித்தமையான் பெரிய, உயரிய, பரந்த, அளவிட முடியாத எனுமாறு பொருள் சிறக்கக் கொள்க.

## காப்புப் பருவம்

### காப்புப் பருவம்

அஃதாவது "திருமால் ........... முப்பத்துமுவர்" என்றுக் கடவுளரை, பிள்ளையைக் காக்கும் பொருட்டு வேண்டிப் பாடுவது என முன்னர் உரைத்தார். எனினும் நூல் இனிதே முடியக் கடவுளரை வேண்டுதல் எனக் கொள்க.

## திருமால்

பொன்மேவு பதுமா சனத்தேவை யுதவிப்
புரக்குந் தொழிற்செய் வலவோர்
போகிமணி முடியிற் கிடந்தொளிரு மகிமான்
பொறிக்குநா யகனம ரினிற்
கொன்மேவு மாழிவிட் டிதழியிட்ட டபிமனைக்
கொள்சிந்து பதியை மறுநாட்
குலவந்தி வருமுன் செகுத்திடுவ லென்றுசூழ்
கூறுபற் குனனுய்ய வா
னின்மேவு மோராழி யிரதம்விடு கதிரொளியை
யெல்லிற் புதைத்தரு ளிமுன்
னேயாதி மூலமென வோலமிடு வாரணத்
தினையாளு மால்காக்க வே
தென்மேவு நேமியங் கிரிபொலங் கிரியிற்
சிறந்திமைய மலையு நாணச்
சிகரமுய ரியகுமர மலையின்வளர் முருகனுமை
சிவைகவுரி யருண்மக வையே. 1

### முறை வைப்பு

ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிற்கண் நடுவணதாகிய காத்தல் தொழிற்புரியும் திருமாலை முற்பட நிறுத்திக் காப்புப் பருவம் பாடுவாராயிற்று.

### பதவுரை

தென்மேவு நேமியங்கிரி - தெற்கே மிளிரும் பொதிய மலை, பொலங் கிரியின் சிறந்து (நாண) மாமேரு மலையினும்

சிறப்புற்று இருப்பினும் நாணுமாறு, இமய மலையும் நாண - வடக்கே மிளிரும் இமய மலையும் நாணுமாறு, சிகரம் உயரிய குமர மலையின் - கொடுமுடிகள் உயர்ந்து மிளரும் குமர மலையின் கண் வளர் முருகன் - எழுந்தருளி வளரும் முருகன், உமை சிலை கவுரி - உமையவள் எனப் பெயரிய கூத்தாடும் கவுரித்தாய், அருள் மகவையே - அருளிய மைந்தனே,

பொன் மேவு பதுமாசனத் தேவு - அழகு குடி கொண்ட செந்தாமரை மலரை வாழ்விடமாகக் கொண்ட திருமகள், ஐ உதவிப் புரக்கும் தொழில் செய் வலவோர் - செல்வ மேன்மதந்து அரசு காக்கும் தொழிலைச் செய்யும் வெற்றிவீரராம் அரசர்கள், நாயகன் - தலைவன்.

போகி மணி முடியிற் கிடந்து - ஆதிசேடன் மணி முடியிற் கிடந்து, ஒளிரும் மகிமான் பொறிக்கு நாயகன் - விளங்கும் நிலமகளாம் தாய்க்குத் தலைவன்,

அமரினில் - பாரதப் போரில், இதழியிட்டு - மரைமலர் படை வகுப்பில் இட்டு, அபிமனைக் கொல் சிந்து பதியை - அபிமன்யுவைக் கொன்ற சிந்து பதியை, மறுநாட்டு - அடுத்த நாட்டு, உலவு அந்தி வருமன் - தோன்றும் மாலைப் பொழுது வருமுன், கொல்வேன் என்று சூழ்கூறு பற்குனன் உய்ய - கொன்று விடுவேன் என்று ஆணையிட்டுரைத்த அருச்சுனன் பிழைக்க, வானின் மேவும் ஓராழியிரம் விடு சதிரொளியை - வானின் நின்று ஓராழித்தேர் விடும் கதிரவன் ஒளியைத் தருமாறு சொல் மேவும் ஆழிவிட்டு - கொலைபுரியும் சச்சரப் படையை விட்டு, எல்லில் புதைத்து - மாலையில் விளங்கச் செய்து அருளிய மால் - அருள் புரிந்த திருமால்,

முன்னே - முன்போர் காலத்து, ஆதிமூலமென ஓலமிடும் வாரணத்தினை - முதலையாம் சாலனிடம் சிக்கி ஆதிமூலமே என்று அழைத்த யானையை, ஆளும் மால் காக்கவே - காத்தாட் கொண்ட திருமால் காப்பானாக.

## பொழிப்பு

தெற்கே மிளிரும் பொதியமலை மாமேரு மாலையினும் சிறப்புற்றிருப்பினும் காணுமாறு, வடக்கே மிளிரும் இமய மலையும் நாணுமாறு கொடுமுடிகள் உயர்ந்து மிளிரும் குமர மலையின் கண் எழுந்தருளி வளரும் முருகன், உமையவள் எனப் பெயரிய கூத்தாள் கவுரித்தாய் அருளிய மகவையே, அழகு குடி

கொண்ட செந்தாமரை மலரை வாழ்விடமாகக் கொண்ட திருமகள் சென்று மேன்மை தந்து அழகு காக்கும் தொழிலைச் செய்யும் வெற்றி வீரராம் அரசர்கள் தலைவன், ஆதிசேடன் மணி முடியிற் கிடந்து விளங்கும் நிலமகளாம் தாய்க்குத் தலைவன், பாரதப் போரில், மரைமலர் படைவகுப்பில் இட்டு அபிமன்யுவைக் கொன்ற சிந்துபதியை அடுத்த நாட்குத் தோன்றும் மாலைப்பொழுது வருமுன் கொன்று விடுவேன் என்று ஆணையிட்டுரைத்த அருச்சுனன் தப்பிக்க, வானின் நின்று ஓராழித் தேர்விடும் கதிரவன் ஒளியைத் தருமாறு, கொலை புரியும் சக்கரப் படையை விட்டு மாலையில் விளங்கச் செய்து அருள் புரிந்த திருமால், முன்போர் காலத்து முதலையாம் காலனிடம் சிக்கி ஆதிமூலமே என்று அழைத்த யானையை காத்தாட் கொண்ட திருமால், காப்பானாக.

## அருஞ்சொற்பொருள்

பதுமாசனைத் தேவு - திருமகள். தேவு + ஐ - தேவை. ஐ - செல்வம், மேன்மை, வலவோர் - அரசர்கள். போகி - பாம்பு, ஈண்டு ஆதிசேடனைக் குறித்தது. பணிமுடி, ஆழியிரதம் என்பன இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்கத் தொகைகள் மகிமான் பொறி - நிலமகள். நாயகன் - தலைவன். ஈண்டுத் திருமாலைக் குறித்தது. நாயகன் என்பதனை வலவோர் என்பதனோடும் கூட்டிப் பொருள் கொள்க. திருமாலை ஈண்டு நாயகன் என்றது காப்புப் பருவத்திற்கும் அவனே தலைவன் என்பதனை நினைவு கூறுதற்கு என்க. சொல்மேவு, ஆழிவிட்டு, ஓலமிடு என்பன இரண்டன் தொகைகள், இதழியிட்டு - மரைமலர் படை வகுப்பின் கண் இட்டு எனவே ஏழன் தொகை. இதழி என்பது சினை ஆகுபெயரால் முதற்காண் தாமரையையும், பின்பு பொருளாகுபெயராய் படைவகுப்பையும் உணர்த்தின மையின் இருமடி ஆகுபெயராயிற்று, சொல் சிந்துபதி, கூறுபற் குனன், ஓலமிடுவாராணம் என்பன வினைத்தொகைகளே யாயினும் பண்டை கதை நிகழ்வுகளாதலின் இறந்த காலத்திற் பொருள் கொள்க. செழுத்திடுவேன் - தன்மை ஒருமை வினை முற்று. ஓராழி - ஒற்றைச் சம்பரம், சூழ் கூறுதல் - ஆணையிட்டு உரைத்தல், வஞ்சினம் மொழிதல். எல் - சாலை, மாலை இரண்டையும் குறிக்குமெனினும் ஈண்டு மலைப் பொழுதை மட்டும் குறித்தது. மால் - திருமால் என்பதன் முதற்குறை. கூத்து என்பது சிவனோடு கவுரி ஆடிய கூத்து. பொதிகை மலையும், இமயமலையும் நாண கொடுமுடிகளான் உணர்ந்தது குமரமலை என்க.

## தியாகராஜர்

புதிய நிலவொழு குமிள விதுநதி
புரிச டிலமே வாதியைப் பாற்கடல்
புலவர் கடையமு னெழும மரிபுகழ்
பொலிய மணிவா யேவுணப் போழ்த்தனர்
புணரி யிடையிடை யெறிதி வலைநுரை
பொருவு சிறுவாழ் வேயெமக் கோட்டினர்
புவன முயக்கு புனகை கொடுதிரி
புரமெ ரியமா றாயபற் காட்டினர்
அதுல விதுரர்பொ னசல வலரிமை
யமலை சுதைதழு வாகர்மெய்ப் பார்த்தன்வி
லடிகொண் முடியர்கை யயய வரதர்சொல்
லரிணா மழுவா ரோடுசற் பாத்திரர்
அரிய யனுமடி முடிய றிவரிய
யலகி லொளிமீ கீழுறத் தோற்றினர்
அரவ விருகுழை யடுசெ வியரென
வறைத தருதியா கேசரைப் போற்றுதும்
மதுப மிசைசெய்து மதுர நறையுண
வருகு மணநீ பாசலத் தோட்டுணை
மதுவ சனவன சரிவெ ளிபமகண்
மருவு மணவா ளாவெனப் போற்றுநர்
மனதி லிளகிய பொருளை யுமைவிழி
மணியை மணிசூழ் சோதியைச் சாட்குண
மலையை யெமதுயிர் நிலையை யருமறை
வடிவை யடியார் மாசுகப் பேற்றினை
குதுக லமொடுக லகல வெனமணி
குளிறு மடியார் கேகயச் சீர்ப்பரி
குலவி விழிபொழி கருணை மழையது
குளிரு மலரா றானனத் தூற்றிடக்
குறுமு னிவனக மகிழ வருகுல
குருவை யிகலோர் மாயையிற் சீற்றனைக்
குதலை மொழிபயின் மகவை யினியகு
மரம லையின்வாழ் வேலனைக் காக்கவே. 2

### முறை வைப்பு

யார் எது கேட்பினும் வரமளிக்கும் கருணையே வடிவமான சிவனின் திருப்பெயர்களில் தியாகராசர் என்பதும் ஒன்று. காப்புப் பருவத்துக் காத்தற்கடவுள் திருமாலை வழி

பட்டவர், அடுத்துத் தியாகமே உருவாய சிவனை - தியாகராசனை வழிபடுவார் ஆயிற்று.

காப்புப் பருவத்துக் காத்தற்றொழில்புரி திருமாலுக்கு முதலிடம் தந்தவர், சிவன் முத்தொழிற்கும் உரியனவாதலின் தியாகராசனாக அடுத்தபடியாகவும் வழிபடுவாராயிற்று. இதனான் வைப்பு முறையும் தானே விளங்கும்.

**பதவுரை**

மதுப மிசை செய்து = வண்டுகள் மேற்கிடந்து, மதுரநறையுணவரும் மணநீபாசலத் தோட்டுணை = தேனாகிய இனிய கள் குடிக்க வரும் மணமிக்க கடப்பமலர் மாலையணிந்த தோள்களையுடையவரே, மதுவசனம் - இன்சொல் மொழி வனசரி வெளிப மகள் = காட்டில் வாழ் மான்மகள் வள்ளி, மருவு மணவாளா வெனப் போற்றுநர் = தழுவும் மணவாளனே என்று போற்றுபவர், மனதில் இளகிய பொருளை = மனதில் இளகிய பொருளை, ஊமைவிழி மணியை = உமையவள் கண்மணியானவனை, மணிசூழ் சோதியை = அக்கண்மணி சூழவரும் மகிழொளியை, குமரேசனை, சாட்குண மலையை = ஆட்குண மலையை, எமதுயிர் நிலையை - எம் உயிர் நிலை யானவனை, மறை வடிவை = அரிய மறை வடிவானவனை, அடியார் மாஅகப் பேற்றினை = அடியார், குதுகல மொடு கலகலவென மணி குளிரும் அடியார் = மகிழ்வொடு கலகலவென மணி தெளிக்க மனம் குளிரும் அடியவர் அகமகிழ வரு குலகுருவை = மனம் மகிழவரும் குலகுருவாம் குமரேசனை,

கேகயச் சீர்பரி அகமகிழ வரு குலகுருவை = மயில் ஊர்தியில் மனமகிழ வரும் குலகுருவாம் குமரேசனை, விழிகுலவி கருணை மழையது பொழி = விழிகள் இணைந்து கருணை மழையது பொழியும், குளிரும் மலர் ஆளான அனத்து ஊற்றிட அகம் மகிழ வருகுல குருவை = குளிர்ந்த மலர்கள் ஆறான அன்னப் பறவையாம் கார்த்திகைப் பெண்கள் மகிழ்ந்திட மனம் மகிழ வரும் குலகுருவாம் குமரேசனை, குரு முனிவன் அகமகிழ வரு குல குருவை = அகத்திய முனிவன் மனம் மகிழ வரும் குலகுரு குமரேசனை, இகலோர் மாயையிற் சீற்றனை = பகைவர் தம் மாய வாழ்வில் சீற்றம் கொண்டு அழிப்பவனை, குதலை மொழி பயில் மகவை = குதலை மொழி பயிலும் மகவாம் குமரேசன்னை இனிய குமரமலையின் வாழ் வேலனைக் காக்கவே = இனிய குமர மலையின் கண் வாழும் வேலவனைக் காக்கவே.

புதிய நிலைவொழுகும் இளவிது நதி புரி சடிலம் மேவு ஆதியை = புதிய நிலவொளி தரும் இளம்பிறையும் கங்கை நதியும் திரிபுரி செஞ்சடிலம் மீது அணிந்த ஆதியாம் தியாகேசனை, போற்றதும் புகழ்பாடிப் பாராட்டுவோம் புலவர் திருபாற்கடல் கடைய முன்னெழும் அமரிபுகழ் பொலிய = தேவர்கள் திருப்பாற் கடலைக் கடைய முன்னர்த் தோன்றிய நச்சின் புகழ் விளங்க, மணிவாயே யுணப் போழ்ந்தனர் = மணிவாயை உண்ணுதற்குத் திறந்தனர், புணரியிடை = புணரியின்கண், யிடையெறி திவலை நுரைபொருவு சிறுவாழ்வே எமக் கோட்டினர் = நடுவில் வீசும் துளிகளின் நுரையை ஒத்த சில்வாழ் நாட்களையே எமக்கென வகுத்தனர்.

புவனம் முயநகும் புன்நகை கொடு திரிபுரமெரிய = உலகை வறுத்தும் சிறு நகைப்பினைக் கொண்டு முப்புர மெரியவும், மாறாய பற்காட்டினர் = எரியாத பல்வேறு சடைக் காட்டினர் அதுல விதுரர் = ஒப்புமையற்ற அறிஞர், பொன் அசல விலர் = மாமேருமலையை வில்லாகக் கொண்டவர், இமயமலை சுதை தழுவு ஆசர் = இமயமவான் மகள் தழுவு கூலினர், மெய்ப் பார்த்தன் விலடி கொள்முடியர் = அர்ச்சுனன் வில்தழும்புபட்ட தலையினர், கையமய வரதர் சொல்லர் = கையமர்த்தி வரமளிப்பவர், நற்சொல்லர், இணர் மழுவா ரொடு சற்பாத்திரர் = கொத்தான மழுப்படையோடு கொடுக்கும் குணமுடையவர், அரியயனும் அடிமுடி யறிவரிய அலகில் ஒளி மீகிழுறத் தோற்றினர் - திருமாலும் பரமனும் அறிய முடியாதபடி அளவற்ற ஒளிப்பிழம்பாய் மேல் கீழாகத் தோன்றியவர், அரவ இருகுழை அடு செவியர் = பாம்புகள் கிடந்தாடும் செவியினை யுடையவர், என அறைதரு தியாகேசரைப் போற்றுதும் என்று பேசப்படும் தியாகேசரைப் புகழ்ந்து பாராட்டுவோம் (எ-று).

## பொழிப்புரை

வண்டுகள் மேற்கிடந்து தேனாகிய இனிய கள் குடிக்க வரும் மணமிக்க கடப்ப மலர் மாலை அணிந்த தோள்களை யுடையவரே, இன்சொல் மொழி நாட்டில் வாழ்மான் மகள் வள்ளி தழுவும் மணவாளனே என்று போற்றுவர், மனதில் இளகிய பொருளை, உமையவள் கண்மணியானவனை, அக்கண்மணி சூழவரும் மகிழொளியை, குமரேசனை = ஆறு குண மலையை, எம் உயிர்நிலையானவனை, அரிய மறைவடிவான வனை, அடியார் பெருநல பேறானவனை) மகிழ்வோடு

கலகலவென மணியொலிக்க மனம் குளிரும் அடியவர் மனம் மகிழவரும் குலகுருவாம் குமரேசனை, மயில் ஊர்தியில் மனம் மகிழ வரும் குலகுருவாம் குமரேசனை, விழிகள் இணைந்து கருணை மழையது பொழியும் குளிர்ந்த மலர் ஆறான அன்னப் பறவையாம் கார்த்திகைப் பெண்கள் மகிழ்ந்திட மனம் மகிழ வரும் குலகுருவாம் குமரேசனை, அகத்திய முனிவன் மனம் மகிழவரும் குலகுருவாம் குமரேசனை, பகைவர்தம் மாய வாழ்வில் சீற்றம் கொண்டு அழிப்பவனை, குதலை மொழி பயிலும் மகவாம் குமரேசனை இனிய குமர மலையின் கண் வாழும் வேலவனைக் காக்கவே, புதிய நிலவொளி தரும் இளம்பிறையும் கங்கை நதியும் திரிபுரி செஞ்சடிலம் மீது அணிந்த ஆதியாம் தியாகேசனைப் புகழ் பாடிப் பாராட்டுவோம்; தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைய முன்னர்த் தோன்றிய நச்சின் புகழ் விளங்க, மணிவாயை உண்ணுதற்குத் திறந்தனர், புணரியின்கண் நடுவில் வீசும் துளிகளின் நுரையை ஒத்த சில்வாழ் நாட்களையே எமக்கென விடுத்தனர். உலகை வறுத்தும் சிறு நகைப்பினைக் கொண்டு முப்புரம் எரியவும் எரியாத பல்வேறு சடைக் காட்டினர். ஒப்புமையற்ற அறிஞர், மாமேரு மலையை வில்லாகக் கொண்டவர் இமயமலை மகள் தழுவும் உடலினர், அர்ச்சுனன் வில் அடித் தழும்புபட்ட தலையினர், கையமர்த்தி வரமளிப்பவர் நற் சொல்லர் கொத்தான மழுப்படையோடு கொடுக்கும் குணமுடையவர் திருமாலும் பிரமனும் அறிய முடியாத அளவற்ற ஒளிப்பிழம்பாய் மேல்கீழாகத் தோன்றியவர், பாம்புகள் கிடந்தாடும் செவியினையுடையவர் என்று பேசப்படும் தியாகேசரைப் புகழ்ந்து பாராட்டுவோம் (எ-று.).

## அருஞ்சொற் பொருள்

இளவிது மூன்றாம் பிறை அமரி நஞ்சு யிடையிடை = என்பதனை அடுக்குத் தொடராகக் கொள்ளின் புணரியின் கண் என ஏழன் உருபு வருவிக்க வேண்டுதலின் யிடையிடை என்பதிலுள்ள முதல் இடையை ஏழன் உருபாகக் கொண்டு பொருள் கூறப்பட்டது. ஆலம் உண்டு தேவர்கட்குப் பெரு வாழ்வை யளித்தார் எனினும் எமக்கு சிறுவாழ்வே அளித்தனர் என்க. தேவர்கட்கு ஒருநாள் என்பது மக்கள் கணக்கில் ஓராண்டாதலின், இல்வாழ்நாட்களையே அளித்தனர் எனப் பொருள் கூறப்பட்டது. மாறாய பல்காட்டினர் என்பது எரியாத சடைமுடிக் காட்டினை யுடையவர் என்பதால் என்னை எனின் தன்னிடத்தினின்று கிளம்பிய தீ திரிபுரங்களை எரித்தன எனினும்

எரியாத சடைமுடியுடையவர் என்பதாம். தாமே தீ வடிவாகியும் எரியாத முடிக் காட்டினர் எனவும் மன்மதனை எரிக்க நெற்றிக்கண் திறந்த போதும் எரியாத சடைமுடிக் காட்டினர் என விரித்து மாறாய பற்காட்டினர் என்பதற்குப் பொருள் காண்க. விலர், விலடி, சொலர் என்பன லகர ஒற்று இடைக் குறைந்து நின்றது. எனவே வில்லர், வில்லடி, சொல்லர் எனக் கொண்டு பொருள் கூறப்பட்டது. இன்சொலன் எனப் பிறகும் உரைத்தார். சற்பாத்திரர் - வள்ளல். அடிமுடி = உம்மைத் தொகை. அடிமுடி, மீகீழ் = என்பன முரண். மதுபம் = வண்டு. நிபாசலம் = கடம்பு சாட் குணம் = ஆறு குணம். கலகல = இரட்டைக் கிளவி. கேகயப்பரி = மயிலூர்தி. குலவி விழிபொழி கருணை மழையது என்பதனை விழிகுயவி கருணை மழையது பொழி என மாற்றிப் பொருள் இயைபு கொள்க. மலராறான் என்னம் = கார்த்திகைப் பெண்கள். மாயையில் சிற்றனை என்பதனால், அவுணர்தம் மாலையில் மயங்கி தகாதன புரிந்தனர் எனவே குமரனும் அவரது மாயைத் தடிந்து அவரை ஆட் கொண்டனன் என்க. குமரமலையின் வாழ் வேலவனைக் காக்கவே தியாகேசரைப் போற்றுதும் என முடிக்க. போற்றுதலாவது போழ்ந்தனர், எமக்கோட்டினர், பற்காட்டினர், சற்பாத்திரர், தோற்றினர் எனப் பலவாறு புகழ்தலாகும்.

## கமலாம்பிகை

உலகினி னுறவிமு னாம்பன்மட் டீற்றுள
உயிர்பல தொகைகளை யீன்றமெய்ப் பாட்டினள்
உததியின் வடவையி னோங்குகட் டீப்பொறி
யுகவரு நமனுயிர் வாங்கரற் கேற்பவள்
நிலையுணர் முனிவரர் காண்டவப் பேற்றென
நிகழுமு தல்விதனை வேண்டுகிற் பார்க்கருள்
நிருமலி பயிரவி வேய்ங்குழற் பாட்டிசை
நிகரறு கிளிபயின் மாங்குயிற் கூற்றினள்
சிலையைமி னிழையுரு வாய்ந்திடக் காற்றுகள்
சிதறிட வழிநடை போந்தவற் கேர்த்துணை
சிதமதி கதிர்பல தோன்றலிற் பூட்புனை
சிமயவி மயமலை கான்றநற பார்ப்பதி
அலைமகள் கலைமக ளார்ந்தகட் பூக்களின்
அருண்மழை பொழிகம லாம்பிகைத் தாட்டுணை
அலரினை மனனுறு திங்கறுந் தேத்துதும்
அணிகொளகு மரமலை யேந்தலைக் காக்கவே.

முறை வைப்பு

தியாகேசனை அடுத்து அவனது மனைவி கமலாம்பிகையை வழிபடுவாராயிற்று. இதனானே வைப்பு முறையும் தெளிவாம் என்க.

பதவுரை

அணிகொள் குமரமலை ஏந்தலைக் காக்கவே = அழகு குடி கொண்ட குமரமலைத் தலைவனைக் குமரேசனை காக்கவே,

உலகினில் உறவிமுன் ஆம்பல் மட்டு ஈற்றுள = உலகினில் எறும்பு முன்னான யானை ஈறாக உள்ள, உயிர்பல தொகைகளை ஈன்ற மெய்பாட்டினன் = உயிர்ப் பல தொகுதிகளைப் பெற்றெடுத்த உடம்பினையுடையவள்,

உத்தியின் வடவையின் = உடற்பெருக்கைவிட, வடவை அளவைவிட, ஓங்குகண் தீப்பொறியும் = மிகுதியும் கண் தீப்பொறி பறக்க, வரு நமனுயிர் வாங்கு அரற்கு ஏற்பவள் = வெகுண்டு வரும்படியான எமனின் உயிரை வாங்கிய சிவனுக்கு ஏற்புடையவள்.

நிலையுணர் முனிவரர் = உலகியல் நிலை யுணர் முனிவர்கள், காண் தவப்பேறென நிகழும் முதல்விதனை =காணும் தவப் பேறாக விளங்கும் முதன்மையானவளை, வேண்டுகிற் பார்க்கு அருள் நிருமலி பயிரவி = வேண்டி நிற்பவர்களுக்கு அருளும் குற்றமற்றவளாகிய பயிரவி, வேய்ங்குழல் பாட்டிசை = புல்லாங்குழல் பாட்டிசை என, நிகரறு கிளிபயில் மாங்குயில் கூற்றினள் - ஒப்பற்ற கிளி பயிலும் மொழியும் மாங்குயில் குரல் வளமும் கூடிய மொழியினள், சிலையை = சிலை யொத்த உருவை, மின் இழை உரு வாய்ந்திட = மின்னல் இழை ஒத்த வடிவம் பெற்றி, கால்துகள் சிதறிட = கால் அடிப் பொடி சிதறிட, வழிநடை போந்தவர்க்கு = தன்னை நாடி வழிநடை நடல் தவற்கு, ஏர்த்துணை = சிறந்த துணை. சீதமதி = குளிர்ந்த முழுமதி, கதிர்பல தோன்றலில் = ஒளிக் கீற்றுகள் பல தோன்றலினால், பூண்புனை = ஆபரணங்கள் அணிந்து சிமய இமயமலை சான்ற நற்பார்ப்பதி = சிகரங்களை யுடைய இமயமலை ஈன்ற நல்ல பாருக்குப்பதி, அலைமகள் கலைமகள் ஆர்ந்தகண் பூக்களின் = திருமகளும் நாமகளுமாகச் சிறந்த கண் பூக்களின், அருள் மழைபொழி கமலாம்பிகை = நின்று அருளாகிய மழை

பொழியும் கமலாம்பிகை, தாள் துணை அலகினை = இணையடி மலரினை, மனுறு தீங்கறுத்துத் ஒத்துதும் = மனதில் ஏற்படும் தீங்கினை நீக்கிப் போற்றுவோம்.

## பொழிப்பு

அழகு குடி கொண்ட குமரமலைத் தலைவனைக் குமரேசனைக் காக்கவே, உலகினில் எறும்பு முன்னாக யானை ஈறாக உள்ள உயிர்ப்பல தொகுதிகளைப் பெற்றெடுத்த உடம்பினையுடையவள், கடற்பெருக்கைவிட வடவை அளவை விட மிகுதியும் கண் தீப்பொறி பறக்க வெகுண்டு வரும்படியான எமனின் உயிரை வாங்கிய சிவனுக்கு ஏற்புடையவள், உலகியல் நிலையுணர் முனிவர்கள் காணும் தவப் பேறாக விளங்கும் முதன்மையானவளை வேண்டி நிற்பவர்களுக்கு அருளும் குற்றமற்றவள், பயிரவி, புல்லாங்குழல் பாட்டிசை என ஒப்பற்ற கிளி பயிலும் மொழியும் மாங்குயில் குரல் வளமும் கூடிய மொழியினள், சிலையையொத்த உருவை, மின்னல் இழை ஒத்த வடிவம் பெற்றிட கால் அடிப்பொடி சிதறிடத் தன்னை நாடி வழிநடை நடந்தவர்க்குச் சிறந்த துணை, குளிர்ந்த முழுமதி ஒளிக்கீற்றுகள் பல தோன்றலினால் ஆபரணங்கள் அணிந்த, சிகரங்களையுடைய இமயமலை ஈன்ற நல்ல பாருக்குப்பதி, திருமகளும் நாமகளுமாகச் சிறந்த கண் பூக்களின், நின்று அருளாகிய மழை பொழியும் கமலாம்பிகை இணையடி மலரிணை மனதில் ஏற்படும் தீங்கினை நீக்கிப் போற்றுவோம் (எ-று.).

## அருஞ்சொற்பொருள்

முக்காலமும் உணர்ந்தவர் முனிவரர் ஆதலின், உலகியலின் முக்காலமும் உணர்ந்தார் என்பதுபட "நிலையுணர்" என்பதற்கு உலகியல் நிலை எனப்பட்டது. தவப்பேறு - உருவகம். வேண்டுகிற்பார் - வினையாலணையும் பெயர். கிளிபயில் மொழி என்பதனால் சொன்னதையே சொல்பவள் என்பதும், மாங்குயில் கூற்றினை என்பதனால் இனிய குரலில் பேசுபவள் என்பதும் பெறப்படும். அடியார் தம்மை மின்னிழை யுரு வாய்த்திட காற்று சிதறிட வழிநடை போந்தவர் என்பது 'என் பெழுந்துவரிய யாக்கையர்' என முருகாற்றுப்படை மொழிவது போன்றுள்ளது "அலைமகள் கலைமகள் ஆர்ந்த கண்"களை யுடையாள் என்பதனால் பொருளும் ஞானமும் கண்களாக உடையவள் என்க. கண்பூ அருள்மழை என்பன உருவகங்கள். நாட்டுணை =

இலக்கணப் போலி, ஏத்துதும் - தன்மைப் பன்மை வினைமுற்று. மனதிலுறு தீங்காவன அழுக்காறு அவா வெகுளி இன்னாச் சொல் நான்கும் என்க.

## விநாயகர் துதி

கங்குலெழு வன்னக் கருங்கொண்ட லென்னக்
கேளபரந் திகழுமிரு பான்
கரதலங் கொடுவெளிக் குன்றெடுத் தோன்கருங்
காயம் வெண் காயமீது
பங்கமுற வீசொரு மருப்பிரு முறக்கனம்
பாய்மும் மதங்கணால் வாய்
பரவஞ்சு கரமாறு சிரமெழு மணித்தோள்
படைத்தவே ழத்தைநினை வாம்
புங்கலர் பெருந்திருவை யெங்கள்குல வாழ்வைப்
புராந்தகற் கினிய செல்வப்
புத்திரப் பேற்றையடி யாருளத் தனியினொளிர்
போதமய மணிகிளிக் கைச்
சங்கமா தவர்தேடு மாதபோ நிதியினைச்
சாட்குணிய வடிவ மோங்கு
சற்குருவை நற்குமா வெற்பாசை யற்பினொடு
சந்தத முகந்த ருளவே 4

### முறை வைப்பு

எடுத்த வினை இனிதே இடையூறின்றி முடிவான் முன்னர் ஒருமுறை கணபதியை வழிபட்டவர், கமலாம்பிகை மகன் ஆதலாலும், முன்னவனாகிய தான் தன் இளையவனைக் காத்தல் தன் கடமையாதலாலும் காப்புப்புருவத்து மீண்டும் ஈண்டு விநாயகனை நினைவாராயிற்று. வைப்பு இதனானே புலப்படும் (எ.று.).

### பதவுரை

புங்கவர் பெருந்திருவை = தேவர்கள் பெருந்திருவை, எங்கள் குல வாழ்வை = எங்கள் குலத்து வாழ்வை, புராந்தாற்கு இனிய செல்வப்புத்திரப் பேற்றை = சிவபெருமானுக்கு இனிய செல்வனாம் மகப்பேற்றை, அடியார் உளத்து அளியின் ஒர் போதமய மணி விளக்கை = அடியவர்கள் திருவுளத்து அருளுடன் விளங்கும் அறிவுருவாய மணி விளக்கை, சங்க மாதவர் தேடும்

மா தபோநிதியை = சங்கத்து மாதவத்தோர் தேடும் சிறந்த தவப்பொருளை, சாட்டுணிய வடிவம் ஒங்கு = ஆறு குணங்களை வெளிப்படுத்தும் வடிவம் சிறந்த, சற்குருவை = ஞான ஆசிரியனை, நற்குமர வெற்பரசை - நல்ல குமரமலை அரசனை, சந்ததமும் அற்பினொடு உகந்து அருளவே எப்பொழுதும் அன்பினொடு மகிழ்ந்து அருள் செய்யவே,

கங்கெழு வன்னக் கருங்கொண்டல் என்ன = இரவு எழும் வண்ணத்து கருமேகம் எனுமாறு, களேபரம் திகழும் = உடம்பு விளங்கும், இருபான் காதலங் கொடு = இருபது கைகளைக் கொண்டு, வெளிக்குன்றெடுத் தோன் = வெள்ளிய கைலையங் கிரியைப் பெயர்த்து எடுத்தவன், கருங்காயம் வெண்காய மது பங்கமுற வீசு = கரிய உடலை வெள்ளிய வானின்மீது கெடுதல் கூறும்படியாக வீசும், ஒரு மருப்பு = ஒற்றைக் கொம்பும், இரு முறம் = இரண்டு முறக் காதுகளையும் கனம்பாய் மும்மதமும் = பெரிய அளவில் பாய்ந்தொழுகும் மும்மதங்களையும், நால்வாய் = தொங்கும் வாயும், பரவஞ் சுரம் = சிறந்த ஐந்து கைகளும், மாறுமுகமும் = இவ்வாறு மாறுபட்ட முகமும், எழும் அணித்தோள் = பருத்து எழும்பிய அழகிய தோள்களையும், படைத்த வேழத்தை = பெற்றுள்ள வேழமுகக் கடவுளை, நினைவாம் = நினைவோம் (எ,று).

## பொழிப்பு

தேவர்கள் பெருந்திருவை, எங்கள் குலத்து வாழ்வை, சிவபெருமானுக்கு இனிய செல்வனாம் மகப்பேற்றை, அடியவர் திருவுளத்து அருளுடன் விளங்கும் அறிவுருவாய மணி விளக்கை, சங்கத்து மாதவத்தோர் தேடும் சிறந்த தவப்பொருளை ஆறு குணங்களை வெளிப்படுத்தும் வடிவம் சிறந்த ஞான ஆசிரியனை எப்பொழுதும் அன்பினோடு மகிழ்ந்து அருள் செய்யவே, இரவு எழும் வண்ணத்து கருமேகம் எனுமாறு உடம்பு விளங்கும் இருபது கைகளைக் கொண்டு வெள்ளிய கைலையங்கிரியைப் பெயர்த்து எடுத்தவன் கரிய உடலை வெள்ளிய வானின் மீது கெடுதல் கூறும்படியாக வீசும் ஒற்றைக் கொம்பும், இருமுடிக் காதுகளையும் பெரிய அளவில் பாய்ந்தொழுகும் மும்மதங் களையும் தொங்கும் வாயும் சிறந்து ஐந்து கைகளும் இவ்வாறு மாறுபட்ட முகமும் பருத்து எழும்பிய அழகிய தோள்களையும் பெற்றுள்ள வேழமுகக் கடவுளை நினைவோம் (எ.று).

### அருஞ்சொற்பொருள்

கணேபரம் - உடம்பு. குன்றெடுத்தவன் இராவணன். முறம் போன்ற காதுகளை முறம் என்றது உருவகம். கன்னமதம், கபோலமதம் பீலுமதம் ஆகிய மூன்றையும் மும்மதம் என்றார். எழுமணித்தோள் என்பதனை எழு + மணித்தோள் எனப்பிரித்து எஃகு போன்ற திண்ணிய தோளெனினும் அமையும். சாட்குணம் = ஆறுகுணம். 'ஆறுமுகம் ஆன பொருள் நீயருள வேண்டும்' என்பார் அருணகிரிநாதர்.

## பிரமதேவர்

செங்கே ழடுக்கிதழ்ப் பைந்தேறன் மாந்துஞ்
சிலீமுக மலர்ப்பீட மேற்
றெய்வநாள் மறையெனு மகாரைநா வென்னுநாற்
செவிலியிந் தாயர் வேட்டு
மங்காது மல்குற வளர்த்தெடுத் திடவந்த
மண்பொதுத் தந்தை நந்தை
மருவுமணி வண்ணமெய்ப் புடல்கூற் கொளாதருளு
மதலையை யகத்து ணினைவாம்
பொங்கேழ் கடற்புவன மியாவுநுதல் விழியிற்
பொடித்தங்க முழுது மீமப்
பொடிபூசி யெண்ணரு முயிர்த்தொகைக ளுய்யவருள்
புரிகுவா னட்ட மாடிக்
கொங்கேறு தாதகி தரித்தவெண் புயவரைக்
கோமா னளித்த புல்லை
குலவுநக ரேசனைக் குமரமலை வாசனைக்
குகனையருள் புரிய நிதமே. 5

### முறை வைப்பு

பிரமதேவர் = அறிவுத் தெய்வம், ஆக்கல் தெய்வம் வரும் இடையூறுகளை நீக்க விநாயகனை வழிபட்டபின், நூல் சிறப்புற அமைய பிரமதேவனை வழிபடுவாராயிற்று. வைப்பு முறையும் இதனான் விளங்கும்.

### பதவுரை

பொங்கு ஏழ் கடற்புவனம் யாவும் அலைபொங்கும் ஏழுகடல் சூழ் உலகம் முழுமையும், நுதல் விழியிற் பொடித்து = நெற்றிக்கண் நெருப்பினால் எரித்து, அங்கம் முழுதும் ஈமப்

பொடி பூசி = அனைத்து உறுப்புக்களிலும் திருநீறு பூசி, எண்ணரும் உயிர்த்தொகைகள் உய்ய = எண்ணற்ற உயிர்க் கூட்டங்களும் பிழைக்க, அருள் புரிவான் = அருள் செய்வான் வேண்டி, நட்டமாடி = நடனமாடி, கொங்கேறு தாதகி தரித்த = தேன் மிகுந்த ஆத்தி மாலை அணிந்த, வெண்புயவரைக் கோமான் அளித்த = வெள்ளிய் தோள்களாகிய மலைகளையுடைய தலைமகன் ஈன்று அளித்த, புல்லை நகர்க் குலவு = திருப்புல்லை நகரில் வாழும், ஈசனை = குமரேசனுக்கு குமரமலை வாசனை = குமரமலையின் கண் வாழ்பவனுக்கு, குகனை = குகனுக்கு, அருள் புரிய = அருள் செய்வதற்காக நிதமே = நாளும்.

செங்கேழ் அடுக்கிதழ்ப் பைந்தேறல் மாந்தும் = செந் நிறமுடைய அடுக்கடுக்கான இதழ்களில் அமர்ந்து பசுமையான தேன் பருகும், சிலீமுக மலர்ப்பீடம் மேல் = வண்டுகளின் மலர் இருக்கை மீது, தெய்வ நான்மறை எனும் மாசரை = தெய்வத் தன்மையுடைய நான்கு மறைகளெனும் மக்களை, நாவெனும் நாற்செவிலியாம் தாயர் = நாக்கு எனும் நான்கு வளர்ப்புத் தாயர், வேட்டு = விரும்பி, மங்காது மல்குற = மங்கிப் போகாது பெருகிட, வளர்த்து எடுத்திட வந்தமண் பொதுத் தந்தை = வளர்த்து எடுப்பதற்கு வந்த மண்ணின் பொதுவான தந்தை பிரமன், நந்தை = நமக்குத் தந்தை, மணிவண்ண மெய் மருவும் = நீலமணி நிகர்ந்த நிறத்து உடலினைப் பெற்று சூற்கொள்ளாத புயல் அருளும் மதலையை = சூற் கருமை நிறம் பெறாது புயல் எனும் திருமால் அருளிய மகவை பிரமனை, அகத்து நினைவாம் = மனதில் நினைப்போம் (எ.று.).

## பொழிப்பு

அலை பொங்கும் ஏழுகடல் சூழ் உலகம் முழுமையும் நெற்றிக்கண் நெருப்பினால் எரித்து அனைத் துறுப்புகளிலும் திருநீறுபூசி எண்ணற்ற உயிர்க் கூட்டங்களும் பிழைக்க அருள் செய்வான் வேண்டிய நடனமாடி, தேன்மிகுந்த ஆத்திமாலை யணிந்த வெள்ளிய தோள்களாகிய மலைகளையுடைய தலைமகன் ஈன்றளித்த திருப்புல்லை நகரில் வாழும் குமரேசனுக்கு, குமரமலையின் கண் வாழ்பவனுக்கு குகனுக்கு அருள் செய்வதற்காக நாளும், செந்நிறமுடைய அடுக்கடுக்கான இதழ்களில் அமர்ந்து பசுமையான தேன் பருகும் வண்டுகளின் மலர் இருக்கை மீது, தெய்வத் தன்மையுடைய நான்கு மறைகளெனும் மக்களை நாக்கு எனும் நான்கு வளர்ப்புத் தாயர் விரும்பி மங்கிப் போகாது பெருகிட, வளர்த்து எடுப்பதற்கு வந்த

மண்ணின் பொதுவான தந்தை பிரமன் நமக்குத் தந்தை, நீலமணி நிகர்த்த நிறத்து உடலினைப் பெற்று, சூற்கருமை நிறம் பெறாது புயல் எனும் திருமால் அருகிய மகளை பிரமனை மனதில் நினைப்போம்" (எ.று.).

### அருஞ்சொற்பொருள்

கேழ் = நிறம். சிலீமுகம் = வண்டு, நான்மறையெனும் மகாரை என்பதும், நாவெனும் நாற் செவிலியாம் தாயர் என்பதும் உருவகம். திருமாலின் நிறம் கருதி அவர் உடலை மெய்ப்புயல் என்றதும் உருவகம். நந்தை என்பது நம் தந்தை என்பதன் மரூஉ. தாதகி = ஆத்திமாலை. தற்காலத்தில் கொக்கு மந்தாரை என வழங்குவதாகும். சிவனின் தோள்கள் ஈமப்பொடி பூசியமையாலும் ஆத்திமாலை அணிந்தமையாலும் வெண்மையாயினமையின் அவற்றை 'வெண்புயவரை' என்றார். நகரேசனை, வாசனை, குகனை என்பனவற்றில் நான்கண் உருபு நிற்க வேண்டிய இடத்தில் இரண்டன் உருபு நின்றமையின் உருவு மயக்கம். (எழு : கடல் அட்லாண்டிக் கடல், பசிபிக் கடல், இந்துமாக் கடல், வடஆர்ட்டிக் பெருங்கடல், தென்ஆர்ட்டிக் பெருங்கடல், வங்காள விரிகுடாக்கடல், அரபிக் கடல்) ஏழு கடல் என்பனவாவன உப்பு, தேன், கருப்பஞ்சாறு, தயிர், நெய், பால், நன்னீர் என்பன. தற்போது உப்புக் கடல் தவிர பிற கடல்கள் இல்லை என்பர்.

## தேவேந்திரன்

நறைமருவு கற்பகத் தாரணி புயக்குன்றி
னாளுமயி ராணி கொம்மை
நகிலந் திளைத்துமவ ளிதழமுத மொடுகீர
நரலையரு ளமுத மாந்தி
யிறைமருவு பனிவரை முகட்டெழு கருங்கொண்ட
லேய்ப்பவோங் கயிரா வதத்
தெருத்தமிசை வருவான் மருத்துவ னிணைச்சரண
மிதயத் திருத்திநினை வாம்
பொறைமருவு மயில்கே டகங்கண்டை நளினமுயம்
பொற்புறுந் தண்டு சேவல்
போரிடங் கம்பகழி வாளபய வரதம்விற்
பூணுமா றிருகரனை வெண்

பிறைமருவு செஞ்சடைக் கயிலைப் பிரானெம்
பிராட்டிக்கு மகவாகி வான்
பிறங்கநிவர் குமரப் பிறங்கல்வரு சண்முகப்
பிள்ளையைக் காக்க வென்றே 6

**முறை வைப்பு**

காப்புப் பருவத்து முதற்கண் மும்மூர்த்திகளைத் தொழுது நூல் செய்வான் புகுந்த ஆசிரியர் தொழிமுறையான் அவர்களை முறைப்படத் தொழாது, காப்புப் பருவத்திற்கு ஏற்புடைக் கடவுளாகக் காத்தல் தொழிப்புரி திருமாலை வழிபட்டவர், தொழில் முறையான் முறைப்பட மொழியாமையின், அழித்தற் கடவுளாகவும் ஆதிக் கடவுளாகவும் தன்னின் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத நிலையில் இலங்கும் சிவனை வழிபடாது, திருமாலை வழிபட்டமையாலும், சிவனின் சீற்றத்திற்கு ஆளாகாமல் இருக்க அவனைத் தியாகராசராக வழிபட்டமை யோடு அமையாது, அவன் மனதில் மகிழ்வு மீக்கூற, அவன்தன் மனைவி மக்களைச் சேர்த்து அடுத்தடுத்து கமலாம்பிகை, விநாயகர் துதிகளைக் கூறி அச்சத்திற்கு இடமின்றி தன் ஆக்கல் தொழில்புரி பிரமனை தான் செய்யும் நூலாக்கத்திற்கு இறுதிவரை நின்று துணைபுரியான் வேண்டி, மும்மூர்த்திகளில் முதற்பட மொழிய வேண்டிய பிரமனை இறுதியாக மொழிந்து வழிபட்டு மும்மூர்த்திகளை இம்முறைப்பட வழிபட்ட ஆசிரியர் இயல்பின் தேவர்தம் காவலனாகிய தேவேந்திரனை அடுத்து வழிபடுவாராயிற்று (எ.டு.).

**பதவுரை**

பொறை மருவு மயில் = வலிமை பொருந்திய மயிலும், கேடகம் = கேடயமும், கண்டை = வீரக் கழலும், நளினம், உயர்பொற்புறு தண்டு சேவல் = நயம் பெருகி சிறப்புறு செங்கோலும், சேவலும், போரிடு அங்கம் பாழி = போரிடும் அங்கமான அம்பும், வாள் = வாளும், அபய வரதம் = அச்சம் தவிர அடைக்கலம் தரும் வரமும், வில் = வில்லும், பூனும் ஆறிரு கரனும் = அணியும் பண்ணிரண்டு கைகளையும்யுடையானை,

வெண்பிறை மருவு செஞ்சடைக் கயிலைப் பிரான் = வெண் பிறை பொருந்திய செஞ்சடைமுடிக் கயிலைத் தலைவன், எம்பிராட்டிக்கு மகவாகி = தம் தலைவிக்குப் பிள்ளையாகி, வான் பிறங்கல்வரு குமரப் பிறங்கல் வரு = வானின் விளங்க உயரிய

குமரமலை வரு, சண்முகப் பிள்ளையைக் காக்க என்றே = ஆறுமுகப் பிள்ளையைக் காப்பதற்காகவே,

நறை மருவு கற்பத் தாரணி = தேன் பொருந்திய கற்பக மலர் மாலை யணிந்த, புயக்குன்றின் ஆளும் = தோள் வலிமையினால் அரசாளும், அயிராணி கொம்மை நகிலம் திளைத்து = இந்திராணி கொம்மை முலைமீது விளையாடி, அவள் இதழ் அமுதமொடு = அவளது வாயிதழ் அமுதமொடு, நீர நரலை அருளமுதம் மாந்தி = சொற்கடல் அமுதமும் உண்டு, யிறை மருவு = இறைவன் சிவன் பொருந்திய, பனிவரை முகட்டு எழுகருங் கொண்டல் ஏய்ப்ப = இமயமலைச் சிகரங்களில் எழும் கருமையான மேகம் ஒத்த, அயிராவதத்து எருத்தமிசை வருவான் = அயிராவதம் எனும் யானையின் கழுத்தின் மீது ஏறி வருபவன், மருத்துவன்= மருத்துவன், இணைச் சரணம் = இடு திருவடிகளை, இதயத்து இருத்தி நினைவாம் = மனதில் இருத்தி நினைவோம் (எ.று.).

## பொழிப்பு

வலிமை பொருந்திய மயிலும் கேடயமும் வீரச்கழலும் நயம் பெருகி சிறப்புறு செங்கோலும் சேவலும் போரிடும் அங்கமான அம்பும் வாளும் அச்சம் தவிர அடைக்கலம் தரும் வீரமும் வில்லும் அணியும் பன்னிரண்டு கைகளையுடையானை வெண்பிறை பொருந்திய செஞ்சடைமுடிக் கயிலைத் தலைவன் தம் தலைவிக்குப் பிள்ளையாகி வானின் விளங்க உயரிய குமரமலை வரு ஆறுமுகப்பிள்ளையைக் காப்பதற்காகவே, தேன் பொருந்திய கற்பகமலர் மாலை அணிந்த தோள் வலிமையினால் அரசாளும் இந்திராணி கொம்மை முலை மீது விளையாடி அவளது வாய் இதழ் அமுதமொடு சொற்கடல் அமுதமும் உண்டு இறைவன் சிவன் பொருந்திய இமயமலைச் சிகரங்களில் எழும் கருமையான மேகம் ஒத்த அயிராவதம் எனும் யானையின் கழுத்தின் மீது ஏறி வருபவன் மருத்துவன் இடு திருவடிகளை மனதில் இருத்தி நினைவோம் (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

மயில் கேடகம் சண்டை தண்டுசேவல் பகழி வாள் வரதம் வில் = எண்ணும்மை, உம்மைத் தொகை. உறு தண்டு = உரிச்சொற் றொடர். பூணும் = செய்யும் என்னும் பெயரெச்சம், வெண்பிறை, செஞ்சடை = பண்புத் தொகை. வருவான் = வினையாலணையும் பெயர். நினைவாம். தன்மைப் பன்மை வினைமுற்று. வெள்ளிய

அயிராவதத்தினை கருங்கொண்டல் ஏய்ப்ப என்றது நிறத்தான் அன்றி வந்த தொழில் உவமை எங்க. ஆளும் என்பதனை அடுத்து வரும் அயிராணியோடு இணைத்துப் பொருள் கொள்ளாது வருவான் மருத்துவன் என்பதனோடு இணைத்தும் கொண்டு கூட்டிப் பொருள் கொண்டது. என்னை எனின் பாடல் தேவேந்திரன் மருத்துவன் துதி ஆதலின் என்க. தொழிலாகு பெயரான் பிறங்கல் என்றது மலையைக் குறித்தது. கயிலைப் பிரான் = ஏழன் உருபும் பயனும் உடன் தொக்கத் தொகை. இதழ் அமுதமொடு என்பதிலுள்ள ஒரு மூன்றன் உருபு உடன் நிகழ்வுப் பொருளது. மாந்தி = வினையெச்சம். அயிராணிக்குத் தனித்த துதியின்மையின் தேவேந்திரனோடு இணைத்தே அயிராணியை யும் இவண் நினைவு கூர்ந்தார் என்க.

## திருமகள்

தரங்க மெறிபாற் கடலுதித்துச்
சலசத் தனிமா ளிகைதழைப்பத்
தாமோ தரப்பேர்க் கொழுகொம்பிற்
றனியே படர்ந்தா ரன்பரக
வரங்கத் தளியாற் காலசைப்பா
லாடல் புரிந்து மின்னருள்பூத்
தழகின் மதவேட் கனிபழுத்த
வரும்பொற் கொடியி னடிதொழுவாம்
கரங்க மீரா றறினொடு
கமல விமலத் தடந்தோன்றிக்
ககனத் தறுமீன் முலையமுதங்
கனிவா யருந்திக் களிகூருங்
குரங்க மானு மதிமானுங்
கூர்ங்கண் முகக்குஞ் சரிமானுங்
குறப்பெண் மானு மகிழகுமரக்
குன்றெம் மானைப் புரந்திடவே. 7

முறை வைப்பு

முன்னர் திருமாலை வழிபட்ட ஆசிரியர், ஈண்டு திருமாலின் மார்பில் இயங்கும் திருமகளைத் தேவியர் அளவில் சிறப்பு முறையானே கமலாம்பிகைக்கு அடுத்தபடியாகவும்& ஆனால் மங்கையர் வழிபாட்டில் முற்படவும் மொழிந்தார். இதனான் வைப்புமுறையும் இனிதே விளங்கும் (எ.று.).

**பதவுரை**

கரங்கள் ஈராறினொடு = கைகள் பன்னிரண்டினோடு, கமல விமலத் தடம் தோன்றி = தெளிந்த மலர்ப் பொய்கையில் தோன்றி, ககனது அறுமீன் முலை அமுதம் = வானத்துக் கார்த்திகைப் பெண்களின் முலைப்பாலை கனிவாய் அருந்திக் களிகூரும் = கொவ்வைக் கனியெனச் சிவந்த வாயால் குடித்து மகிழ்வு மிகும், குரங்கம் மானும் = மான் மயங்கும் மதி மானும் = மதிமயங்கும், கூர்ங்கண் முகக் குஞ்சரி மானும் = கூர்ந்த பார்வையான் மிக்க கண்களையுடைய முகத்து யானை மயங்கும், குறப்பெண் மானும் = குறப்பெண் மயங்கும், மகிழ் குமரமலை = மகிழ்வு தரும் குமரமலை, எம்மானைப் புரந்திடவே = எம் தலைவனைக் காப்பதற்கே, தரங்கம் எறிபாற் கடல் உதித்து = அலை எறியும் திருப்பாற் கடலில் தோன்றி, சலசத் தனிமாளிகை தழைப்ப = மரை மலர் ஒப்பில் மாலிகை செழிப்படைய, தாமோதரப் பேர் கொழுகொம்பில் = தாமோதரன் எனும் கொழு கொம்பின்மீது, தனியே படர்ந்து ஆர் அன்பர் அகம் அரங்கத்து = தனித்துப் படர்ந்தும் சிறந்த அன்பர் தம் மனமேடையில் அளியால் கால் அசைப்பால் ஆடல் புரிந்தும் = கருணையால் காற்றெனும் உயிர்ப்பினால் திருவிளையாடல் புரிந்தும், இன்னருள் பூத்து = இனிய அருள் மலர்ந்து, அழகின் மதவேள் கனி பழுத்த = அழகிய மன்மதக் கனியானது பழுத்த, வரும் பொற்கொடியின் அடி தொழுவாம் - காக்க எழுந்தருளி வரும் பொற்கொடி எனும் திருமகளின் திருவடிகளைத் தொழுவோம் (எ.று.).

**பொழிப்புரை**

கைகள் பன்னிரண்டினொடு தெளிந்த மலர்ப் பொய்கையில் தோன்றி, வானத்துக் கார்த்திகைப் பெண்களின் முலைப்பாலைக் கொவ்வைக் கனியெனச் சிவந்த வாயால் குடித்து மகிழ்வுமிகும்; மான் மயங்கும், மதி மயங்கும், கூர்ந்த பார்வையான் மிக்க கண்களையுடைய முகத்து யானை மயங்கும், குறப்பெண் மயங்கும் மகிழ்வுதரும் குமரமலை எம்தலைவனைக் காப்பதற்கே,

அலை எறியும் திருப்பாற் கடலில் தோன்றித் தாமரை மலர் ஒப்பில் மாளிகை செழிப்படைய தாமோதரன் என்னும் கொம்பின் மீது தனித்துப் படர்ந்தும், சிறந்த அன்பர்தம் மனமேடையில் காற்று எனும் உயிர்ப்பினால் திருவிளையாடல் புரிந்தும் இனிய அருள் மலர்ந்து அழகிய மன்மதக் கனியானது

பழுத்த, காக்க எழுந்தருளிவரும் பொற்கொடி எனும் திருமகளின் திருவடிகளைத் தொழுவோம் (எ.று.).

### அருஞ்சொற்பொருள்

கனிவாய் = உவமைத் தொகை. மானும், மயங்கும், நிறைந்திருக்கும் என்பன ஈண்டு ஒரு பொருளன. 'அளக்கல் ஆகா அளவும் பொருளும், துளக்கலாகா நிலையும் தோற்றமும், வரப்பினும் வளந்தரும் வன்மையு மலைக்கே'' எனும் பவணந்தியார் கூற்றிலும், விஞ்சிய காண்பார் உள்ளம் மயக்கும் குமரமலைச் சிறப்பினை 'மதிமானும்' என்றார். கூர்ங்கண் முகக் குஞ்சரிமானும் என்பதற்கு தெய்வயானை மயங்கும் எனவும், குறப்பெண் மானும் என்பதற்கு வள்ளியம்மை மயங்கும் எனவும் பொருள் கொள்ளுதலும் ஏற்புடைத்து ''குரங்கம் மானும், மதிமானும், கூர்ங்கண் முகக் குஞ்சரி மானும், குறப்பெண் மானும்'' எனும் பகுதியில் சொற்பொருட் பின்வருநிலை யணியமைந்து சிறப்புறுதல் காண்க.

## கலைமகள்

பொறிதங்கு மார்பகப் புத்தேளி னுந்தியம்
பூவுதவு நான்மு கத்துப்
புங்கவனுடன்முதுக் குறைவாளர் மணிநாப்
புறந்திருந் தேழுல கமுஞ்
செறிதங்கு நல்லொலி யெழுப்பியிசை யொடுநித்
திலப்பணிக ணில வெறிப்பச்
சின்முத் திரைக்குறியை யங்குலிகொண் முண்டகச்
செல்வியை நினைந்து தொழுவாம்
முறிதங்கு கற்பகா டவியுழக் கிக்கோடு
மூதண்ட முகடு பொத்து
முனை முகத் தெவ்வஞ்ச வன்னெஞ் சிடித்துலவை
முரணற விசைத்து லவுதின்
கொறிதங்கு பிடரேறு சேவகத் திறல்கொண்ட
கொற்வயி லுற்ற குமரக்
கோமா னெவர்க்குமுயர் கோமா னிசைப்பரிய
குமரேச னைக்காக்க வே. 8

### முறை வைப்பு

அறிவுத் தெய்வம் கலைமகள். திருமால் உந்தியில் பிறந்தான் எனப்படும் பிரமனின் நாவின் இலங்கும் கலைமகளை,

திருமகளினும் இளையாள் எனும் நோக்கிலும், மக்கள் தமது இளமையில் வெறும் அறிவுத் திறத்தானே உணர்ச்சி வயப்பட்டுச் செயல்படுவர், ஆனால் முதுமையில் பட்டறிவின் பாற்பட்டுச் செல்வமும் போற்றிச் சிறப்பெய்துவர்; மற்றும் மற்றவர்க்கும் உதவி வாழ்வர் எனும் உலகியல் நோக்கில் இளையாளைப் பின்னரும் வழிபடுவாராயிற்று. வைப்புமுறையும் இதனானே விளங்கும்.

பதவுரை

உலவை முரணற விசைத்துலவு திண்கோடு = குலப்போர் முறை ஒழிய விரைந்துலவு திண்ணிய யானை, மூதண்ட முகடுபொத்து = பழைமையான இவ்வுலகின் முகட்டினைக் கிழித்து, முறிதங்கு கற்பகாடவி உழக்கி = இளந் தனிநிலை தங்கும் கற்பகக் காட்டினைக் கலக்கி, முனை முகத்தெவ்வஞ்ச வன்னெஞ்சிடித்து = போர்முனை முகத்துப் பகைவர் அஞ்ச, அவர்தம் வலிய நெஞ்சினையிடித்து, கொறிதங்கு பிடர் ஏறு = ஆட்டின் மின்னிடாத வன்மையுடைய அவ்யானையின் பிடரி ஏறு, சேவகத்திறல் கொண்ட குமர கோமான் = தானைத் தலைவனாம் திறன் கொண்ட குமரமலைத் தலைவன், கொற்ற அயில் உற்ற குமரக் கோமான் = செங்கோலாக அயில்வேல் உற்ற குமரமலைத் தலைவன், எவர்க்கும் உயர்கோமான் = யாவருக்கும் உயரிய குமரமலைத் தலைவன், இசைப்பரிய குமரேசனைக் காக்கவே = புகழ்தற்கரிய குமரமலைக் குமரேசனைக் காக்கவே.

பொறி தங்கும் மார்பகம் = திருமகள் தங்கும் மார்பகத்தையுடைய புத்தேளின் உந்தியம் பூ உதவு = திருமாலின் உந்தித் தாமரைப் பூப்பெற்றுதவிய, நான்முகத்துப் புங்கவனுடன் இருந்து = நான்முகத்துச் சிறந்தவனுடன் இருந்து, முதுக் குறைவாளர் மணி நாப்புறத்திருந்து - பேரறிவாளர் சிறந்த நாவின் மேல் தங்கியிருந்து, ஏழுலகமும் செறிதவகு நல்லொலி எழுப்பி = ஏழுலகமும் செறிந்த இனிய ஒலி எழுப்பி, இசையோடு நித்திலப் பணிகள் நிலவெறிப்ப = இசையோடு முத்து நகைகள் நிலவொளி செய்ய, சின்முத்திரையை அங்குலி கொள்சின் முத்திரை அடையாளத்தின் கை விரல் அளவில் கொண்ட முண்டகச் சொல்லியை = வெண்டாமரை மகளை, நினைந்து தொழுவாம் = நினைந்து தொழுவோம் (எ.று.).

பொழிப்பு

குலப்போர் முறை ஒழிய விரைந்துலவு திண்ணிய யானை பழைமையான இவ்வுலகின் முகட்டினைக் கிழித்து,

இளந்தளரிலை தங்கும் கற்பகச் சாட்டினைக் கலக்கி, போர் முனை முகத்துப் பகைவர் அஞ்ச, அவர்தம் வலிய நெஞ்சினை யிடித்து, ஆட்டின் பின்னிடாத வன்மையுடைய அவ்யானையின் பிடரி ஏறு தானைத் தலைவனாம் திறன் கொண்ட குமரமலைத் தலைவன், செங்கோலாக அயில் வேல் கூற்ற குமரமலைத் தலைவன், யாவர்க்கும் உயரிய குமர மலைத் தலைவன் புகழ்தற் கரிய குமரமலைக் குமரேசனைக் காக்கவே.

திருமகள் தங்கும் மார்பகத்தையுடைய திருமாலின் உந்தித் தாமரைப்பூப் பெற்றுதவிய நான்முகத்துச் சிறந்தவனுடன் இருந்து, பேரறிவாளர் சிறந்த நாவின்மேல் தங்கியிருந்து ஏழுலகமும் செறிந்த இனிய ஒலி எழுப்பி, இசையோடு முத்து நகைகள் நிலவொளி செய்ய சின்முத்திரை அடையளாத்தினை விரலளவில் கொண்ட வெண்டாமரை மகளை நினைந்து தொழுவோம்.

### அருஞ்சொற்பொருள்

கோடு - யானையைக் குறித்தது சினையாகு பெயர். உலவை = குலம். ஈண்டு தேவாசுரகுலங்களைக் குறித்தது. சொறி = ஆடு. புங்கவன் = இறந்தவன், முதுக்குறைவாளர் = பேரறிவாளர். சின்முத்திரை; பசுவாகிய உயிர், தன்முனைப்பு, வினைப்பயன், மயக்கம் ஆகிய முக்கட்டறுத்து இறைநிலை அடையும் ஓர் அடையாளக் குறிப்பு. எங்குலிகை = விரல், அங்குலாய்தி.

## சத்த மாதர்கள்

விடையுவண மஞ்ஞைஞெவா ரணமலகை யோதிமம்
விறற்சிங்க வேறு கைத்து
வில்லாழி யெஃகம்வச் சிரமுத் தலைக்கழுமுள்
விரியுமறை கூரலத் திண்
படைகொண்மா கேச்சுவரி நாரணிகௌ மாரிவான்
பரவிந்தி ராணி யுக்ர
பயிரவியொ டபிராமி வாராகி யெழுவரிரு
பதுமசர ணங்கணினை வாம்
நடையைவே றற்குறு மனப்பெடைகள் கண்டுள்ள
நாணமீக் கொண்டு படரும்
நலமுடைப் பிடிநடைக் கொடியிடைக் கடைசியர்
நறும்பணைசெல் சோணா டனை

கடைவாயின் முகிலொலி யடங்கமணி முழவங்
கறங்குமா டங்கொள் புல்லைக்
ககனவிஞ் சையர்பாவு குமரவொண் கிரிமருவு
கமழ்கடம் பனைய ருளவே. 9

## முறை வைப்பு

இனித் தெய்வங்களைத் தனித்தனி வழிபட்டமை ஒழித்து, ஒழிந்தார் தம்மை வழிபடுவார் முதற்கண் ஏழு மாதர்களை வழிபடுவராயிற்று. திருமகள் கலைமகள் இருவரையும் அடுத்து ஏழு மாதர்களை வழிபடுவாராதாயின் வைப்பு முறையும் இதனானே விளங்கும்.

## பதவுரை

நடையை வேறற்குலும் அளப்பெடைகள் = நடையழகை வெல்வதற்கு உடரும் அன்னப் பெண் பறவைகள், கண்டுள்ளம் நாணம் மீக் கொண்டு = பார்த்து மனம் நாணம் மிகக் கொண்டு, படரும் படர்ந்து செல்லும், நலமுடைப் பிடிநடை, கொடி யிடைக் கடைசியர் இனிய பெண்யானை யன்ன, நடையுடைய கொடி போன்ற இடை உடைய உழவுப் பெண்டிருடன் கூறும் பணை செல் சோணாடனை = மணங்கமழும் பண்ணைகளே விளங்கும் சோழ நாட்டுத் தலைவனை (சோழனை) கடைவாயின் முகிலொலியடங்க மணி முழவம் கறங்கும் = வாயிற் கடையில் இடி முழக்கமும் ஒடுங்க அணி சிறந்த முழவம். ஒலிக்கும் மாடங்கொள் புல்லை = மாடவீதிகளையுடைய புல்லை நகரின்மீது ககன விஞ்சையர் பரவு = வானின் உலவு தேவர் வணங்கும், குமர ஒண்கிரி மருவு = இளமையும் ஒளியும் மிக்க குமர மலையில் வாழும், கமழ் கடம்பனை யருளவே = மணம்மிக்க கடம்புமாலை அணிந்த குமரக்கடவுளுக்கு அருள் செய்யவே,

விடை உவணம் மஞ்ஞை வாரணம் அலகை ஓதிமம் விறல் சிங்கவேலு உகைத்து = காளை, கருடன், மயில், யானை, பேய், அன்னம், வெற்றிச் சிங்கவேலு செலுத்தி, வில் ஆழி எங்கு அம்வச்சிரம் முத்தலை கழுமுன் விரியுமறை = வில்படை, சக்கரப் படை, வேற்படை, இருதலைச் சூலம், சூலம், கழு, முள் ஆகியன விரிந்த வேதங்களாயின் கூரல் திண்படைகள் கொள் = மிகுந்த துன்பந்தரும் அத்திண்ணிய படைகளைக் கைக்கொண்ட, மகேச்சுரி, நாராயணி, கௌமாரி, வான்பர இந்திராணி, யுக்ர பயிரவியோடு அபிராமி, வராகி எழுவர் = பார்வதி, நாராயணி,

கௌமாரி, இந்திராணி, சினம்மிக்க பைரவி, அபிராமி, வாராகி எனும் எழுவர், இருபதும சரணங்கள் நினைவாம் = இணைத் திருவடிகளை நினைவோம் (எ.று.).

## பொழிப்பு

நடையழகை வெல்வதற்கு வரும் அன்னப்பெண் பறவைகள் பார்த்து மனம் நாணம் மிகக் கொண்டு படர்ந்து செல்லும். இனிய பெண்யானை யன்ன நடையுடைய கொடி போன்ற இடையுடைய உழவுப் பெண்டிருடன் மணங்கமழும் பண்ணைகளே விளங்கும் சோழநாட்டுத் தலைவனை (சோழனை) வாயிற் கடையில் இடி முழக்கமும் ஒடுங்க அணி சிறந்த முழவம் ஒலிக்கும் மாடவீதிகளையுடைய புல்லை நகரின்மிது வானின் உலவு தேவர் வணங்கும் இளமையும் ஒளியும் மிக்க குமர மலையில் வாழும் மணம்மிக்க கடம்புமாலை அணிந்த குமரக்கடவுளுக்கு அருள் செய்யவே, காளை, கருடன், மயில், யானை, பேய், அன்னம், வெற்றிச் சிங்கவேறு செலுத்தி வில்படை சக்கரப்படை, வேற்படை, இருதலைச்சூலும், சூலம், கழு முள் ஆகியன விரிந்த மறைகளின் மிகுந்த துன்பம் தரும் அத்தின்னிய படைகளைக் கைக்கொண்ட பார்வதி, நாராயணி, கௌமாரி, இந்திராணி சினம்மிக்க பைரவி, அபிராமி, வாராகி எனும் எழுவர் இணைத்திருவடிகளை நினைவோம் (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

ஏழுமாதர்களின் ஊர்திகளையும், அவர்தம் படைக் கலங்களையும் முறைப்படுத்தி முறைநிரல் நிரையணி நயம்பட இப்பாடலில் உரைத்தார். சோழநாட்டின் எழுந்தருளிய முருகனைச் 'சோணாடன்' என்றார். புல்லை நகர் ஆயினையின் 'மாடம்' மாடவீதி எனப் பொருள் உரைப்பட்டது (எ.று.)

# முப்பத்து மூவர்

மலர்தலைப் புவனத்தும் வானகத் தினுமுள்ள
வல்லிருட் டொகுதி யகல
வான்மதிக் குரியசெங் குமுதங்கள் குவிதர
வயங்கொளி பரப்பி யெங்கும்
பொலியுமா றிருவர்பதி னொருவரென் வசுக்களொடு
புகழ்மருந் துவரிரு வராம்

புத்தேளிர் வர்க்கமுப் பத்துமுக் கோடியவர்
பொற்பதத் தைத்துதிப் பாம்
அலகில்பற் பலவுயிர்த் தொகையனைத் துந்தந்
தளித்தவையி லயமா வதற்
காதிமத் யாந்தரகி தப்பொருளு மா யுழுவ
லடியவர்க் கெளியவுரு வாய்க்
குலவியல ரவர்மனக் கோதகற் றிக்கதி
கொடுத்தற்கு வந்த புல்லைக்
குழகனதி யழகனைக் குலிசன்மகள் கொழுநனைக்
குமரமலை யனைய ருளவே.

முறை வைப்பு

காப்புப் பருவத்து இறுதியில் அனைத்துத் தெய்வங்கட்கும் பொதுவாக முப்பத்து முக்கோடி வேதர்களையும் நினைந்து பாடியது. வைப்பு முறையும் இதனானே விளங்கும்.

பதவுரை

அலகில் பற்பல உயிர்த்தொகை யனைத்து உகந்து = அளவற்ற, பல்வேறு உயிர்க் கூட்டங்கள் அனைத்திலும் படைத்து, அளித்து அவை இலியம் ஆவதற்கு = காத்து அவைகள் இரண்டறக் கலப்பதற்கு, ஆதிமத்யாந்தரகிதப் பொருளுமாய் = முதல் இடை கடைமுழுப் பொருளுமாய், உழுவல் அடியவர்க்கு = விடாது தொடர்ந்த அன்புடைய அடியவர்களுக்கு, எளிய உருவாய்க் குலவி = எளிய வடிவாய்த் தோன்றி, அவரவர் மனக் கோதற்றி = ஒவ்வொருவரின் மனச்சிக்கல் நீக்கி, கதி கொடுத்தற்கு வந்த = நற்பேறு அளிப்பதற்கு வந்த, புல்லைக் குழகன் அதியழகனை = புல்லை நகர் இளவலை மிகுதியும் அழகானவனை, குலிசன் மகள் கொழுநனை = தெய்வ யானைக்குக் கணவனை, குமர மலையனை = குமரமலைக்கண் எழுந்தருளியுள்ளவனை, அருளவே = அருள் புரிவதற்காகவே,

மலர்தலை வனத்தும் வானத்தினுமுள்ள = வளர்ந்து வரும் உலகத்தினும், வானத்தினுமுள்ள, வல்லிருள் தொகுதியகல = வலிய இருட்கூட்டம் நீங்க, வான்மதிக்குரிய செங்குமுதங்கள் குவிதர = வானின் மதிக்குரிய செங்குமுதமலர்கள் மூடிக்கொள்ள, வயங்கு ஒளி பரப்பியெங்கும் பொலியுமாறு = மிகுந்த ஒளி பரப்பி எங்கும் விளங்குமாறு, இருவர் பதினொருவர் எண் வசுக்களோடு = இரண்டு பதினொன்று இருபத்திரண்டும் எட்டும் ஆக முப்பது

தேவர்களோடு, புகழ் மருத்துவர் இருவராம் = புகழ்மிக்க மருத்துவர்கள் இருவராக, புத்தேளிர் வர்க்க முப்பத்து மூக்கோடியவர் = தேவரினம் முப்பத்து முக்கோடியவர்களின், பொற்பதத்தைத் துதிப்பாம் = பொன் திருவடிகளைத் துதித்துப் போற்றுவோம் (எ.று.).

## பொழிப்பு

அளவற்ற பல்வேறு உயிர்க் கூட்டங்கள் அனைத்தும் படைத்தும் காத்தும், அவை (தன்னுள்) இரண்டறக் கலப்பதற்கு, முதல் இடை கடை முழுப்பொருளுமாய், விடாது தொடர்ந்த அன்புடைய அடியவர்களுக்கு எளிய வடிவாய்த் தோன்றி, ஒவ்வொருவரின் மனச்சிக்கல் நீக்கி, நற்பேறு அளிப்பதற்கு வந்த புல்லை நகர் இளவலை மிகுதியும் அழகானவனை, தெய்வ யானைக்கும் கணவனை, குமரமலைக்கண் எழுந்தருளியுள்ளவனை அருள்புரிவதற்காகவே, வளர்ந்து வரும் உலகத்தினும் வானத்தினுமுள்ள வலிய இருட்கூட்டம் நீங்க, வானின் மதிக்குரிய செங்குமுத மலர்கள் மூடிக்கொள்ள மிகுந்த ஒளிபரப்பி, எங்கும் விளங்குமாறு இரண்டு பதினொன்று இருபத்திரண்டும் எட்டும் ஆக முப்பது தேவர்களோடு புகழ்மிக்க மருத்துவர் இருவராகத் தேவரினம் முப்பத்து முக்கோடியவர்களின் பொன் திருவடிகளைத் துதித்துப் போற்றுவோம் (ஈ.று.).

## அருஞ்சொற்பொருள்

வயங்கு = மிகுந்த, புத்தேளிர் வர்க்கம் = தேவர் இனம். லயம் = இலயம், இரண்டறக் கலத்தல். உழுவல் = இடைவிடாது தொடர்ந்த அன்பு. குளிசன் = தேவேந்திரன். அசுவனி குமாரர்கள் இருவரையும் 'மருத்துவர் இருவர்' என்றார். என வசுக்கள் = அனலன், அணிலன், ஆபத்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன் எனும் எண்மர்.

காப்புப் பருவம் முற்றிற்று

# செங்கீரைப் பருவம்

பிள்ளைத் தமிழ் இலக்கணப்படி காப்புப் பருவத்தின் அடுத்த பருவம் செங்கீரைப் பருவம். நூல் முகத்து செங்கீரைப் பருவம் இத்தன்மைத்து என்பார், பிள்ளைகள் ஒருகாலை முடக்கி, ஒரு காலை நீட்டி, யிருகைகளையும் நிலத்தூன்றித் தலை நிமிர்த்து முகம் அசைத்தாடும் நிலை'' என விளக்கம்

அளித்துள்ளார். இவ்விளையாட்டுக் குழந்தையின் ஐந்தாம் திங்கள் தொடங்கி அவர்தம் படுக்கையில் நிகழ்வது என்பர்.

தண்டுக்கீரை இனத்தில் செங்கீரை என ஒருவகையுண்டு. அது அதன் நாற்றுப் பருவத்தில் காற்றில் அசைந்தாடும் போது காணும் இன்பத்தினும், பெற்றோர்க்கும் பிறருக்கும் குழந்தையின் இவ்விளையாட்டுப் பருவம் பேரின்பம் பயப்பது ஒன்றாகலினால் பிள்ளைத் தமிழில் ஒரு பருவமாக விளங்குகின்றது. செம் + நீர் = செவ்விய மழலைச் சொல்லை பேசத் தொடங்கும் பருவம் என்பது மாம்.

செங்கீரைப் பருவம் குழந்தையின் ஐந்தாம் திங்கள் தொடங்கி நடைபெறுவதாயினும், பாட்டுடைத் தலைவனின் பெருமைகளை, செயல்களை எல்லாம் இப்பருவத்தில் வைத்துப் பாடுவது என்க.

**செங்கீரை 1**

*பூரண விலாசமுக் கட்கருணை யமுதமும்*
*புரிசடை. யிலங்கு திங்கள்*
*பொங்கமுத முங்கங்கை யமுதமொடு விரவிப்*
*பொலிந்தவர் னந்தவுருவாம்*
*நாரணன யற்கரிய காரணக் கடவுள்வாழ்*
*நற்கயிலை வெற்பு மேனை*
*நகிலப் பயம்பாய வளர்மர கதக்கொடி*
*நயந்தவிம யாச லமுடன்*
*வாரணங் குலவுமந் தரசயில மைநாக*
*வரையிரவி மதிய மென்றும்.*
*வலஞ்சுலவு பொன்மகா மேருமலை யஞ்சக்ர*
*வாளகிரி முதலெ வைக்கும்*
*சீரணி மணித்திலக மாங்குமர மலைமுதல்வ*
*செங்கிரை யாடியருளே*
*தில்லையம் பகவனருள் புல்லையம் பதிமுருக*
*செங்கிரை யாடிய ருளே.*

பதவுரை

பூரண விலாசம் முக்கண் கருணை அமுதமும் = மூன்று கண்களில் இருந்து வெளிப்படும் அருள் அமுதமும், புரிசடை யிலங்கு திங்கள் பொங்கு அமுதமும் = திரிபுரி வார்சடையின் விளங்கும் நிலவொளி அமுதமும், கங்கை அமுதமொடு = கங்கைநீர் அமுதமொடு, விரவிப் பொலிந்த ஆனந்த உருவாம் =

கலந்து விளங்கும் பேரின்ப வடிவாம், நாரணன் அயற்கு அரிய காரணக் கடவுள் = நாராயணனாலும் பிரமனாலும் அரிதற்கரிய காரணக் கடவுளாம் சிவன், வாழ்நற் கயிலை வெற்பும் - வாழ்கின்ற நல்ல கயிலைப் பக்கமலையும் ஏனை நகிலப்பயம்பாய = பிற தாய்ப்பாலாம் நீர் பாய, வளர் மரகதக் கொடி நயந்த இமயாசலமுடன் = வளரும் மரகதக் கொடியாம் பார்வதி விரும்பிய இமய மலையுடன், வாரணங் குலவு மந்தரசயிலம் = யானைகள் உலவும் மந்தர மலை, மைநாக வரை = மைநாகமலை, இரவி மதியம் என்றும் வலம்சுலவு பொன்மகா மேருமலை = கதிர் மதியம் அகியன இரண்டும் நாளும் வலம் வரும் பொன் நிறமான பெரிய மேருமலையும் அஞ்சு அக்கர வாளகிரி முதல் = ஐந்தெழுத்துச் "சக்கர வாள" மலை முதல், எவைக்கும் சீரணி மணித்திலகமாம் = யாவற்றுக்கும் சிறப்பும் அழகும் மணித்திலகமும் ஆகின்ற, குமர மலை முதல்வ = குமரமலையின் முதல்வனே, செங்கீரை யாடியருளே = செங்கீரையாட்டம் விளையாடி அருள்வாயாக, தில்லையம் பகவன் அருள் = தில்லையம்பதியில் குடிகொண்ட ஆடல் வல்லான் அருளிய, புல்லையம்பதி முருகன் செங்கீரை யாடியருளே = புல்லை நகர் முருக! செங்கீரை விளையாடி யருள்வாயாக (எ.று.).

## பொழிப்பு

பேர் அழகாய மூன்று கண்களில் இருந்து வெளிப்படும் அருள் அமுதமும், திரிபுரி வார்சடையின் விளங்கும் வளர்பிறை நிலவொளி அமுதமும், கங்கை நீர் அமுதமுமொடு கலந்து விளங்கும் பேரின்ப வடிவாம், நாராயணனாலும் அயனாலும் அறிதற்கரிய காரணக்கடவுளாம் சிவன் வாழ்கின்ற நல்ல கயிலைப் பக்கமலையும் ஏனைய தாயப்பாலியம் நீர்பாய வளரும் மரகதக் கொடியாம் பார்வதி விரும்பிய இமயமலையுடன், யானைகள் உலவும் மந்தர மலை, மைநாக மலையும் கதிர்மதியம் ஆகியன இரண்டும் நாளும் வலம் வரும் பொன்னிறமான பெரிய மேரு மலையும் ஐந்தெழுத்துச் சக்கரவாள மலை முதலாய வற்றுக்கும் சிறப்பும் அழகும் மணித்திலகமும் ஆகும் குமர மலையின் முதல்வனே செங்கீரையாட்டம் விளையாடி அருள் வாயாக; தில்லையம்பதியில் குடிகொண்ட ஆடல் வல்லான் அருளிய, புல்லைநகர் முருக! செங்கீரை விளையாடி அருள் வாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

முக்கண் - பண்புத் தொகை, திங்கள் பொங்கு என்பதனைப் போற்றி வளர்பிறை எனப் பொருள் கொள்க.

வெற்பு - பக்கமலை. நகிலப்பயம் - தாய்ப்பால். பயம் - ஈற்றுப் போலி. நாகம் - மேகம். மை நகாம் - கருமேகம். சக்கர வாளம் - ஒற்று நீக்கி ஐந்தெழுத்து சீரணி மணித்திலகம் - உம்மைத் தொகை. காரணக் கடவுள் - அருவுருவடிவாய தீவடிவினன் சிவன்.

## செங்கீரை 2

கதிகொண்ட செஞ்சூட் டுடைக்கிறண பானுவெங்
கதிர்பாய லொண்பருக் கைக்
கன் முளரி முளரியந் தாள்பாய வேனலங்
கானக நடந்தி தணமேற்
றுதிகொண்ட சேற்கட் குறக்கொடி யுறக்கண்டு
துவரிதழ்ப் பருகி வதுவைத்
தொடையளித் தற்கா தரங்கொண்டு வாதாடு
சொல்லிற் கிணங்காமை யான்
மதிகொண்ட செஞ்சடைக் கடவுண்மத வாரண
மருட்டித் துரத்த வஞ்சி
வஞ்சியுங் கெஞ்சியணை யக்கொஞ்சி மணிமுலைபின்
மருவுபன் னிருவாகனே
திதிகொண்ட மான்மருக குமரவே தண்டகுக
செங்கீரை யாடிய ருளே
தில்லையம் பகவனருள் புல்லையம் பதிமுருக
செங்கீரை யாடி யருளே.

பதவுரை

கதி கொண்ட செஞ்சூட்டுடை கிரண பானு = விரைந்த செலவினையுடைய தேர் ஏறிவரும் செம்மைநிறமும் வெப்ப முடைய கதிர்களைப் பெற்ற ஞாயிற்றின், வெங்கதிர் பாய = வெம்மைக் கதிர் ஒளி தள்ளி வீச, வொண் பருக்கை கல்முளரி = ஒள்ளிய பருக்கைக் கற்களிலும், முட்களிலும், முளரியம் தாள் பாய = அழகிய தண் தாமரைத்தாள் பதிய ஏனலங்க கானகம் நடந்து = தினப்புனம் சென்று, இதணமேற்றுதி கொண்ட - பரண் கோலே தோன்றும் சேல்கண் = சேல்மீன்கள், குறக்கொடியுறக் குடிக்குடியில் தோன்றி கொடியன்னாளை யடை நண்டு துவரிதழ் பருகி = பார்த்துச் செவ்விதழ் அமுது அருந்தி, வதுவைத் தொடை யளித்தற் காதரங் கொண்டு, வாதாடு சொல்லிற்கிணங் காமையான் = வாதாடும் சொற்கு இணங்காததால், மதிகொண்ட செஞ்சடைக் கடவுள் = இளம்பிறை யணிந்த செஞ்சடைமுடிக் கடவுளின், மதவாதணம் மருட்டித் துரத்த அஞ்சி = மதலையாம்

மத யானையால் மருளச் செய்து துரத்தப் பயந்து, வஞ்சியும் கெஞ்சியணைய = வஞ்சிக் கொடியாள் வள்ளியும் கெஞ்சி அருகில்வர, கொஞ்சி மணி முலையின் மருவு = அவளுடன் கொஞ்சி அவளது மணிமாலைகள் உருளும் மார்பின் மீது தழுவும், பன்னிரு வாகனே பன்னிருகை யழகனே, திதிகொண்ட மால்மருக = காத்தல் தொழில்புரி திருமால் திருமருகனே குமர வேதண்ட குக = குமரமலைக்குகனே, செங்கீரை யாடியருளே = கையசைத்து செங்கீரை யாட்டம் விளையாடி அருள்வாயாக, தில்லையம் பகமும் = தில்லையம் பதியில் குடிகொண்ட ஆடல் அழகர் அருளிய, புல்லையம்பதி முருகன் செங்கீரை யாடி யருளே = புல்லை நகர் முருக! செங்கீரை விளையாடி யருள்வாயக (எ.று.).

## பொழிப்பு

விரைந்த செலவினையுடைய தேர் ஏறிவரும் செந்நிற முடைய கதிர்களைப் பெற்ற ஞாயிற்றின் வெம்மைக் கதிர்ஒளி தன்னிடம் வீச, ஒள்ளிய பருக்கைக் கற்களிலும் முட்களிலும் அழகிய தாமரைத்தாள் பதிய தினைப் புனம் சென்று, பரண்மேல் தோன்றும் சேல்மீன்கள், குறம் குடியில் தோன்றிய கொடியன் னாளை யடைய, பார்த்துச் செவ்விதழ் அமுது அருந்தி மண மாலை அளிப்பதற்கு அன்பு கொண்டு வாதாடும் சொற்கு இணங்காததால், இளம்பிறையணிந்த செஞ்சடைமுடிக் கடவுளின் மதலையாம் மதயானையால் மருளச் செய்து, துரத்தப் பயந்து வஞ்சிக் கொடியாள் வள்ளியும் கெஞ்சி அருகில் வர, அவளுடன் கொஞ்சி அவளது மணிமாலைகள் உருளும் முலையின் மீது தழுவும் பன்னிருகை யழகனே! காத்தல் தொழில்புரி திருமால் திருமருகனே! குமரமலைக் குகனே! செங்கீரை ஆட்டம் விளையாடி அருள்வாயாக; தில்லை யம்பதியில் குடிகொண்ட ஆடல் அழகர் அருளிய புல்லை நகர் முருக! செங்கீரை விளையாடி யருள்வாயாக.

## அருஞ்சொற்பொருள்

சேல்கண் = உவமைத் தொகை. துவரிதழ் = பவளவிதழ், செவ்விதழ். ஆதரம் = அன்பு. வாதாடும் - உரையாடும் வஞ்சி - உருவகம் வள்ளியைக் குறித்தது. வஞ்சி - சிந்தில் கொடி குறக்கொடி என்பதிலுள்ள குற என்பது குறக்குடி என்பதன் கடைக் குறை. குறச்கொடி - ஏழன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை. கொடி - உருவகம். ததி = காத்தல். வேதண்டம்

= மலை, வெங்கதிர், செஞ்சடை - பண்புத் தொகைகள். உதி - உதித்தல்; முதனிலைத் தொழிற் பெயர்.

## செங்கீரை 3

பத்திவிதை வித்தியா னந்தநீர் விட்டுநற்
பயனுறக் கருதுமடி யார்
யதுமவித யக்கோயின் மேவியழி யாமுத்தி
பற்றியே றற்கேணி யாம்
நித்தியத் துவமான மெஞ்ஞான வந்நெறியு
ணேயமுறு வான்கரு ணையி
னிலைமையி தென்னவறி குறியாற் றெரித்தருளு
நிமலசற் குருநா தனே
பித்திகை நிரைத்தமணி மாடவெண் கொடியண்ட
பித்திகை துளைத்தண்டர் கால்
பின்னலான் வானரம் பையருக்கு வெள்குறும்
பெற்றியுட் கொண்டுதிகை யாச்
சித்திரம் போலுறப் புரிருமர மலையதீப
செங்கீரை யாடிய ருளே
தில்லையம் பகவனருள் புல்லையம் பதிமுருக
செங்கீரை யாடிய ருளே.

பதவுரை

பத்தி விதை வித்து = அன்பு விதை விதைத்து, ஆனந்த நீர் விட்டு = இன்பநீர் ஊற்றி, நற்பயனுறக் கருதும் = நற்பயன் அடைய நினைக்கும், அடியார் பதும இதயக் கோயில் மேவி = திருஅடியார்களின் மறைமலர் இதயக் கோயிலில் தங்கி, அழியா முத்தி பற்றி யேறற்கு ஏணியாம் = அழியாத முத்திப் பேற்றைக் குறிக்கோளாகக் கொண்டு கடையேற ஏணியாக விளங்கும், நித்தியத்துவமான = அழிவில்லாத இயல்பான, மெஞ்ஞான = உண்மையான அறிவும், அந்நெறியும் = அந்த அறிவு வழியும், நேயமுறு வான் கருணையின் = அன்புற்ற பேரருளின் நிலைமையீ தென்ன = நிலைமை யிதுதானென்று, அறிகுறியால் தெரிந்தருளும் = அடையாளக் குறிப்பால் வெளிப்படுத்தியருளும், நிமல சற்குரு நாதனே = குற்றமற்ற ஞானாசிரியத் தலைவனே, பித்திகை நிரைத்த மணி மாட வெண்கொடி யண்ட பித்திகை துளைத்து - சுவரில் வரிசைப்படுத்திய மணிமருவு மேல் மாடத்தின் வெள்ளிய கொடிகள் அண்டச் சுவரினைத் துளைத்து, அண்டர் கால் பின்னலான் = வேதர்களின் கால்களில் சிக்குதலான், வான்

அரம்பையர்க்கு வெள்குறும் = மேலுலகத்துத் தெய்வப் பெண்டிருக்கு நாணும், பெற்றுயுட் கொண்டு = இயல்பை மனங்கொண்டு, திசையா = திகைத்து, சித்திரம் போலுறப்புரி குமரமலை அதிப = ஓவியம் போலப் பொருந்தச் செய்யும் குமரமலைத் தலைவனே, செங்கீரையாடி யருளே = செங்கிரை யாட்டம் விளையாடித அருள்வாயாக, தில்லையம் :சவனருள் = தில்லையம் பதியில் குடிகொண்ட ஆடல் அழகர் அருளிய, புல்லை யம்பதி முருகன் செங்கீரை யாடியருளே = புல்லை நகர் முருக! செங்கீரை யாடி யருள்வாயாக (எ.று).

## பொழிப்பு

அன்புவிதை விதைத்து இன்பநீர் ஊற்றி நற்பயன் அடைய நினைக்கும் திருஅடியார்களின் மரைமலர் இதயக் கோயிலில் தங்கி அழியாத முத்திப் பேற்றைக் குறிக்கோளாகக் கொண்டு கடைத்தேற ஏணியாக விளங்கும் அழிவில்லாத இயல்பான உண்மையான அறிவும் அந்த அறிவு வழியும் அன்புற்ற பேரருளின் நிலைமையிதுதானென்று அடையாளக் குறிப்பால் வெளிப் படுத்தியருளும், குற்றமற்ற ஞானாசிரியத் தலைவனே, சுவரில் வரிசைப்படுத்திய மணி மருவு மேல் மாடத்தின் வெள்ளிய கொடிகள் அண்டச் சுவரினைத் துளைத்துத் தேவர்களின் கால்களில் சிக்குதலான் மேலுலகத் தெய்வப் பெண்டிருக்கு நாணும் இயல்பை மனங்கொண்டு திகைத்து ஓவியம் போலப் பொருந்தச் செய்யும் குமரமலைத் தலைவனே, செங்கிரை யாட்டம் விளையாடி யருள்வாயாக; தில்லையம்பதியில் குடி கொண்ட ஆடல் அழகர் அருளிய புல்லைநகர் முருக! செங்கீரை யாடி யருள்வாயாக (எ.று).

## அருஞ்சொற்பொருள்

இறைவன் மாட்டு ஆம் அன்பு இயல்பின் அன்றி பிறிதொன்றன் பாற்பட்டு வருதலின் "பத்தி விதைவித்து" என பிறவினைப்படுத்திக் கூறினார். அழியாமை ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சம். அறிகுறியாவது சின்முத்திரை. பித்திகை சுவர், வெண்கொடி அண்டப் பித்திகை துளைத்து அண்டர் கால் பின்னலான் என்பது உயர்வு நவிற்சி நயம் உடையது. வான் அறம் பையர்க்கு வெண்குறும் பெற்றியுட் கொண்டு திகையாச் சித்திரும் போலுறப்புரி என்பது தற்குறிப் பேற்ற அணிநயம் உடையது. திசையா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

## செங்கீரை 4

கருமா னிடங்கலந் துலவுசெம் மானைக்
　　　　கரத்திட்ட கடவு ணெற்றிக்
கண்ணினுரு மூவிரு புலிங்கத்தை யுலவைவெங்
　　　　கனலியந் தேவினோ டெம்
பெருமா னிருங்கருணை வலியா லெடுத்துப்
　　　　பிறங் கதிரை மணிகொ ழிக்கும்
பீடார் பகீரதி விடுக்கவோ ராறுருப்
　　　　பெற்றார லறுவர் முலையுண்
டிருமானு மானும்விழி யுமையாண் மகிழ்ந்தொருங்
　　　　கிருகர மணைக்கவும் பன்
னிருகர முடன்கண்ட முகங்கொளோர் வடிவிசைந்
　　　　தினிதாடல் புரிவ தேய்ப்பத்
திருமான் வியக்குந் திருக்குமர மலையாளி
　　　　செங்கிரை யாடிய ருளே
தில்லையம் பகவனருள் புல்லையம் பதிமுருக
　　　　செங்கீரை யாடிய ருளே.

பதவுரை

கருமானிடங் கலந்துலவு செம்மானை கரத்திட்ட = ஆண் மானிடங் கலந்துலவும் செவ்வையான மானைக் கையில் கொண்ட, கடவுள் நெற்றிக் கண்ணின் உரு = சிவனின் நெற்றிக் கண்ணின் வெளிப்படும், மூவிரு புலிங்கத்தை = ஆறுநெருப்புப் பொறிகளை, யுலவை வெங்கனலியம் தேவினோடு = காற்றான வெங்கனலி எனும் அழகிய கடவுளோடு, எம்பெருமான் இருங்கருணை வலியால் எடுத்து = சிவனின் பெருங்கருணை வலிமையால் எடுத்து, பிறங்க திரைமணி கொழிக்கும் = விளங்கத் திரைமணி கொழிக்கும், பீடுஆர் பகீரதி விடுக்க = பெருமைக்குரிய பகீரதியில் விட்டுவிட, ஓராறு உருப்பெற்று = ஓர் ஆறு வடிவினை அடைந்து, ஆரல் அறுவர் முலையுண்டு = கார்த்திகைப் பெண்டிர் அறுவர் முலைப்பால் உண்டு, இருமானும் மானும் விழியுமென் = சிறந்த மானும் மயங்கும் விழியுமையவள், அருண் மகிழ்ந்து ஒருங்கு இருசரம் அணைக்கவும் = அருளுடன் மகிழ்ந்து ஒருங்கே இருகைகளாலும் அணைக்கவும், பன்னிருகரமுடன் சண்முகம் கொள் ஓர் வடிவு இசைந்து = பன்னிரு கைகளுடன் ஆறு முகமும் கொண்டு ஒரே வடிவாகக்கூடி, இனிது ஆடல் புரிவது ஏய்ப்ப = இனிதே திருவிளையாடல் செய்வது போல, திருமான் வியக்கும் = திருமகள் பாராட்டும், திருகுமரமலையாளி

= திருக்குமரமலைத் தலைவ, செங்கீரையாடியருளே = செங்கீரையாட்டம் விளையாடி அருள்வாயாக; தில்லையம் பகவன் அருள் = தில்லையம்பதியில் குடிகொண்ட ஆடலழகர் அருளிய, புல்லையம்பதி முருக செங்கிரையாடி அருளே = புல்லை நகர் முருக! செங்கீரை விளையாடி யருள்வாயாக (எ.று).

## பொழிப்பு

ஆண் மானிடங் கலந்துலவும் செவ்வையான மானைக் கையில் கொண்ட சிவனின் நெற்றிக் கண்ணின் வெளிப்படும் ஆறு நெருப்புப் பொறிகளைக் காற்றான வெங்கனலி எனும் அழகிய கடவுளோடு எம்பெருமான் சிவனின் பெருங்கருணை வலிமையால் எடுத்து விளங்கத் திரைமணி கொழிக்கும் பெருமைக்குரிய பகீரதியில் விட்டுவிட ஒராறு வடிவினை அடைந்து கார்த்திகைப் பெண்டிர் அறுவர் முலைப்பாலுண்டு, சிறந்த மானும் மயங்கும் விழியுமையவள் அன்புடன் மகிழ்ந்து இருகைகளாலும் அணைக்கவும், பன்னிரு கைகளுடன் ஆறு முகமும் கொண்டு ஒரே வடிவாகக் கூடி இனிதே திருவிளை யாடல் செய்வது போலத் திருமகள் பாராட்டும் திருக்குமர மலைத் தலைவ செங்கீரையாட்டம் விளையாடி அருள்வாயாக; தில்லையம்பதியில் குடி கொண்ட ஆடல் அழகர் அருளிய புல்லைநகர் முருக! செங்கீரை விளையாடியருள்வாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

திரைமணி கொழிக்கும் - மூன்றன் தொகை. பகீரதி - நீர்நிலை. கங்கை கனலியம் தேவு - நெருப்புக் கடவுள்.

### செங்கீரை 5

ஒராறு முகமுடன் பன்னிருகை யங்குலவ
உயர்கங்கை மருவி நாளும்
ஓங்கமலை யோடுவிண் பார்வதித ரப்போந்
துலாவியயில் வேலை யுறலால்
நீ ராரலைத் துடைக் குந்தரத் தாற்காண
நீள்கதி தனைக்காட் டலா
னிகமுமா திக்குமறை யின்பொரு ளுணர்த்தலால்
நிகரினிற் சாருவார் நின்
பேராயி ரங்கொண்ட விண்டுவு முரைப்பரும்
பேறதாஞ் சாரு பமே

பெறுவா ரெனப்பரவு வாச்சியந் திண்ணமென்
பெற்றிதெரிவித்தல் போலச்
சீரார்சு வேதநதி சூழ்குமர மலைவாச
செங்கீரை யாடி யருளே
தில்லையம் பகவனருள் புல்லையம் பதிமுருக
செங்கீரை யாடி யருளே.

பதவுரை

ஓராறு முகமுடன் = ஒப்பற்ற ஆறு முகங்களுடன் பன்னிரு கையும் குலவ = பன்னிரு கைகளும் பொருந்த, உயர், கங்கை மருவி = உவுர்ந்த கங்கையில் சேர்ந்து, நாளும் ஓங்க = நாளும் சிறக்க மலையோடும் விண் பார்வதி தரமலையில் தவழும் கருமுகில் அன்ன பார்வதி அணைதர, போந்து உலாவி = வெளிப்பட வந்து உலாவி, அயில் வேலையுறலால் = அழகிய வேலை கையுறுதலால், நீர் ஆர் அலைத்து உடைக்கும் திரத்தால் = நீரானது பூமியை அலைத்து அழிக்கும் முறைமையால், கான நீள்கதி தன்னைக் காட்டேலான் = கண்டுகண் களிக்குமாறு நற்பேறு தன்னை அளித்தலால், நிகழும் ஆதிக்கம் மறையின் பொருள் உணர்த்தலால் = விளங்கும் ஆதியாம் தந்தைக்கும் வேதப் பொருளை உணர்த்தலால், நிகரினில் சாருவார்நின் பேராயிரங் கொண்ட விண்டுவும் உரைப்படும் = ஒப்புமையில் உன்னை அடையார் நினது பேராயிரங்கொண்ட பெருமையைப் பரிந்துடன் உரைக்க அரிய, பேறுதாம் சாரூபமே = நற்பேறுதாம் கடவுளை போல வடிவம் பெறுகையாகும், பெறுவார் எனப் பரவும் = அதனைப் பெறுவார் எனப் பரவும், வாச்சியம் திண்ணமென் பெற்றிய = வாச்சியப் பொருள் உறுதியானது எனும் தன்மையது, தெரிவித்தல் போல = என்பதைத் தெரிவித்தல் போல, சீரார்சுவேத நதிசூழ் குமரமலை வாச = சீர் பெருகும் சுவேதநதி சூழ்ந்து செல்லும் குமரமலையின் கண் வாழ்பவனே, செங்கீரை யாடி யருளே = செங்கீரை யாட்டம் விளையாடி அருள்வாயாக, தில்லையம் பகவன் அருள் = தில்லையம் பதியில் குடி கொண்ட ஆடல் அழகர் அருளிய, புல்லை யம்பதிமுருக செங்கீரை யாடி யருளே = புல்லை நகர் முருக! செங்கீரை விளையாடி அருள்வாயாக (எ.று.).

பொழிப்பு

ஒப்பற்ற ஆறுமுகங்களுடன் பன்னிரு கைகளும் பொருந்த உயர்ந்த கங்கையில் சேர்ந்து நாளும் சிறக்க மலையில் தவழும்

கருமுகிலன்ன பார்வதி அணைதர வெளிப்பட வந்து உலாவி வேலைக் கையுறுதலால், நீரானது பூமியை அலைத்து அழிக்கும் முறைமையால், கண்டுகண் களிக்குமாறு நற்பேறு தன்னை அளித்தலால், விளங்கும் ஆதியாம் தந்தைக்கும் வேதப் பொருளை உணர்த்தலால், ஒப்புமையில் உன்னை அடைவார் நினது பேராயிரங் கொண்ட பெருமையைப் பரிந்துடன் உரைக்க "அரிய நற்பேறுதாம், கடவுளைப் போல வடிவம் பெருகையாருமந் அதனைப் பெறுவார்" எனப் பரவும் வாக்கியப் பொருள் உறுதியானது எனது தன்மையது என்பதைத் தெரிவித்தல் போலச் நீர்பெருகும் சுவேதநதி சூழ்ந்து செல்லும் குமரமலையின்கண் வாழ்பவனே! செங்கீரையாட்டம் விளையாடி அருள்வாயாக! தில்லையம்பதியில் குடிகொண்ட ஆடல் அழகர் அருளிய புல்லை நகர் முருக! செங்கீரையாடி அருள் வாயாக.

## அருஞ்சொற்பொருள்

ஆர் = பூமி, விண்டுவும் - சொல்லியும் சாரூபம் = கடவுளைப் போல வடிவம் பெறுகை. மலையோடு விண் = 'மலை யோடும் + விண்' எனப் பிரிக்கவும். விண் பார்வதி = விண்ணின் நிறமுடைய பார்வதி என்க. ஒப்புப் பொருளில் வந்த ஐந்தன் உருபும் பொருளும் உடன் தொக்கத்தொகை.

### செங்கீரை 6

இமையோர் மருவர மகளீர் முகமொடு
மிதயங் களி கூற
வெழுதோ ணிசிசர மடவா ரழும்விழி
யிணைகள் சிவந்தா ரச்
சமரே றியபுய வலியார் நிருத
தளங்களு டன்பொரு சூர்
தனைவா ரணமுக னரிமா முகமுறு
தானவ னாதிய ரை
யுமைநூ புரவ மணிகான் மடவிய
ருதலொன் பது வீர
ருடனே சென்றமர் புரியா வென்றிகொ
ளும்பர்க டம்பெரு மான்
அமரா வதிபுகழ் குமரா சலபதி
யாடுக செங்கீரை
அல்லற் றவிர்பதி புல்லைக் கதிபதி
யாடுக செங்கீரை

பதவுரை

இமையோர் மருவு அரமகளிர் = இமையா நாட்டத்துத் தேவர் அணையும் தெய்வப் பெண்டிர் தம் முகமொடு இதயங்களி கூற = முகத்தோடு அவர்கள் இதயங்களும் மகிழ்வை வெளிப் படுத்த எழுதோள் நிசி சரமடவார் = பருத்த தோளையுடைய பொன்னனைய கார்த்திகைப் பெண்டிர், அழும்விழி இணைவிழி உள் சிவந்தார = அழும் இணை விழிகள் மகிழ்ச்சியின் சிவந்து சிறக்க, சமரேறிய புயவலியார் = பலகாலும் போர்புரிந்து வன்மை ஏறிய தோள்வலிமையுடையார் நிருத தளங்களுடன் = அசுரர்தம் போர்க்களங்களில், பொருசூர்தனை = போர்புரி சூரனை, வாரணமுகன் = யானை முகச்சூரனை, அரிமாமுகமுறு தானவன் ஆதியரை = சிங்கமுகாசூரன் உள்ளிட்ட அரக்கர் முதலியவரை, யுமை நூபுரநவமணிகான் மடவியர் உதவு = உமையவள் காலணி நூபுரத்துத் தோன்றிய ஒன்பது பெண்பாலர் பெற்ற, ஒன்பது வீரருடனே = வீரவாகு தேவர் உள்ளிட்ட ஒன்பது வீரர்களுடனே, அமர்புரியா வென்றி கொள் உம்பர்கள்தம் பெருமான் = போர் செய்து வெற்றிபெற்ற தேவர்கள்தம் பெருமான், அமராவதி புகழ் குமராசலபதி = அமராவதி நகரமே புகழும் குமரமலைத் தலைவன், செங்கீரை ஆடுக = செங்கீரை ஆட்டம் விளையாடுக, அல்லல் தவிர்பதி = இன்னல்களையும் தலைவன், புல்லைக் கதிபதி = புல்லைத் திருநகருக்குத் தலைவன், செங்கிரை ஆடுக = செங்கீரை ஆட்டு ஆடியருள் செய்வாயாக (எ.று.).

பொழிப்பு

இமையா நாட்டத்துத் தேவர் அணையும் தெய்வப் பெண்டிர்தம் முகத்தோடு அவர்கள் இதயங்கள் மகிழ்வை வெளிப்படுத்த, பருத்த தோள்களையுடைய பொன்னனைய தெய்வப் பெண்டிர் அழும் இணைவிழிகள், மகிழ்ச்சியிற் சிவந்து சிறக்க, பலகாலும் போர்புரிந்து வன்மை ஏறிய தோள் வலிமை யுடையார் அசுரர்தம் போர்க்களங்களில் போர்புரி சூரனை, யானைமுகச் சூரனை, சிங்கமுகா சூரன் உள்ளிட்ட அரக்கர் முதலியவரை உமையவள் காலணி நூபுரத்துத் தோன்றிய ஒன்பது பெண்பாலர் பெற்ற வீரவாகு தேவர் உள்ளிட்ட ஒன்பது வீரர்களுடனே (சேர்ந்து) போர் செய்து வெற்றி பெற்ற தேவர்கள் தம் பெருமான், அமராவதி நகரமே புகழும் குமர மலைத் தலைவ செங்கீரை ஆட்டம் விளையாடுக; இன்னல்களையும் தலைவன் புல்லைத் திருநகருக்குத் தலைவ செங்கிரை ஆடியருள் செய்வாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

ஒருசால் அசுரரோடு போருக்குப் பயந்து நடுங்கி ஒளிந்து வாழ்ந்த தேவர்களைப் பிரிந்து சரமடவார் அழும் வழிகளை யுடையவராக இருந்தனர் எனவும், பின்பு தேவாசுரப் போருக்குப் பின் அவ்விழிகள் தேவர்களுடன் இணைந்து மருவி மகிழ்ந்து சிவந்து சிறந்தன எனவும் "அழும் விழியிணைகள் சிவந்தார்" என்பதற்கு விரித்துப் பொருள் கொள்க. புரியா செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் புரிந்து எனப் பொருள் தந்து நின்றது. யானை முசா சூரன் = தாரக = சூரன். நவமணி கான்மடவியர் உதவு ஒன்பது வீரர் மாணிக்கவல்லி, முத்து வல்லி, புட்பராக வல்லி, கோமேதகவல்லி, வைடூரிய வல்லி, வைரவல்லி, மரகத வல்லி, பவள வல்லி, நீலவல்லி ஒன்பதின்மருக்கும் முறையே வீரவாகுதேவர், வீரகேசரி தேவர், வீரமாமகேந்திர தேவர், வீரமகேஸ்வர தேவர், வீரமாபுரந்தரதேவர், வீரராக்கத தேவர், வீரமார்த்தாண்ட தேவர், வீரானந்த தேவர், வீரதீர தேவர் என நவவீரர்கள் தோன்றினர் என்க.

### செங்கீரை 7

சீலப் பழமறை யோலிட் டினுநனி
　　தேடற் கரியபொருள்
தேவர்க் குறுதுய ரோடச் சிதையது
　　தீரக் கருணைசெய்வோய்
மேலைக் கடலர சேவச் சலதியை
　　வேலைப் பருகியுற
வேவிட் டறுகிய காலத் துயரிய
　　மேருச் சிலைதகரக்
கோலப்படை கொடு மோதிக் கிரியிறை
　　கூசப்பொருள் கொணர்செங்
கோலைப் ரவழுதி
　　கூடற் கதிபதியே
யாலக் களனினி தாகத் தருமக
　　வாடுக செங்கீரை
அல்லற் றவிர்பதி புல்லைக் கதிபதி
　　யாடுக செங்கீரை.

## பதவுரை

சீலப்பழமறை யோலிட்டினும் = ஒழுக்கத்திற்கு அடிப் படையான பழைய மறைகள் ஓலமிட்டினும், நனிதேடற் கரிய

பொருள் - மிகவும் தேடுதற்கரிய பொருள், தேவர்க்குறு துயர் ஓட = தேவர்களுக்கு வந்த பெருந்துயர் தீர, சிறையது தீர = சிறை வாழ்வு தீர, கருணை செய்வோய் = அருள் செய்வோனே, மேலைக்கடல் அரசே = மேலைக்கடல் அரசனே, அச்சலதியை = அந்த நீர்ப் பெருக்கை, வேலைப்பருகியுற = வேலைப்பருகி_, ஏவிவிட்டு = செலுத்திவிட்டு, அறுகிய காலத்துயரிய மேருச் சிலை தகர நீர்குறுகிய காலத்து உயர்ந்து நின்ற மேருமலை பொடிபட, கோலப்படை கொடு = சிறந்த ஆயுதப்படை கொண்டு, மோதிக் கிரியிறை கூச = போரிட்டு மலையரசன் வெட்கப்படும் படி, பொருள் கொணர் = பொருளைக் கொண்டு வந்த செங்கோல்புரி தரு கோன் = செங்கோல் செய்தருளும் அரசன், உக்ர வழுதி, கூடற் அதிபதியே = உக்கிரப் பெருவழுதியாகிய மதுரை மாநருக்கு அரசனே, ஆலக்களன் = நீலகண்டன் இனிதாகத் தரும் மகவு = அன்புடன் தோற்றுவித்த குழந்தாய் செங்கீரை ஆடுக = செங்கீரை விளையாட்டு ஆடுக. அல்லல் தவிர்பதிபுல்லைக்கதிபதி = இன்னல்களையும் தலைவ புல்லைத் திருநகருக்குத் தலைவ', செங்கீரை ஆடுக = செங்கீரை ஆட்டு ஆடுக.

## பொழிப்பு

ஒழுக்கத்திற்கு அடிப்படையான பழைய மறைகள் ஓலமிட்டினும் மிகவும் தேடுதற்கரிய பொருள் தேவர்களுக்கு வந்த பெருந்துயராகிய சிறை வாழ்வு தீர அருள் செய்பவனே, மேலைக்கடல் அரசனே, அந்தக் கடல் நீர்ப்பெருக்கை வேலைப் பருகிடச் செலுத்திவிட்டு நீர் குறுகிய காலத்து உயர்ந்து நின்ற மேருமலை பொடிபடச் சிறந்த ஆயுதப் படை கொண்டு போரிட்டு மலையரசன் வெட்கப்படும்படி, பொருளைக் கொண்டு வந்து செங்கோல் செய்தருளும் அரசன் உக்கிரப் பெருவழுதி மதுரைமாநகருக்கு அரசனே, நீலகண்டன் இனிதாகத் தரும் மகவே செங்கீரை விளையாட்டு ஆடுக; இன்னல் களையும் தலைவ புல்லைத் திருநகருக்குத் தலைவ செங்கீரை ஆட்டு ஆடுக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

நனி தேடற்கு உறுதுயர் = உரிச்சொற்றொடர் கிரியிறை = ஆறன்தொகை. புவி = முதல் நிலைத் தொழிற்பெயர். படைகொடு = கொடு என்பது கொண்டு என்பதன் இடைக்குறை = மேலைக் கடலரசே

## செங்கீரை 8

வீழிக் கனிதுவர் வாயுற் பலம்விழி
மென்குயி லஞ்சகமும்
வேறற் கரிதென வோடப் புரிமொழி
விண்பரு குஞ்சுதையின்
கூழுக் கிரைபயி லியாழுக் கிணையகர்
குஞ்சரி தன்பதியே
கோவைக் கவியவை பாடக் கருணைசெய்
கும்பிமு கன்றுணைவா
ஊழிக் கடைவளி யோவிற் றெனவளி
யொன்ற விருஞ்சிதையா
னோதக் கடலெழ மோதிக் கடையன
ணுண்க ணிரண்டையுமார்ந்
தாழிப் புவிபுகழ் கோழிக் கொடியவ
ஆடுக செங்கீரை
அல்லற் றவிர்பதி புல்லைக் கதியதி
யாடுக செங்கீரை

### பதவுரை

வீழிக்கனி துவர்வாய் = வீழிக்கனி போன்ற துவர்வாய், உற்பலம் விழி = கருநெய்தல் அன்ன விழி, மென்குயில் அஞ்சுகம் = மென்மை குயிலும் பசுங்கிளியும், வேறற்கு அரிதென வோடப்புரி மொழி = வெல்வதற்கு இயலாதென ஓடும்படியாகப் பேசும் மொழி, விண்பருகும் சுதையின் கூழுக்கு = விண்ணவர் உண்ட அமுதமாகிய உணவிற்கு ஒப்பாக, இசைபயில் யாழுக்கு இணைபகர் = யாழிசைக்கு இணையாகக் கூறத்தக்க, குஞ்சரி தன்பதியே = தெய்வயானையின் கணவனே, கோவைக் கவி = கோவை நூற்கவி, அவைபாட = அரங்கில் அரங்கேற்ற, கருணை செய் கும்பிமுகன் துணைவா = அருள்புரிவாய் யானை முகன் உடன் பிறப்பே, ஊழிக் கடைவளியோ இற்றென = ஊழிக் காலத்து இறுதிக் காற்றோ இத்தன்மைத்தென, வளியொன்ற = வளி உதவ இருஞ்சிறையான் பேரழகினன் முருகன் ஓதக்கடலெழ மோதி = குளிர்ந்த கடல் கொதித்து எழுந்தாற்போல் மாறுபட்டு கடையனல் உண்கண் இரண்டையும் ஆர்ந்து = ஊழித்தீயெனும் சினம் மையுண்ட இரு கண்களிலும்சேர்ந்து, ஆழிப்புவிபுகழ் கோழிக் கொடியவ = ஆழிசூழ் ஞாலமெல்லாம் புகழும் சேவற் கொடி யுயர்த்தவனே செங்கீரை ஆடுக = செங்கீரையாட்டம் ஆடுக; அல்லல் தவிர்பதி புல்லைக் கதிபதி = இன்னல் களையும்

தலைவ புல்லைத் திருநகருக்குத் தலைவ, செங்கீரை ஆடுக = செங்கீரை ஆட்டு ஆடுக (எ.று.).

## பொழிப்பு

வீழிக்கனி போன்ற துவர்வாய், கருநெய்தல் அன்ன வழி, மென்மைக் குயிலும் பசுங்கிளியும் வெல்வதற்கு இயலாதென ஓடும்படியாகப் பேசும்மொழி, வின்னலர் உண்ட அமுதமாகிய உணவிற்கு ஒப்பாக, யாழிசைக்கு இணையாகக் கூறத்தக்க தெய்வ யானையின் கணவனே, கோவைநூற்கவி அரங்கில் அரங்கேற்ற அருள்புரி யானைமுகன் உடன்பிறப்பே, ஊழிக்காலத்து இறுதிக் காற்றோ இத்தன்மைத்தென வளிபொருந்த, பேரழகின் முருகன் கடல்கொதித்து எழுந்தாற் போல் மாறுபட்டு, ஊழித்தீயெனும் சினம் மையுண்ட இருகண்களிலும் சேர்ந்து, ஆழிசூழ் ஞாலமெல்லாம் புகழும் சேவற்கொடி யுயர்த்தவனே செங்கீரை யாட்டம் ஆடுக; இன்னல் களையும் தலைவ, புல்லைத் திரு நகருக்குத் தலைவ செங்கீரை ஆட்டு ஆடுக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

துவர்வாய் = பவளவாய், செவ்வாய், பவளவாய் எனும்போது உவமைத் தொகை. செவ்வாய்யெனும் போது பண்புத் தொகை. வீழிக்கனி = ஆறன் தொகை கனிவாய் = உவமைத் தொகை. உற்பலம் = கருநெய்தல், கொட்டி குழங்கின் பூ, இறை = அழகு, வீழி = விழுதி.

### செங்கீரை 9

கூனார் மதிசிர மானார் கரமலர்
கொண்டார் மைந்தாநின்
கொங்கலர் செஞ்சர ணம்புய நம்புவர்
கொண்டா டுந்தேவே
வானா றதினுகள் சேல்பாய் தடமலி
வண்டா னஞ்சூழும்
வண்டலை தண்டலை கொண்டலை யளவி
வளந்தா னந்தாத
மேனா டதினுயர் சோணா டழகுற
மின்பார் வந்தாய்நல்
வெண்கரி தங்கரி சங்கரி மருக
வியன்கூர் விட்டேவர்

சேனா பதிபர ஞானோ தயவர
செங்கோ செங்கீரை
செல்வத் திருவளர் புல்லைக் கதிபதி
செங்கோ செங்கீரை.

## பதவுரை

கூனார் மதி சிரமானார் = கூனல் இளம்பிறை சூடிய தலைமுடியுடையாரை, காமலர் கொண்டார் மைந்தா = கையில் மழுப்படையுடையார்க்கு மைந்தனே நின் கொங்கலர் செஞ்சரணம் புயம் நம்புவர் = உனது தேன் மலர் நிறைந்த சிவந்த திருவடிகளையும் அழகிய தோள்களையும் நம்புகின்றவர், கொண்டாடுந் தேவே = பாராட்டும் இறைவனே, வானாறு அதின் உகம், சேல்பாய = வானாற்றின் பிறழும் கெண்டை மீன் பாய, தடமலி வண்டானஞ்சூழும் = இடம்பரந்த நாரைகள் சூழும், வண்டலை தண்டலை கொண்டலை யளவி = வளப்பம் உடைய இடங்களை சோலைகளை மேங்களையுடையதாய்க் கலந்து, வளந்தான் நந்தாத = வளப்பம் குறையாத, மேனாடு அதின் உயர் சோணாடு = விண்ணாட்டினும் உயர்ந்த சோழநாடு, அழுகுற = அழகு நிலம்மின் பார்வந்தாய் = மின் ஒளியாய் இவ்வுலகில் வந்தாய், நல்வெண்கரி மருக = நல்ல வெள்ளையானை, இவரும் இந்திரனின் மருமகனே, தங்கரி மருக = சிறந்த திருமால் மருமகனே, சங்கரி மரும் = சங்கரன் வழித் தோன்றலே, வியன்கூர் விண்தேவர் = பெருமைமிக்க விண்ணின் தேவர், சேனாபதி = சேனைத்தலைவ, பரஞானோதயவர செங்கோமேலான அறிவுத் தோற்றமளிக்கும் செங்கோவே, செங்கீரை = செங்கீரை ஆடுக; செல்வத் திருவளர் = செல்வத் திருமகள் வளர், புல்லைக் கதிபதி செங்கோ = புல்லைத் திருநகருக்குச் செங்கோவே, செங்கீரை = செங்கீரை ஆடுக.

## பொழிப்பு

கூனல் இளம்பிறை சூடிய தலைமுடியுடையாரை, கையில் மழுப்படையுடையார்க்கு மைந்தனே உனது தேன்மலர் நிறைந்த சிவந்த திருவடிகளையும் அழகிய தோள்களையும் நம்புகின்றவர் பாராட்டும் இறைவனே, வானாற்றின் பிறழும் கெண்டைமீன் பாய இடம்பரந்த நாரைகள் சூழும் வளப்பம் உடைய இடங்களை சோலைகளை மேகங்களையுடையதாய்க் கலந்து வளப்பம் குறையாத மேனாட்டினும் உயர்ந்த சோழநாடு

அழகுநிலவமின் ஒளியாய் வந்தாய்; நல்ல வெள்ளை யானை இவரும் இந்திரனின் மருமகனே, சிறந்த திருமால் மருமகனே, சங்கரன் வழித்தோன்றலே, பெருமைமிக்க விண்ணின் தேவர் சேனைத் தலைவ, மேலான அறிவுத் தோற்றமளிக்கும் செங்கோவே, செல்வத் திருமகள் வளர் புல்லைத் திருநகருக்குச் செங்கோவே செங்கீரை ஆடுக (எ.று.).

### அருஞ்சொற்பொருள்

கொண்டார் நம்புவர் = வினையால் அணையும் பெயர். வண்டானம் = நாரை. மருக = மருமகன், வழித்தோன்றல். மருக என்பதனை வெண்கரி, தங்கரி, சங்கரி எனும் மூன்றுடனும் கூட்டிப் பொருள் கொள்க.

## செங்கீரை 10

தவமும் புரிகில மரபுந் தழைசுத
சந்தா னந்தாநற்
றமர்தந் தையெவரு நினையன் றிலையடி
தந்தா ளெந்தாயென்
றவிழ்நெஞ் சகமல ருருகும் படியெம
தன்பே யன்பேயென்
றவர்சஞ் சலமற வருளுஞ் சுருதியி
னந்தா கந்தாவெம்
பவனம் பயில்விசை மயிலின் மிடாமர்
பண்பா நண்பாரும்
பரசங் கரகுரு குறமங் கையுமகிழ்
பங்கா சிங்காரா
சிவமன் குமரம லையின்வந் தமர்குக
செங்கோ செங்கீரை
செல்வத் திருவளர் புல்லைக் கதிபதி
செங்கோ செங்கீரை

### பதவுரை

தவமும் புரிகிலம் = நற்றவமும் செய்தோமில்லை (எனினும்) மரபும் தழை சுதசந்தானமும் தா = மரபும் தழைக்க ஞானமிக்க மகப்பேற்றினைக் கொடு, நற்றமர் தந்தை எவரும் நினையன்றிலை = நல்ல சுற்றமும் தந்தையும் உன்னையன்றி இல்லை. எந்தாய் தந்தபின் என்று = எம்தாயானவனே நின்

திருவடியருள் தந்து ஆண்டருள் என்று, அவிழ் நெஞ்சக மலர் உருகும்படி = விரியும் மனமலர் உருகும்படி, எமதன்பே அன்பே என்றவர் = எங்கள் அன்பே அன்பே என்ற அடியவர், சஞ்சலம் அற அருளும் = துன்பம் நீங்க அருள்புரியும், சுருதியின் நந்தா கந்தா = மறைமொழியாக விளங்கும் கந்தனே, எம்பவனம் பயில் விசை மயிலி = எமது அரண்மனையில் உலவும் விரைந்த செலவினையுடைய மயிலி பிடர் அமர் பண்பா = மயிலின் மேல் அமரும் பண்பாளனே, நண்பாடும் = அன்பு நிறைந்த, பர சங்கர குரு = மேலான சிவசங்கரனின் குருவே, குறமங்களை மகிழ்பங்கா = குறமங்கை வள்ளியும் மகிழ்ந்தருளும் பங்காளனே, சிங்காரா = அழகானவனே, சிவம்மன் குமரமலையின் அமைக்குக = மங்கலம் தங்கும் சைவம் தழைத்து விளங்கும் குமர மலையின் அமர்ந்த குகனே, செங்கோ செங்கீரை = செங்கோவே செங்கீரை ஆடும; செல்வத் திருவளர் = செல்வத் திருமகள் வளர், புல்லைக்கதிபதி செங்கோ செங்கீரை = புல்லைத் திருநகருக்குச் செங்கோவே, செங்கீரை ஆடி நடந்து வருக (எ.று.).

## பொழிப்பு

நற்றவமும் செய்தோமில்லை (எனினும்) மரபு தழைக்க ஞானமிக்க மகப்பேற்றினைக் கொடு, நல்ல சுற்றமும் தந்தையும் உன்னையன்றி இல்லை, எம்தாயானவனே நின் திருவடியருள் தந்து ஆண்டருள் என்று விரியும் மனமலர் உருகும்படி எங்கள் அன்பே அன்பே என்ற அடியவர் துன்பம் நீங்க அருள் புரியும் மறைமொழியாக விளங்கும் கந்தனே, எமது அரண்மனையில் உலவும் விரைந்த செலவினையுடைய மயிலின் பிடரியின் கண் அமரும் பண்பாளனே, அன்பு நிறைந்த மேலான சிவசங்கரனின் குருவே, குறமங்கை வள்ளியும் மகிழ்ந்தருளும் பங்காளனே, அழகானவனே, சைவம் நிலைத்த குமரமலையில் அமர்ந்த குகனே, செங்கோவே செங்கீரை ஆடுக; செல்வத் திருமகள் வளர் புல்லைத் திருநகருக்குச் செங்கோவே செங்கீரை ஆடுக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

சுதசந்தானம் = ஞானம் மிக்க மகப்பேறு. நெஞ்சக மலர் = உருவகம். சுருதி = மறை. நந்தா = அணையாத. ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். சங்கரன் என்பது சிவசங்கரன் என்பதன் முதற்குறை. குறமங்கை மகிழ்பங்கா என்று பங்காளனாகக் குறித்தது தெய்வயானையோடும் மகிழ்பவன் என்க.

மகப்பேறு இல்லாத குற்றம் நீங்க வேண்டுவார்க்கு அருள்பவன் என்றமையின் இவ்வீரபத்திரக் கவிராயரும் மகப்பேறு வேண்டி இந்நூலை எழுதினார் என்பது மரபு வழிச் சாலும் என்க.

**செங்கீரைப் பருவம் முற்றிற்று**

## தாலாட்டுப் பருவம்

'அஃதாவது, பிள்ளைகளைத் தொட்டிலிற் கிடத்தி மாதர் நாவை யசைத்துப் பாடும் நிலை" என முன்னர் கூறப்பட்டது. தாய் = நாக்கு, மூன்றாம் பருவமாகிய தாலாட்டுப் பருவம் ஏழாந் திங்கள் தொடங்கி நிகழ்வதாகக் கூறுவர். முன்னம் செங்கீரை செவ்விய மழலை மொழிவது எனப்பட்டமையின், ஈண்டு நற்சொற்களைப் பேசுதற்காம் நானெகிழ் பயிற்சியாக வரும் தாலாட்டுப் பருவம் அடுத்துப் பாடுவாராயிற்று என்க.

### *தாலாட்டு 1*

பூகம் பழுத்த நறுந்தாற்றிற்
புயலார் தெங்கின் பழம்வீழப்
பொறாது சிதறிப் பொய்கையின்வாழ்
புள்ளின் குலத்திற் படவிரிதன்
மோகம் பழுத்த வாடவர்தோண்
முயங்கு மடவார் நசையொழித்தும்
முற்றுந் துறந்த மூதறிவான்
மூவா வின்பம் பெறற்கெண்ணி
யோகம் பழுத்த நெஞ்சகலா
வுறுவ ரனையத் திகழவிண்மட்
டுயர்தண் டலைசூழ் சோணாடா
வும்பர்க் கதிபா வளவாவெண்
போகம் பழுத்த புல்லைநகர்ப்
புனிதா தாலோ தாலேலோ
புனமான் றந்த குறமானைப்
புணர்வோய் தாலோ தாலேலோ

**பதவுரை**

பூசம் பழுத்த நறுந்தாற்றில் = பாக்கு மரத்துப் பழுத்த மணமிக்க தாறுகளின் மீது, புயலார் தெங்கின் பழம் வீழ = மேகங்கள் தவழும் உயர்ந்த தென்னை நெற்றுவிழ, பொறாது

சிதறி = அதனைத் தாங்க முடியாமல் பாக்குப் பழங்கள் சிதறிட, பொய்கையின் வாழ் புள்ளின் குலத்திற்பட = அவை பொய்கைகளில் வாழும் பறவைகளின் மேற்பட (அவை ஒலி எழுப்புதலால்), விரிதன் மோகம் பழுத்த ஆடவர் தோள் முயங்கும் மடவார் = பெரிதும் தன்கண் காமவிருப்புற்ற கணவன்மார் தோள்களில் தழுவும் பெண்டிர், நறையொழித்தும் - அவ்விருப்பம் நீங்கியும், முற்றும் துறந்த மூதறிவான் = முழுமையாகப் பற்றற்றுத் துறந்த பேரறிவால், மூவா இன்பம் பெறற்கு எண்ணி = அழியா இன்பம் பெறுவதற்கு நினைந்து, யோகம் பழுத்த நெஞ் சகலா உறுவர்அனைய திகழ = யோகநிலை முதிர்ந்த உள்ளத்து முனிவர் போல விளங்க, விண்மட்டுயர் தண்டலை சூழ் சோணாடா = விண்ணளவு உயர்ந்த சோலைகள் சூழ்ந்த சோழநாட்டுத் தலைவனே, உம்பர்க் கதிபா = தேவர்கட்குத் தலைவனே, வளவா = வளவனே, வெண்போகம் பழுத்த புல்லை திருநகரத்துத் தூயவனே, தாலோ தாலேலோ = தாலோ தாலேலோ, புனமான் தந்த குறமானைப் புணர்வோய் தாலோ தாலேலோ = தினைப்புனமான் ஈன்ற குறமகள் வள்ளியைத் தழுவுபவனே தாலோ தாலேலோ (எ.று.).

## பொழிப்பு

பாக்கு மரத்துப் பழுத்த மணயிக்க தாறுகளின் மீது மேகங்கள் தவழும் உயர்ந்த தென்னை நெற்று விழ, அதனைத் தாங்க முடியாமல் பாக்குப் பழங்கள் சிதறிட, அவை பொய்கைகளில் வாழும் பறவைகளின் மேற்பட அவை ஒலி எழுப்புதலால், பெரிதும் தன்கண் காமவிருப்புற்ற கணவன்மார் தோள்களில் தழுவும் பெண்டிர், அவ்விருப்பம் நீங்கியும், முழுமையாகப் பற்றற்றுத் துறந்த பேரறிவால் அழியா இன்பம் பெறுவதற்கு நினைந்து, யோகநிலை முதிர்ந்த உள்ளத்து முனிவர் போல விளங்கவும் விண்ணளவு உயர்ந்த சோலைகள் சூழ்ந்த சோணாட்டுத் தலைவனே, சோழனே கள்ளமில்லாவுள்ளத்து இன்பம் நிறைந்த புல்லைத் திருநகரத்துத் தூயவனே தாலோ தாலேலோ, தினைப்புனமான் ஈன்ற குறமகள் வள்ளியைத் தழுவுபவனே தாலோ தாலேலோ.

## அருஞ்சொற்பொருள்

பூகம் = பாக்குமரம், நசை = விருப்பம். மூவா = ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் அகலா என்பதும் அதுவே.

## தாலாட்டு 2

ஏமா சலத்தைச் சிலையெனக் கொண்
டிமயா சலத்தின் மகட்புணரு
மெம்மான் கைமா வுரிபோர்க்கு
மியமா னிகமா கமம்பரவுங்
காமா ரிசெழுங் கமலமலர்க்
கைமாங் கனியைத் தரவேட்டுக்
கருதற் கரிய புவனமெலாங்
கணத்திற் சூழ்ந்து வருநீபத்
தாமா விரிஞ்ச னோடுபரந்
தாமா தியரும் பணிந்தேத்துந்
தரமார் நவிரப் பரியூர்கந்
தரமார் தருசண் முகத்தரசே
பூமான் பாமான் புகழ்ப்புல்லைப்
புரியாய் தாலோ தாலேலோ
புனமான் றந்த குறமானைப்
புணர்வோய் தாலோ தாலேலோ

பதவுரை

ஏமாசலத்தை = மகமேருமலையை, நிலையெனக் கொண்டு = வில்லாகக் கொண்டு, இமயாசலத்தின் மகள் புணரும் எம்மான் = இமவான் மகள் பார்வதியைத் தழுவும் எம் தலைவன், கைமான் போர்க்கும் இயமானிகம் = யானைத்தோல் போர்க்கும் வீரப்பெருமையர், ஆகமம் புகழும் காமாரி = வேதம் புகழும் விருப்பமிகு சிவன், செங்கமல மலர்க்கை மாங்கனியைத் தரவேட்டு = தனது வளவிய செந்தாமரை மலர்க் கைகளால் மாங்கனியைத் தர, அதனைப் பெற விரும்பி, கருதற்கரிய புவனமெலாங் கணத்திற் சூழ்ந்து வரும் = எண்ணிற்கெட்டாத வுலகம் முழுமையும் ஒரு கணப்பொழுதில் சுற்றி வந்த, நீபத்தாமா = கடப்பமாலை அணிந்தவனே, விரிஞ்சனொடு பரந்தாமாதியரும் = பிரமனோடு திருமால் உள்ளிட்ட தேவர்கள் யாவரும், பணிந்தேத்தும் = பணிந்து பாராட்டும், தாமார்தரு = மதிப்பு மிகுகின்ற, தவிர பரியூர் சுந்தரமார்தரு சண்முகத்தரசே = மயின் மீது ஊர்ந்துவரும் அழகுமிக்க ஆறுமுகத்தரசே, பூமான் பாமான் புகழ்மல்லைப் புரியாய் தாலோ தாலேலோ = திருமகளும் கலைமகளும் புகழும்படியான புல்லைத் திருநகரத்தவனே தாலோ தாலேலோ, புனமான் தந்த குறமானைப் புணர்வோய்

தாலோ தாலேலோ = கினைப்புனமான் ஈன்ற வள்ளியைத் தழுவுபவனே தாலோ தாலேலோ (எ.று).

## பொழிப்பு

மாமேரு மலையை வில்லாகக் கொண்டு இமவான்மகள் பார்வதியைத் தழுவும் எம்தலைவன் யானைத்தோல் போர்க்கும் வீரப் பெருமையர்; வேதம்புகழும் விருப்பமிகு சிவன் தனது வளவிய செந்தாமரை மலர்க் கைகளால் மாங்கனியைத் தர அதனைப்பெற விரும்பி, எண்ணிற் கெட்டாத வுலகம் முழுமையும் ஒருகணப் பொழுதில் சுற்றி வந்த கடப்பமாலை அணிந்தவனே, பிரமனொடு திருமால் உள்ளிட்ட தேவர்கள் யாவரும் பணிந்து பாராட்டும் மதிப்பு மிகுகின்ற மயிலின் மீது ஊர்ந்துவரும் அழகுமிக்க ஆறுமுகத்தரசே, திருமகளும் கலைமகளும் புகழும்படியான புல்லைத் திருநகரத்தவனே தாலோ தாலேலோ தினைப்புனமான் ஈன்ற வள்ளியைத் தழுவுபவனே தாலோ தாலேலோ (எ.று).

## அருஞ்சொற்பொருள்

கைபான் யானை, கவிரப்பரி = மயிலூர்தி. பூமான் பாமான் = உம்மைத் தொகை.

### தாலாட்டு 3

எள்ளார்க் கருட்சிந் தாமணியே
யிகழ்வார் மருட்சிந் தாமணியே
யிமயா சலக்கற் பகக்கனியே
யீன்ற வான்கற் பகக்கனியே
நள்ளா ருரத்தொரு மித்துருவே
னாட்டுமன் பர்க்கொரு மித்துருவே
நலிவுற் றடைந்தார்க் கரும்பொருளே
நானா வேதத் தரும்பொருளே
வின்ளார் கடப்பத் தாரணிவாய்
விண்ணோர் கடப்பத் தாரணிவாய்
வெஞ்சூர் தடிந்த வாகையனே
மிளிர்பன் னிரண்டு வாகையனே
புள்ளார் மலர்ப்பூந் தடப்புல்லைப்
புரனே தாலோ தாலேலோ
புனமான் றந்த குறமானைப்
புணர்வோய் தாலோ தாலேலோ

*பதவுரை*

என்னார்க்கு அருள் சிந்தாமணியே = அன்பர்கட்கு அருள்புரியும் தெய்வத்தன்மையுடைய சிந்தாமணியே, யிகழ்வார் மருள் சிந்தாமணியே = தன்னை யிகழ்பவர்கட்கு மயங்கி நிற்கும் நிலையே தரும் சிந்தாமணியே, இமயாசலக் கற்பகக்கனியே = இமய மலைப்பக்கத்திலிருந்தான கற்பகக் கனியே, ஈன்ற வான் கற்பக் கனியே = இமவான்மகள் பெற்ற கற்பகக் கனியே, நன்னார் உரத்து ஒருமித்தகு வேல் நாட்டும் உருவே = பகைவர் மார்பில் பொருந்த உருவும் வேலைக்குத்தும் உருவே, அன்பர்க்கு ஒருமித்த உருவே நாட்டும் உருவே = நின்னடியார் உள்ளத்து இரண்டறக் கலந்து தன்னுருவைக் காட்டும் வடிவே, நலிவுற்று அடைந்தார்க்கு ஆகும் பொருளே = நின்னருள் இல்லாமல் துன்புற்று நின்னை அடைந்தார்க்கு அரிய பொருளே, நானாவேதத் தரும் பொருளே = பல்வேறு வேதங்களின் அரும்பொருளே, வின்னார் கடம்பத் தாரணிவாய் = அன்பர்தம் கடம்பமாலை அணிந்தவனே, விண்ணோர் கடம்பத் தாரணி வோய் = விண்ணவர்தம் கடம்பவனத்து மாலை அணிபவனே, வெஞ்சூர் தடிந்த வாகையனே = கொடிய அசுரர்களை அழித்த வெற்றிவாகையுடையவனே, மிளிர் பன்னிரண்டு வாகையனே = மிளிரும் பன்னிரண்டுகை வெற்றி வாகையனே, புள்ளார் மலர்ப் பூந்தடப் புல்லைப் புரனே = பறவைகள் நிறைந்த தாமரைப் பூந்தடங்கள் நிறைந்துள்ள புல்லை திருநகரத்தவனே. தாலே தாலேலோ = தாலே தாலேலோ, புனமான் தந்த குறமானைப் புணர்வோய் தாலோ தாலேலோ = தினைபுன மான் ஈன்ற வள்ளியைத் தழுவுபவனே தாலோ தாலேலோ (எ.று.).

பொழிப்பு

அன்பர்கட்கு அருள்புரியும் தெய்வத்தன்மையுடைய சிந்தாமணியே. தன்னை யிகழ்ந்தவர்கட்கு மயங்கி நிற்கும் நிலையே தரும் சிந்தாமணியே. இமயமலைப் பக்கத்து விளைந்த கற்பகக் கனியே, இமவான் மகள் பெற்ற கற்பகக்கனியே, பகைவர் மார்பில் பொருந்த உருவும் வேலைக் குத்தும் உருவே. நின்னடியார் உள்ளத்து இரண்டறக் கலந்து தன்னுருவைக் காட்டும் வடிவே. நின்னருள் இல்லாமல் துன்புற்று நின்னை அடைந்தார்க்கு அரிய பொருளே. பல்வேறு வேதங்களின் அரும்பொருளே, அன்பர்தம் கடப்ப மாலை அணிந்தவனே. விண்ணனர்தம் கடம்பவனத்து மாலை அணிபவனே, கொடிய அசுரர்களை அழித்த வெற்றி வாகையுடையவனே. மிளிரும் பன்னிரண்டு கை வெற்றி வாகையனே. பறவைகள் நிறைந்துள்ள புல்லைத் திருநகரத்தவனே

தாலோ தாலேலோ, தினைப்புன மான் ஈன்ற வள்ளியைத் தழுவுபவனே தாலோ தாலேலோ (எ.று.).

அருஞ்சொற்பொருள்

பாடலின் இரண்டாமடியை "தள்ளார் உரத்து ஒருமித்துரு வேல்நாட்டும் உருவே என்பார்க்கு ஒருமித்து உருவே நாட்டும் உருவே" என இயைத்துப் பொருள் கொள்க.

## தாலாட்டு 4

மகத்திற் சனிபோற் பிறவிதொறும்
வரும்வெவ் வினையிற் பட்டுநெஞ்ச
மயங்கித் தியங்கிக் காலமெலாம்
வறிதிற் கழித்தே மையவினி
யிகத்திற் பரத்திற் பெறுஞ்சுகத்தி
லிச்சை யுடையே மல்லமுன்றா
லிணையம் புயத்திற் கன்புசெய
விசைந்தே மென்பார்க் கருண்முதலே
சகத்திற் றோன்று மன்பதைசஞ்
சலமார் வந்தித் துவமகலத்
தடுத்தெவ் வரமுந் தரக்குமரா
சயிலத் தெழுந்தோய் தனியில்பெரும்
புகழ்க்கா கரமா யிலங்கு புல்லைப்
புரியாய் தாலோ தாலேலோ
புனமான் றந்த குறமானைப்
புணர்வோய் தாலோ தாலேலோ

பதவுரை

மகத்தில் சனிபோல் = மாவுடுவில் சனிக்கோள் இணைந்தால் வரும் இன்னல்கள் போல, பிறவி தோறும் வரும் வெவ்வினையிற்பட்டு = பிறவிகள் தோறும் வரும் தீவினையில் அகப்பட்டு, நெஞ்சம் மயங்கித் தியங்கி = மதனம் மயங்கிக் கலங்கி, காலமெல்லாம் வறிதே கழித்தேம் = வாழ்நாளெல்லாம் பயனின்றி வீழ்நாளாகக் கழித்தோம். ஐய = ஐயனே, இனி இகத்தில் பரத்தில் பெறுஞ் சுகத்தில் இச்சையுடையேம் அல்லேம் = இனிமேல் இம்மை மறுமையில் பெறும் இன்பத்தில் விருப்பம் உடையோம், இல்லை. உன் தாள் இணை அம்புயத்திற்கு அன்பு செய இசைந்தோம் - நின் திருவடி இணை தோளிற்கு அன்பு செய்ய விரும்பினோம் என்பார்க்கு அருள் முதலே = என்று

சொல்பவர்களுக்கு அருள் செய்யும் முதல்வனே, சகத்தில் தோன்றும் மன்பதை சஞ்சலமார் வந்தித்தும் அகல = இவ்வுலகில் தோன்றும் உலகுயிர்த்துன்பப் பிணிப்பு நீங்க, தடுத்து எவ்வரமும் தரக்குமர சயிலத்து எழுந்தோய் = தடுத்தாட் கொண்டு எவ்வரமும் தருவதற்கு; தனியில் பெரும்புகழ்ச் சாகரமாய் இலங்கு = ஒப்புமையில்லாத பெரும்புகழுக்கு அடிப்படையாய் விளங்கும், புல்லைப் புரியாய் = புல்லைத் திருநகரத்தவனே, தாலோ தாலேலோ = தாலோ தாலேலோ புனமான் தந்த குறமானைப் புணர்வோய் தாலோ தாலேலோ = தினைப்புன மான் ஈன்ற குறமகள் வள்ளியைத் தழுவுபவனே தாலோ தாலேலோ (எ.று.).

## பொழிப்பு

மகவுடுவில் சனிக்கோள் இணைந்தால் வரும் இன்னல்கள் போலப் பிறவிகள் தோறும் வரும் தீவினையில் அகப்பட்டு மனம் மயங்கிக் கலங்கி வாழ்நாளெல்லாம் பயனின்றி வீழ்நாளாகக் கழித்தோம். ஐயனே, இனிமேல் இம்மை மறுமையில் பெறும் இன்பத்தில் விருப்பமுடையோம் இல்லை. நின் இரு திருவடி, இரு அழகிய தோள்களுக்கும் அன்பு செய்ய விரும்பினோம் என்று சொல்பவர்களுக்கு அருள் செய்யும் முதல்வனே, இவ்வுலகில் தோன்றும் உலகுயிர்த் துன்பப் பிணிப்பு நீங்க, தடுத்தாட் கொண்டு எவ்வரமும் தருவதற்குக் குமரமலையின் கண் எழுந்தருளியவனே, ஒப்புமையில்லாத பெரும்புகழுக்கு அடிப்படையாய் விளங்கும் புல்லைத் திருநகரத்தவனே தாலோ தாலேலோ தினைப் புனமான் ஈன்ற குறமகளைத் தழுவுபவனே தாலோ தாலேலோ (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

வந்தித்துவம் = பிணிப்பு. ஆசரம் = ஆதாரம். இணை என்பதனைத் தாள்களுக்கும் தோள்களுக்கும் இணைத்துப் பொருள் கொள்க. இது தீவக அணியின் பாற்படும்.

## தாலாட்டு 5

கன்ன லொடித்துக் கடாவடித்துக்
கருங்கா லுழுந ருழுஞ்சாலிற்
கமலத் தரும்பு மரும்பொடுசெங்
காவி யரும்பின் முருக்கவிழப்
பன்னு மிசைவண் டினமூசும்
பதும நாளங் கடைசியர்செம்

பதுமத் தடிபின் னலிற்பெயர்ந்து
　　　　படரா நிலைகண் டவணாரும்
அன்ன மனையார் நடைக்குமுன
　　　　மாற்றா ததிநா ணுற்றனமீ
தற்ற மாமே எனஞ்செயற்கென்
　　　　றார்க்கும் பணைசூழ் சோணாடா
பொன்னின் மருவு புல்லைநகர்ப்
　　　　புலவா தாலோ தாலேலோ
புனமான் றந்த குறமானைப்
　　　　புணர்வோய் தாலோ தாலேலோ

### பதவுரை

கன்னல் ஒடித்துக் கடா அடித்துக் கருங்கால் உழுவர் = கரும்பு ஒடித்து எருதினை அடித்து விரட்டும், கருங்கால்களை யுடைய உழவர், சாலில் = உழு சாலின் வழியில், கமலத் தரும்பும் - செந்தாமரை அரும்பும், அரும்பொடு = அவ்வரும்பொடு செங்காவி அரும்பின் = செவ்வல்லி அரும்பின் மீதும் முருக்கு அவிழப்பன்னும் மிளமுரளும், இசைவண்டினம் மூசும் = இசை வண்டினம் மொய்க்கும். பதும நாளம் = தாமரைத் தண்டுகள், கடைசியர் செம்பதுமத் தடி பின்னலின் = உழவர் பெண்டிர்தம் செந்தாமரை திருவடிகளில் கிடந்து சிக்குதலின், பெயர்ந்து படரா நிலை கண்டு = கால் பெயர்ந்து நடக்க முடியாத தன்மையைப் பார்த்து, அவண் ஆடும் அன்னம் அனையார் = அவ்விடத்து வந்து நிறையும். அன்னம், பறவைகள் அவை போன்றவர் நடைக்கு முனம் = நடைக்கு முன்னால், ஆற்றாது அதி நாண் உற்றனம் = அற்றாது மிகவும் நாணம் அடைந்தோம் என்பது ஈது ஏளனம் செய்தற்கு அற்றமாம் = எனவே இந்த இகழ்வதற்குப் போதுமானது. என்று ஆர்க்கும் = என்று ஆரவாரம் செய்யும் பணைசூழ் சோணாடா = பண்ணைகள் சூழ்ந்த சோணாட்டுத் தலைவனே, பொன்னிமருவு புல்லை நகர்ப்புலவா தாலோ தாலேலோ = செல்வம் செழித்த புல்லைத் திருநகரத்துப் புலவனே தாலோ தாலேலோ. புனைமான் தந்த குறமானைப் புணர்வோய் தாலோ தாலேலோ = தினைப்புன மான் ஈன்ற குறமகள் வள்ளியைத் தழுவுபவனே தாலோ தாலேலோ (எ.று.).

### பொழிப்பு

கரும்பு ஒடித்து எருதினை அடித்து விரட்டும், கருங்கால்களையுடைய உழவர் உழுகாலின் வழியில் செந்தாமரை

அரும்பும், அவ்வரும்போடு செவ்வல்லி அரும்பின் மீதும் அழகு மிளர முரளும் இசைவண்டினம் மொய்க்கும் அத்தாமரைத் தண்டுகள் உழவுப் பெண்டிர்தம் செந்தாமரைத் திருவடிகளில் கிடந்து சிக்குதலின் கால்பெயர்ந்து நடக்க முடியாத தன்மையைப் பார்த்து அவ்விடத்து வந்துநிறையும் அன்னப் பறவைகள், அவை போன்றவர் நடைக்கு முன்னால் ஆறாது மிகவும் நாணம் அடைந்தோம் எனவே இஃது இகழ்வதற்குப் போதுமானது என்று ஆரவாரம் செய்யும் பண்ணைகள் சூழ்ந்த சோணாட்டுத் தலைவனே, செல்வம் செழித்த புல்லைத் திருநகரத்துப் புலவனே தாலோ தாலேலோ தினைப்புனமான் ஈன்ற குறமகள் வள்ளியைத் தழுவுபவனே தாலோ தாலேலோ (ஈ.று.).

அருஞ்சொற்பொருள்

உழுநர்வினையால் அணையும் பெயர். மூசும் = மொய்க்கும்.

### தாலாட்டு 6

கலகச் சமணிகழ் சமயத் துறையொடு
கவிழப் படுகுழிவீழ்
கழையைச் சுனிமத கயமொத் திடுகவு
ரியன்மெய்ப் படுமுதுகூ
னலையக் கணநிமிர் தரவைத் ததிசுர
நலிவெப் பறவருளா
நதியிற் பெருவழ னடுவிற் பொறி யிதழ்
நகவிட் டிசைபரவப்
பலபொய்த் தொழில்புரி யமணப் பதிதர்கள்
பலமற் றுயர்கழுவிற்
படவிட் டொருசிவ சமயப் பயிர்நனி
பலுகத் தமிழ்மதுரைத்
தலனிற் கிருபையெனு மழையைப் பொழிமுகில்
தாலோ தாலேலோ
சமரத் தயிலவ குமரச் சிலையிறை
தாலோ தாலேலோ

பதவுரை

கலகச் சமண் இகழ் சமயத் துறையோடு = குழப்பம் செய்யும் சமணர்தம் இகழத் தக்க சமயத்துறையோடு, கவிழ = அழிந்துபட, படுகுழி வீழ் கழையைச் சுனிமத கால மொத்திடு =

படுகுழியின் விழுந்து குத்துக் கோலுக்குச் சினம் கொள் மதயானையை ஒத்திருக்கும், கௌரியன் = பாண்டியன், மெய்படு முதுகூன் அலைய கணம் நிமிர்தர வைத்து = உடலின் உண்டாகிய முற்றிய கூன்நோய் வருத்த, அதனைக் கணப்பொழுதில் நிமிர வைத்து அதிசுர நலி வெப்பு அற அருளா = கொடிய காய்ச்சலின் நலிவை, வெப்பத்தை அறவே நீக்கியருளிய, ஒருசிவ சமயப் பயிர் நனி பலுக = ஒப்பற்ற சிவசமயப் பயிர் நன்கு தழைக்க, நதியில் பெரு அழல் நடுவில் பொறியிதழ் நகவிட்டு வைகை நதியின் நடுவிலும் பெருத்த தீயின் நடுவிலும் பாடல்பொறித்த ஏடுகளைப் பறிர் மகிழுமா று விடுத்து, இசைபரவ = புகழ்விளங்க, பொய்த் தொழில் புரி சமணப் பதர்கள் = பொய்யான தொழில் செய்யும் சமணத் தலைவர்கள், பலமற்று உயர் கழுவில் படவிட்டு = வன்மையிழந்து உயர்ந்த கழுமரத்தில் அழியவிட்டு ஒருசிவ சமயம் பயிர் நனிபலுக = ஒப்பற்ற சிவ சமயப் பயிர் நன்கு தழைக்க, தமிழ் மதுரைத் தலனில் கிருபை எனும் மழையைப் பொழிமுகில் = தமிழ்ச் சங்க மதுரைமாநகரில் அருள் எனும் மழையைப் பொழியும் மேகமே, தாலோ தாலேலோ = தாலோ தாலேலோ சமரத் தயிலவ குமரச்சிலையிறை தாலோ தாலேலோ = போர் முகத்து வேலாயுத்தினைக் கொண்ட குமரமலையில் எழுந்தருளிய இறைவனே தாலோ தாலேலோ (எ.று.).

## பொழிப்பு

குழப்பம் செய்யும் சமணர்தம் இகழத்தக்க சமயத் துறையோடு அழிந்துபட படுகுழியின் விழுந்து குத்துக்கோலுக்குச் சினம் கொள் மதயாானையை ஒத்திருக்கும் பாண்டியன் உடலின் உண்டாகிய முற்றிய கூன்நோய் வருத்த அதனைக் கணப் பொழுதில் நிமிர வைத்து, கொடிய காய்ச்சளின் நலிவை வெப்பத்தை அறவே நீக்கி யருளிய ஒப்பற்ற சிவ சமயப் பயிர் நன்கு தழைக்க, வைகை நதியின் நடுவிலும், பெருத்த தீயின் நடுவிலும் பாடல் பொறித்த ஏடுகளைப் பிறர் மகிழுமாறு விடுத்துப் புகழ்விளங்க, பொய்யான தொழில் செய்யும் சமணத் தலைவர்கள் வன்மையிழந்து உயர்ந்த கழுமரத்தில் அழிய விட்டு. ஒப்பற்ற சிவசமயப்பயிர் நன்கு தழைக்கத் தமிழ்ச் சங்க மதுரை மாநகரில் அருள் எனும் மழையைப் பொழியும் மேகமே தாலோ தாலேலோ, போர்முகத்து வேலாயுத்தினைக் கொண்ட குமரமலையில் எழுந்தருளிய இறைவனே தாலோ தாலேலோ (எ.று.).

**அருஞ்சொற்பொருள்**

ஒரு சிவப்பயிர்நனிலுக என்பதனை இரு இடத்தும் கூட்டிப் பொருள் கொள்க. இதில் கூன்பாண்டியன் நெடுமாறன் ஆகிய வரலாறும், சமணர் புனல் வாதம் அனல் வாதம் நடத்திக் கழுவேறிய வரலாறும் கூறப்பட்டுள்ளது.

## தாலாட்டு 7

விதுவிற் பொலிதரு தரளக் குவையொளி
வீச நறுங்குமுதம்
விகசித் தெழுமது மலரிற் கடைசியர்
மிளிர்செந் துகிர்நிகர்வா
யிதழொத் தலினறை மிசையத் தெருளறி
வின்றளி சூழ்ப்பணையோ
டெழில்விட் புலமொடு படர்தற் கரிதென
வென்று பசும்பரிகட்
புதையப் புதுமலர் பொழிகட் புனலொடு
பூந்தா துகள்சிதறும்
பொழில்கற் பகவன நிகரக் கெழுமிய
புல்லை வளம்பதியாய்
சதபத் தெனும்விழி யவனுக் குமருக
தாலோ தாலேலோ
சமரத் தயிலவ குமரச் சிலையிறை
தாலோ தாலேலோ.

**பதவுரை**

விதுவில் பொலிதரு தரளக் குவையொளி வீச = நிலவினும் ஒளிதரும் முத்துக் குவியல் ஒளிவீச, நறுங்குமுதம் விரசித்து எழு மதுமலரில் கடைசியர் மிளர = மணம்மிக்க குமுதம் மலர்ந்து, எழுந்துவரும் மதுமலர் ஒத்துக் கடைசியர் விளங்க, செந்துகிர் நிகர் வாயிதழ் ஒத்திலின் = செம்பவழம் ஒத்து அவர்களின் வாயிதழ் விளங்குதலின், நறை மிகையத் தெருளறிவின் = இன்பம் துய்க்க மயங்கும் அறிவின், தனி சூழ் பணையோடு = நீர் சூழ்ந்த பண்ணையோடு, எழில் விண் புலவரோடு = அழகிய மேகம் சூழ்ந்த நிலபுலமொடு, படர்தற்கு அரிது என, பெருகுதற்கு இயலாதென என்று பசும்பரிகண் புதைய = கூறி தன் பசிய அன்பான கண்களைப் புதைத்தல் ஒத்து, புதுமலர் பொழிகண் புனலொடு = புதுமலர்கள் சிந்தும்

தேனோடு, பூந்தாதுகள் சிதறும் = மகரந்தப் பொடிகளைச் சிந்தும், பொழில் கற்பகவனம் நிகர = கற்பகவனச் சோலை ஒப்ப, செழுமிய புல்லை வளம் பதியாய் = நிறைந்த திருபுல்லை வளம்பதியில் எழுந்தருளியவனே, சதபத்தென்னும் விழியவனுக்கு மருக = ஆயிரம் விழிகளைக் கொண்ட இந்திரனுக்கு மருமகனே, தாலோ தாலேலோ = தாலோ தாலேலோ = போர்முகத்து வேலாயுதத்தையுடையவனே, குமரமலையில் எழுந்தருளிய இறைவனே தாலோ தாலேலோ (எ.று.)

## பொழிப்பு

நிலவினும் ஒளிதரும் முத்துக் குவியல் ஒளிவீச, மணமிக்க குமுதம் மலர்ந்து எழுந்துவரும் மதுமலர் ஒத்துக் கடைசியர் விளங்க, செம்பவழம் ஒத்து அவர்களின் வாயிதழ் விளங்குதலின் இன்பம் துய்க்க மயங்கும் அறிவின் நீர் சூழ்ந்த பண்ணையோடு அழகிய மேகம் சூழ்ந்த நிலபுலமொடு (ஒப்ப) பெருகுதற்கு இயலாதெனக் கூறித் தன் பசிய அன்பான கண்களைப் புதைத்தல் ஒத்துப் புதுமலர்கள் சிந்தும் தேனோடு மகரந்தப் பொடிகளைச் சிந்தும் கற்பகவனச் சோலை ஒப்ப நிறைந்த திருபுல்லை வளம்பதியில் எழுந்தருளியவனே ஆயிரம் விழிகளைக் கொண்ட இந்திரனுக்கு மருமகனே தாலோ தாலேலோ. போர் முகத்து வேலாயுதத்தையுடையவனே குமரமலையில் எழுந்தருளிய இறைவனே தாலோ தாலேலோ (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

படர்தற்கு = பெருகுதற்கு, சிறப்பதற்கு.

### தாலாட்டு 8

விண்டல மண்டல மண்டல மும்புகழ்
வீரா தாலேலோ
விஞ்சையர் விஞ்சை மகம்புரி விஞ்சையர்
விமலா தாலேலோ
கண்டகர் தங்குடி கண்டகழ் வேலநி
கண்டா தாலேலோ
கங்கை யணிந்தவொர் கங்கையன் மைந்த
கடம்பா தாலேலோ
தெண்டக மாயவொர் தொண்டக மானவர்
தொண்டா தாலேலோ

துங்க மிகுஞ்சிகி யொண்பரி தங்கு
சுரேசா தாலேலோ
தண்டரு தண்டலை சூழ்தரு புல்லைத்
தலனே தாலேலோ
சமரத் தயிலவ குமரச் சிலையிறை
தாலோ தாலேலோ

## பதவுரை

விண்டல மண்டல மண்டலமும் புகழ் வீரா தாலேலோ = விண்ணும் மண்ணும் புகழும் வீரனே தாலேலோ, விஞ்சையர் விஞ்சை மகம்புரி விஞ்சையர் விமலா தாலேலோ = தேவர்கட்குரிய மந்திரம் ஓதி வேள்வி செய்யும் தேவர்களுள் குற்றமற்றவனே தாலேலோ, கண்டகர் தங்குடி கண்டு அகழ் வேலா = அசுரர்தம் குடி கண்டு வேரறுக்கும் வேலவனே, நிகண்டா தாலேலோ = உண்மையானவனே தாலேலோ, கங்கை யணிந்தவோர் கங்கையன் மைந்த கடம்பா தாலேலோ = கங்கை சூடிய ஒப்பற்ற சிவனின் மைந்தனே கடம்பனே தாலேலோ, தொண்டகமாய வோர் தொண்டகமானவர் தொண்டா தாலேலோ = இயல்பாகவே பாசங்களின் நீங்கிய ஒப்பற்ற தொண்டுள்ளமானவர்க்குத் தொண்டனே தாலேலோ, துங்க மிகுந்சிகி ஒண்பரி தங்கும் சுரேசா தாலேலோ = தூய்மை மிகுந்த மயிலை சிறந்த ஊர்தியாகக் கொண்டு அதன்மேல் ஏறும் முருகனே தாலேலோ. தண்டரு தண்டலை சூழ்தரு புல்லைத் தலனே தாலேலோ = குளிர்ச்சி தரும் சோலைகள் சூழ்ந்திருக்கும் திருப்புல்லை நகரவனே தாலேலோ, சமரத் தயிலவ குமரச் சிலையிறை தாலோ தாலேலோ = போர் முகத்து வேலாயுதத்தை யுடையவனே, குமரமலையில் எழுந்தருளிய இறைவனே தாலோ தாலேலோ (எ.று.).

## பொழிப்பு

விண்ணும் மண்ணும் புகழும் வீரனே, தேவர்கட்கு ரியமந்திரம் ஓதி வேள்வி செய்யும் தேவர்களுள் குற்றமற்றவனே, அசுரர்தம் குடிகண்டு வேரறுக்கும் வேலவனே, உண்மையான வனே, கங்கை சூடிய ஒப்பற்ற சிவனின் மைந்தனே, கடம்பனே, இயல்பாகவே பாசங்களின் நீங்கிய ஒப்பற்ற தொண்டுள்ள மானவர்க்குத் தொண்டனே, தூய்மை மிகுந்த மயிலைச் சிறந்த ஊர்தியாகக் கொண்டு அதன்மேலேறும் முருகனே, குளிர்ச்சி தரும் சோலைகள் சூழ்ந்திருக்கும் திருப்புல்லை நகரவனே,

போர்முகத்து வேலாயுதத்தையுடையவனே, குமரமலையில் எழுந்தருளிய இறைவனே தாலேலோ.

### அருஞ்சொற்பொருள்

விண்டல மண்டலம் = விண்ணுலகம். விஞ்சை = மந்திரம். மகம் = வேள்வி. விமலன் = குற்றமற்றவன், தலைவன். கண்டகர் = அசுரர். தொண்டகம் - அநாதிமலம், இயல்பாகவே பாசங்களின் நீங்கிய தன்மை. சிகி = மயில். சுரேசன் = முருகன்.

## தாலாட்டு 9

கொண்டல் படிந்தயி லுங்கட லுண்டவர்
குருவே யருவுருவே
கும்பிடு செங்கையொ டன்பர் பணிந்துரு
குதலாய் சிவமதலாய்
வண்ட ரலம்பு கடம்பி வரும்புய
மலையே மிலைவோனே
வஞ்சிம ருங்கிடு குந்தன குஞ்சரி
வரனே சுபகரனே
கண்ட மகண்ட மடங்கலு நின்றருள்
கரியே மதகரியே
கண்களி கொண்ட விளங்களி றொன்றிய
கதிர்சூழ் மழகதிரே
சண்ட விருங்கதி விண்கரி தன்பதி
தாலோ தாலேலோ
சமரத் தயிலவ குமரச் சிலையிறை
தாலோ தாலேலோ

### பதவுரை

கொண்டல் படிந்தயிலுங் கடல் உண்டவர் குருவே = போகக் கூட்டங்கள் பரவியிருந்து நீர் பருகும் கடலை உண்டவர்க்குக் குருவானவனே, அருவுருவே = அருவமும் உருவமுமானவே, கும்பிடு செங்கையொடு அன்பர் பணிந்துரு குதலாய் சிவமதலாய் = வணங்கிடும் செங்கையுடன் தொண்டர்கள் பணிந்திடும் மழலைக் குழந்தையே, சிவனின் குழந்தையே, வண்டர் அலம்பும் கடம்பு இவரும் புயமலையே மிலைவோனே = வண்டுகள் மொய்க்கும் கடப்ப மலர்மாலை புரளும் தோள் மலைகளைக் கொண்டவனே, வஞ்சி மருங்கிடு

குந்தன குஞ்சரி வரனே = பெண்டிர் இடுப்பில் அணியும் மேகலை அணிந்த தெய்வயானையின் கணவனே, சுபகரனே = நன்மை செய்பவனே, கண்டம் அகண்டம் நின்றருள் கரியே = சிற்றணு முதல் பெரும்பேர் அண்டம் முழுமையும் நிலைத்து நின்று அருள்புரியும் புதியவனே, மதகரியே = மதயானை யானை போன்றவனே கண்களி கொண்ட = கண் களிப்படைந்த, இளங்களிறு ஒன்றிய = இளங்களிறு போன்ற, கதிர்சூழ் மழகதிரே = ஒளி சூழ்ந்த செஞ்ஞாயிறே, சண்டவிருங்கதி விண்கரி தன்பதி தாலோ தாலேலோ = போர் முகத்து வேலாயுதத்தையுடையவனே, குமர மலை இறைவனே தாலோ தாலேலோ (எ.று.).

## பொழிப்பு

மேகக் கூட்டங்கள் பரவியிருந்து நீர் பருகும் கடலை உண்டவர்க்கும் குருவானவனே அருவமும் உருவமுமானவனே வணங்கிடும் செங்கையுடன் தொண்டர்கள். பணிந்திடும் மழலைக் குழந்தையே, சிவனின் குழந்தையே, வண்டுகள் மொய்க்கும் கடப்ப மலர் மாலை புரளும் தோள் மலைகளைக் கொண்டவனே, பெண்டிர் இடுப்பில் அணியும் மேகலை (தங்கம்) அணிந்த தெய்வ யானையின் கணவனே, நன்மை செய்பவனே, சிற்றணு முதல் பெரும்பேர் அண்டம் முழுமையும் நிலைத்து நின்று அருள்புரியும் புதியவனே, மதயானை போன்றவனே களிப்படைந்த இளங்களிறு போன்ற ஒளி சூழ்ந்த செஞ்ஞாயிறே, சினம் மிகுந்த செலவினை யுடைய தெய்வயானை தன் தலைவனே போர் முகத்து வேலாயுதத்தையுடையவனே, குமரமலை இறைவனே தாலோ தாலேலோ (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

கடல் உண்டவர் = அகத்தியர். வண்டர் = ஈற்றுப் போலி. வஞ்சி மருங்கிடும் குந்தனம் = ஒட்டியாணம்.

### தாலாட்டு 10

அனித்த பிறவிக ளெடுத்து மிகமிக
வலுக்கும் வகையினி நாடாமே
அடக்கு கமடம துறுப்பி னிகழ்பொறி
யடக்க நிதநிதம் வாடாமே

பனிப்ப வுடல்புள குதிப்ப விழிதுளி
பனிப்ப வரவட நீறாரப்
பரத்வ நிலையக மடுத்து முயர்துதி
படித்த குழறிய நாவோடே
யினித்த பலகனி யவற்பொ ரிகடலை
யிசைத்த நறுநறை பாலோடே
யிதத்தி னடியவர் படைக்க வரமரு
ளிபக்க டவுளிளை யோனேவான்
றனைத்த குவர்குல முழக்க வடுதுயர்
தவிர்க்க வருகுக தாலேலோ
தழைத்த குமரச யிலத்தி னினிதவ
தரித்தி டுகுழக தாலேலோ

**பதவுரை**

அனித்த பிறகள் எடுத்து = அளவிறந்த பிறவிகள் பிறந்து, மிகமிக வலுக்கும் வகையினி நாடாமே அடக்குக = மிகுதியும் நிலைபெறும் வகைமை இனிமேல் விரும்பாமல் இருக்குமாறு அடக்குக. மடமது உறுப்பின் நிகழ் பொறியடங்க நிதம்நிதம் வாடாமே = அழகானது உறுப்புகளில் பளிச்சிட அவ்வுறுப்புப் பொறிகளை அடக்க நாளும் வருந்தாமல், பனிப்ப = குளிர்ந்து உடல்புளகு உதிப்ப = உடல் மயிர்க்கூச் செறிய, விழிதுளி பனிப்பவர = கண்விழிகளில் நீர்த்துளி சிந்த, அட நீறாரசுட்ட வெண்ணீறு விளங்க பரத்துவநிலையகம் அடுத்து = இறைநிலை மனம் கொண்டு, உயர் துதி படிந்த குழறிய நாவோடே = உயர்ந்த துதிப்பாடல்கள் பதிந்த தழுதழுத்த நாவோடே, இனித்த பலகனி அவல் பொரி கடலை = இனிய பலவகைக் கனிகளும் அவலும் பொரியும் கடலையும், இசைத்த நறுநறைப் பாலோடே = இனிய மணமிக்க தேன் கலந்த பாலோடே, இதத்தின் அடியவர் படைக்க = இகத்தின் அடியார் படைக்க, வரமருளிய கடவுள் = வரமளிக்கும் யானை முகன், இளையோனே = இளையவன் முருகனே, ஆண்றனைத் தகுவர் குலமுழக்க அடுதுயர் தவிர்த்து = சிறந்து விளங்கும் நல்லோர்குல வேண்ட அவர்களின் அடுதுயர் நீக்க, வருகுக தாலேலோ = வரும் குகனே தாலேலோ, தழைத்த குமர சயிலத்து இனிது அவதரித்திடு குழக தாலேலோ = வளப்பம் மிகுந்த குமரமலையில் இனிதே தோன்றிய இளவலே தாலேலோ (எ.று).

## பொழிப்பு

அளவிறந்த பிறவிகள் பிறந்து மிகுதியும் நிலைபெறும் வகையை இனிமேல் விரும்பாமல் இருக்குமாறு அடக்குக. அழகானது உறுப்புக்களில் பளிச்சிட, அவ்வுறுப்புப் பொறிகளை அடக்க நாளும், வருந்தாமல், குளிர்ந்து உடல் மயிர்க்கூச்செறிய கண் விழிகளில் நீர்த்துளி சிந்த, சுட்ட வெண்ணீறு விளங்க இறைநிலை மனம்கொண்டு உயர்ந்த துதிப்பாடல்கள் பதிந்த தழுதழுத்த நாவோடே இனிய பலவகைக் கனிகளும் அவலும் பொரியும் கடலையும் இனிய மணமிக்க தேன் கலந்த பாலேடே இகத்தின் அடியார் படைக்க வரமளிக்கும் யானைமுகன் இளை யோனே முருகனே, சிறந்து விளங்கும் நல்லோர் குலம்வேண்ட அவர்களின் அடுதுயர் நீங்க வரும் குகனே தாலேலோ, வளப்பம் மிகுந்த குமரமலையில் இனிதே தோன்றிய இளவலே தாலேலோ (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

அட நீறார = அட என்பது அட்ட என்பதன் இடைக்குறை. நிதம் நிதம் = அடுக்குத் தொடர். இகத்தின் - இவ்வுலகின்.

தாலப்பருவம் முற்றிற்று

# சப்பாணிப் பருவம்

சப்பாணிப் பருவமாவது' கையுடனே கைசேர்த்துக் கொட்டும் நிலையென முன்னர் விளக்கப்பட்டுள்ளது. நிற்க, நான்காம் பருவமாகிய சப்பாணிப் பருவம் ஒன்பதாம் திங்களில் தொடங்கி நிகழ்வதாகக் கூறுவர். சப்பாணியாவது குழந்தையை இருகைகளையும் கொட்டி விளையாடுமாறு வேண்டுவது என்க (எ.று.).

### சப்பாணி 1

பன்னரிய தரளங் கொழிக்கும் பகீரதி
பயந்தவே ளெனுமகவை யுட்
பரிவினொடு காண்டற்கு முக்கனிமு தற்கொடுசெல்
பரிசின்வரு வெண்கு டிஞையிற்
பொன்னின்மலி கற்பகா டவியினறு நீழற்
பொலிந்தவா னரம களிர்தம்
பொற்பை விண் ணரமகளிர் கண்டுக ணிமைக்கிமை
பொருந்தாது நோக்க னோக்கி

அன்னநடை யந்நில மடந்தையர்த மினமென
வணைந்துநீ ராட்ட யர்தரும்
அமரர்தம் பதிகுலவு மளகையம் பதியொடு
மனந்தனுறை யும்பதி தொழத்
தன்னிகர் தரும்புல்லை சேர்குமர வெற்பினிறை
சப்பாணி கொட்டி யருளே
சத்தாகி யுயர்ஞான வித்தாய் முளைத்தவா
சப்பாணி கொட்டி யருளே.

**பதவுரை**

பன்னரிய தரளங் கொழிக்கும் = விலைமதிப்பு கூறற்கரிய முத்துக்களைக் கரையில் கொழிக்கும், பகீரதி பயந்த வேள் எனும் அகவை = கங்கை தாய் தான் தோற்றுவித்த முருகனைப் பரிவினொடு காண்டற்கு = உள் அன்போடு பார்ப்பதற்கு, முக்கனி முதற்கொடு = முக்கனி முதலாக யாவும் எடுத்துக் கொண்டு, செல் பரிசின் வரு வெண் குடிஞையில் = ஏற்கத் தக்க பரிசில் பொருள்களோடு வரும் வெள்ளிய ஆற்றின் கரையில், பொன்னின் மலி = பொன்னின் சிறந்த மலர்கள் மலிந்த, கற்பகாடவி நறுநீழல் பொலிந்த = கற்பக் காட்டின் மணம்மிக்க நிழலில் விளங்கிய, வானர மகளிர்தம் பொற்பை = பெண் குரங்குகளின் சிறப்பை, விண்ணரமகளிர் கண்டு = விண்ணிடத்து பெண்கள் பார்த்து, இமைக்கிமை பொருந்தாது = கண் இமை கொட்டாமல் நோக்கல் நோக்கி = பார்த்தலைப் பார்த்து, அன்ன நடை அந்நிலமடந்தையர் = அன்ன நடையுடைய அந்நிலத்துப் பெண்டிர், தம் இனமென அணைந்து = அவர்களும் தம்மை ஒத்த பெண்ணினம் என்று நெருங்கி, நீராட்டு அயர்தரும் = நீராடல் புரியும், அமரர்தம்பதி குலவு அளகையம் பதியொடு = தேவர்தம் அமராபதி யானை = குபேரனது அளகா புரியோடு, அனந்தன் உறையும் பதிதொழ = ஆதிசேடன் வாழும் பதியும் தொழச் சிறந்த, தன்னிகர் தரும் புல்லை சேர் = தனக்குத் தானே ஒப்புமையாமெனும் திருப்புல்லை நகரைச் சேர்ந்து எழுந்தருளிய, குமர வெற்பின் இறை = குமரமலையின் இறைவனே, சப்பாணி கொட்டியருளே = இருகைகளையும் கொட்டி விளையாடியருள் வாயாக. சத்தாகி, உயர்ஞான வித்தாய் முளைத்தவா = சத்தாய், உயர்ஞான விதையாய்த் தோன்றியவனே, சப்பாணி கொட்டி யருளே = இருகைகளையும் கொட்டி விளையாடி யருள் வாயாக.

## பொழிப்பு

விலை மதிப்பு உறற்கரிய முத்துக்களைக் கரையில் கொழிக்கும் கங்கைத்தாய், தான் தோற்றுவித்த முருகனை உள் அன்போடு பார்ப்பதற்கு முக்கனி முதலாக யாவும் எடுத்துக் கொண்டு ஏற்கத்தக்க பரிசில் பொருள்களோடு வெள்ளிய ஆற்றின் கரையில் பொன்னின் சிறந்த மலர்கள் மலிந்த கற்பக் காட்டின் மணம்மிக்க குழலில் விளங்கிய பெண் குரங்குகளின் சிறப்பை விண்ணிடத்து பெண்கள் பார்த்து கண்ணிமை கொட்டாமல், பார்த்தலைப் பார்த்து அன்ன நடையுடைய அந்நிலத்துப் பெண்டிர், அவர்களும் தம்மை ஒத்த பெண்ணினம் என்று நெருங்கி நீராடல் புரியும், தேவர் தம் அமராதியனைய குபேரனது அளகா புரியோடு ஆதிசேடன் வாழும்...... பதியும் தொழச் சிறந்த தனக்குத் தானே ஒப்புமையாமெனும் திருப்புல்லை நகரைச் சேர்ந்து எழுந்தருளிய குமரமலையின் இறைவனே இருகைகளையும் கொட்டி விளையாடி யருள்வாயாக. சத்தாய், உயர்ஞான விதையாய்த் தோன்றியவனே இருகைகளையும் கொட்டி விளையாடி அருள்வாயாக.

### அருஞ்சொற்பொருள்

வேள் = சிறந்த ஆண்மகன். அகவை = வயது. ஈண்டு தோற்றப் பொலிவை உணர்த்தியது. முக்கனி = மா, பலா, வாழை. குடிசை = ஆறு. வானரம் = குரங்கு, விண்ணகர மகளிர் = விள். நரமகளிர் = அளவளாவும் பெண்டிர். இந்திரன்பதி = அமராபதி. குபேரன்பதி = அளகாபுரி. அனந்தன் பதி = ஆதிசேடன் பதி.

### சப்பாணி 2

வண்ணச் செழுங்கமல முகைவிண் டளிக்குழா
மதுவுண்டு பாண்முரலு மோர்
வாவியின் மணிக்கூல மேவிவிண் ணாரச்சு
வத்தநின் றோர்பா சடை
யொண்ணப் பினிற்கரையின் வீழ்ந்துபப் பாதியிலை
யோங்குமீ னம்புளு ருவா
யொன்றையொன் றீர்த்திடும் வியப்புநெஞ் சீர்ப்பச்செய்
யோகம் பிழைத்த தெனவே
யெண்ணியிப் பாரிடத் தினிவரு பிழைப்பின்
றெனப்பெரும் பாரிட மெடுத்
தேகிப் பொருப்பின்முழை யுய்ப்பமா ழாந்துதுதி
யேற்றுநக் கீரனுய்யத்

தண்ணற் பெருங்கருணை புரிகுமர மலையதிப
சப்பாணி கொட்டி யருளே
சத்தாகி யுயர்ஞான வித்தாய் முளைத்தவா
சப்பாணி கொட்டி யருளே

*பதவுரை*

வண்ணச் செழுங்கமல முகை விண்டு = செவ்வண்ணமும், செழுமையும் கலந்த தாமரைப் பொருட்டினை முறுக்கவிழச் செய்து, அளிக்குழாம் மதுவுண்டு = தேன்வண்டுகள் தேனுண்டு, பாண் முரலுமோர் வாவியின் = இசை பாடும் ஒரு குளத்தின் மணிச் சலம் மேவி = சிறந்த நீர்க்கரையை சேர்ந்து, விண்ணாரச் சுவத்த நின்றோர் பாசடை = மேற்பகுதி முழுமையும் நன்மை நின்றதோர் பச்சிலையால், பொன்னப்பினில் = தூய்மை நிறைந்த நீரினும், கரையின் வீழ்ந்து = கரையினும் விழுந்து, பப்பாதியிலை = பாதிப்பாதியிலை, ஓங்கு மீன் புள் உருவாய் = இணைந்த ஈருடன் ஓருயிரான மீனும் பறவையுமான வடிவில், ஒன்றை ஒன்று ஈர்த்திடும் வியப்பு = ஒன்றைப் பிறிதொன்று நீருக்கும் நிலத்திற்குமாய் அழுத்திடும் வியப்பு, நெஞ்சு ஈர்ப்ப= நெஞ்சம் கரவ, செய்யோகம்பிழைத்தது எனவே எண்ணி = செய்யும் யோகம் கெட்டுவிட்டது. என்றே நினைந்து, இப்பாடலில் வரும் பிழைப்பின்றென = அவற்றைத் தனிமைப்படுத்தினால் இவ்வுலகில் வரும் தவறு ஒன்றுமில்லை என்று அவற்றைப் பிரித்துவிட, பெரும்பாரிடம் எடுத்து ஏகி = அவ்விடத்திருந்து ஒரு பூதம் வெகு தூரம் எடுத்துச் சென்று, பொருப்பின் முழை உய்ப்ப = மலைக்குகை ஒன்றின் அடைத்து வைக்க, மாழ்ந்து துதியேற்று நக்கீரன் விடுபட = மனங்கலங்கி, உன்னை நினைந்து போற்றிப் பாடிய நக்கிரன் விடுபட, தண் நற் பெருங்கருணை புரி = குளிர்ந்த நல்ல சிறந்த அருளைப் புரிந்த, குமரமலை அதிப = குமரமலைத் தலைவனே, சப்பாணி கொட்டியருளே = இரு கைகளையும் கொட்டி விளையாடியருள்வாயாக, சத்தாகி, உயர்ஞான வித்தாய் முளைத்தவா = சத்தாய், உயர்ஞான விதையாய்த் தோன்றியவனே, சப்பாணி கொட்டியருளே = இருகைகளையும், கொட்டி விளையாடியருள்வாயாக.

*அருஞ்சொற்பொருள்*

உண்மையில் மீனும் பறவையும் ஈருடல் ஓருயிராயினும், ஈருடல் கண்டமையின் ஈருயிராம் எனக் கருதி பிரித்துவிட அவையிறந்துபட்டன என்க. இதே காரணம் காட்டி இதற்கு

முன் தொள்ளாயிரத்து தொண்ணூற்று ஒன்பதின்மரை அடைத்து வைத்திருந்த பூதம் நக்கீரனாரையும் அடைத்து வைத்துச் சென்றது. அது வருவதற்குள் நிலைமையுணர்ந்த நக்கீரன் முருகனை எண்ணித் திருமுருகாற்றுப்படை பாட, முருகன் எழுந்தருளிப் பூதத்தினைக் கொன்று அனைவரையும் விடுவிடுத்தான் என்ற கதைக்குறிப்பினை இப்பாடலில் குறித்தாரென்க.

## சப்பாணி 3

கோடரங் குதிகொண்டு லாவுவேய் மருவிறாற்
குலமுடைந் தொழுக வொழுகுங்
கோற்றேனு நீள்பணைப் பருமப் புழைக்கைகொடு
கூர்ங்கோட்டு மத்தமத மாச்
சேடகத் தும்பருறை கற்பக மலர்க்கான்
சிதைத்துழக் கலினொழுகு செந்
தேறலு முதிர்ந்தமு கனிவெடித் தொழுகுதீந்
தேறலு மொருங்கள வளாய்
நீடலை செறிந்ததிர்ந் தோங்குதே னருவியாய்
நீரருவி யோடுற்று நா
னிலனும் புதைப்பப் படர்ந்தேரி வயல்குள
நிரப்பிலெங் கலியக லவே
சாடுபு வளங்குலவு குமரமலை யாதிபதி
சப்பாணி கொட்டி யருளே
சத்தாகி யுயர்ஞான வித்தாய்மு ளைத்தவா
சப்பாணி கொட்டி யருளே.

**பதவுரை**

கோடரங் குதி கொண்டுலவு வேய் = குரங்குகள் குதித்துத் திரியும் மூங்கில்கள், மருவு இறால் குலமுடைந்து = பாட்டுத் தேன் கூடுகள் உடைந்து, ஒழுக ஒழுகும் கோல் தேனும் = ஒழுக ஒழுகும் கொம்புத் தேனும், நீள் பணைப்பருமப் புழைக்கைகொடு = நீண்டும் பருத்தும் பெருத்த துளைக் கையும், கூர்ங்கோட்டு மத்தமதமா = கூரிய கொம்புகளையும் தலை நெற்றியும் மதமும் கொண்ட யானைகள், சேடகத்து உம்பர் உறை கற்பகமலர்க்கான் = பொன்மதில் சூழ்ந்த மேலுலகத்துத் தேவர்கள் வாழும்கற்பகமர மலர்க்காடுகளைச் சிதைத்து = சிதைத்துஉழக்கலின் ஒழுகு செந்தேறலும் = கலங்குதலின் ஒழுகு செந்தேனும், முதிர்ந்த முக்கனி வெடித்து ஒழுகு தீந்தேறலும் = முற்றி முதிர்ந்த

முக்கனிகள் வெடித்து ஒழுகும் தீந்தேனும், ஒருங்கு அளவளாய் நீடலை செறிந்து = ஒன்றாய்க் கலந்து ஓடிக் கலந்து, அதிர்ந்து ஓங்கு தேன் அருவியாய் = ஆரவாரம் மிகுந்த தேன் அருவியாய், நீரருவியோடு உற்று = நீர் அருவியோடு கலந்து, நாநிலனும் புதைப்பப் படர்ந்து ஏரி வயல் குளம் நிரப்பி = நால்வகை நிலமும் முழுகுமாறும் பரவி ஏரியும் வயலும் குளமும் நிரப்பி, வெங்கலியகலவே = கொடிய வறுமை நீங்கவே சாடுபு வளம் குலவு = குதித்து நிலம் கிழித்து வந்து வளப்பம் நிலவும், குமரமலை யாதிபதி = குமரமலையின் ஆதித் தலைவனே, சப்பாணி கொட்டியருளே = இரு கைகளையும் கொட்டி விளையாடி யருள்வாயாக. சத்தாகி உயர் ஞான வித்தாய் முளைத்தவா = சத்தாய், உயர் ஞான விதையாய்த் தோன்றியவனே, சப்பாணி கொட்டியருளே = இருகைகளையும் கொட்டி விளையாடி அருள்வாயாக (எ.று.).

## பொழிப்பு

குரங்குகள் குதித்துத் திரியும் மூங்கில்கள் பட்டுத் தேன் கூடுகள் உடைந்து ஒழுக ஒழுகும் கொம்புத்தேனும், நீண்டும் படுத்தும் பெருத்த துளைக் கையும் கூரிய கொம்புகளையும் தலை நெற்றியும் மதமும் கொண்ட யானைகள் பொன் மதில் சூழ்ந்த மேலுலகத்துத் தேவர்கள் வாழும் கற்பக மலர்க்காடுகளைச் சிதைத்து கலக்குதலின் ஒழுகு செந்தேனும், முற்றி முதிர்ந்த முக்கனிகள் வெடித்து ஒழுகும் தீந்தேனும் ஒன்றாய்க் கலந்து ஓடிக் கலந்து ஆரவாரம் மிகுந்த தேன் அருவியாய் நீர் அருவியோடு கலந்து நால்வகை நிலமும் முழுகுமாறும் பரவி ஏரியும் வயலும் குளமும் நிரப்பிக் கொடிய வறுமை நீங்கவே குதித்து நிலம் கிழித்து வந்து வளப்பம் நிலவும் குமர மலையின் ஆதித் தலைவனே, இருகைகளையும் கொட்டி விளையாயடியருள் வாயாக. சத்தாய் உயர்ஞான விதையாய்த் தோன்றியவனே இருகைகளையும் கொட்டி விளையாடி அருள்வாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

இப்பாடலில் தேனைக் கொம்புத் தேன், செந்தேன், தீந்தேன் என வகைப்படுத்திய இனிமை பாராட்டற்குரியது. தேனருவி பாய்ந்து வளம் குலவு குமரமலை என்றலின் இப்பாடல் உயர்வு நவிற்சியின் பாற்படும்.

### சப்பாணி 4

மண்ணில்லா மெண்ணரிய மன்பதைக் குலமொடுபொன்
வளநகர்க் கதிப னாய
மகபதியும் விஞ்சையர் வணங்கிரு நிதிக்கிழான்
மற்றைவா னமரர் தம்மின்
உண்ணரு மருந்துண் டறாததம் பிணிநிலை
யுணர்ந்துநின் றிருவி னெய்தி
யுயர்ஞான பண்டித னெனப்பரவி யந்நோ
யொழிக்கவரு வாரை நோக்கிக்
கண்ணகன் ககனப் பரப்புவட் டத்தென்று
கவனமாக் கடவி வினதை
கான்முளைத னற்றகான் முளைமுழுக் காலுறக்
கருதிவர லொப்ப வலமார்
தண்ணிய மலர்த்தாரு சூழ்குமர மலையதிப
சப்பாணி கொட்டி யருளே
சத்தாகி யுயர்ஞான வித்தாய் முளைத்தவா
சப்பாணி கொட்டி யருளே

பதவுரை

மண்ணில் வாழ் எண்ணரிய மன்பதைக் குலமொடு = நிலவுலகில் வாழ்கின்ற எண்ணற்ற உயிர்க் கூட்டங்களோடு, பொன்னகர்க்கு அதிபனாய் மகபதியும் = பொன்நகருக்குத் தலைவனாகிய இந்திரன், விஞ்சையர் வணங்கு வித்தியாதரர் வணங்கும் குபேரன், மற்றை வான் அமரர் தம்மின் = மற்றுமுள்ள விண்ணகத் தேவர்களும், உண்ணரு மருந்துண்டு = உண்ணுதற்கு அரிய மருந்தாகிய அமுது உண்டு, அறாத தம் பிணிநிலை யுணர்ந்து = நீங்காத தமது நோய்த் தன்மை நினைந்து, நின்திருவின் எய்தி = நின் திருவருள் அடைந்து, உயர் ஞான பண்டிதன் எனப் பரவி = உயர்ந்த அறிவுப் புலவன் என்று போற்றிப் புகழ்ந்து. அந்நோய் ஒழிக்க வருவாரை நோக்கி = அந்த நோயை ஒழிக்க வருபவர்களைப் பார்த்து, கண்ணகல் ககனப் பரப்பு வட்டத்து என்று = இடம் பரந்த வளி மண்டலம் விரிந்த வட்டத்துள் என்று, கவனமா கடவி வினதை = கலக்கமாகி விரையும் கருடன், கால் முள் ஐது அளற்ற = கால் முள் நுண்மை வறுத்த கான்முளை முழுக்காலுறக் கருதி = தன் பார்ப்பு முழுமையும் காலூன்ற நினைத்து, வரல் ஒப்ப = விரைந்து வருதல் போல வலமார் = வலமாக வரும், தண்ணிய மலர்த்தாரு சூழ் = குளிர்ந்த மலர்களைப் பெற்ற மரங்கள் சூழ்ந்த, குமரமலையதிய = குமர

மலைத் தலைவனே, சப்பாணி கொட்டியருளே இருகைகளையும் கொட்டி விளையாடி யருள்வாயாக. சத்தாகி, உயர்ஞான வித்தாய் முளைத்தவா = சத்தாய், உயர்ஞான விதையாய்த் தோன்றியவனே, சப்பாணி கொட்டியருளே = இருகைகளையும் கொட்டி விளையாடி யருள்வாயாக (எ.று.).

## பொழிப்பு

நிலவுலகில் வாழ்கின்ற எண்ணற்ற உயிர்க் கூட்டங்களோடு பொன்னகருக்குத் தலைவனாகிய இந்திரன், வித்தியாதர் வணங்கும் குபேரன் மற்றுமுள்ள விண்ணகத் தேவர்களும் எண்ணதற்கு அரிய மருந்துண்டு நீங்காத தமது நோய்த் தன்மை நினைந்து நின் திருவருளை அடைந்து உயர்ந்த அறிவுப் புலவன் என்று போற்றிப் புகழ்ந்து அந்த நோயை ஒழிக்க வருபவர்களைப் பார்த்து, இடம் பரந்த வளிமண்டலம் விரிந்த வட்டத்துள் என்றும் கலக்கமாகி விரையும் கருடன் கால்முள் நுண்மை வறுத்தத் தன் பார்ப்பு முழுமையும் காலூன்ற நினைந்து விரைந்து வருதல் போல வலமாக வரும், குளிர்ந்த மலர்களைப் பெற்ற மரங்கள் சூழ்ந்த குமரமலைத் தலைவனே இரு கைகளையும் கொட்டி விளையாடி அருள்வாயாக. சத்தாய் உயர் ஞான விதையாய்த் தோன்றியவனே இருகைகளையும் கொட்டி விளையாடி யருள்வாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

மன்பதை = உயிர்க் கூட்டம். உண்ணரும் மருந்து = தேவர்கட்கு அமிர்தமும், மன்பதைக்குக் காயகற்பமும் என்க. வருவார் = வினையாலணையும் பெயர். ககனப் பரப்பு = வளி மண்டலப் பரப்பு. இறைவன் வான் வெளியின் நின்று உயிர்களுக்குப் படியளப்பவன் என்னும் கருத்தைக் கருடனைக் கொண்டு விளக்கியமையால் இஃது உவமையணியாகும். தரு என்பது தாரு என வந்தது நீட்டல் விகாரம்.

### சப்பாணி 5

வானகத் தினைவகந் தரையாய் வசுந்தரையை
வானகம தாக வேலா
வலயம் பொருப்பா யடுக்கன்முந் நீரதா
மார்த்தாண்டன் வெண்மதி யமாய்ப்
பானிலா மதியிரவி யாயணுவை மேருவாய்ப்
பகர்மேரு வணுவாய்ப் புறப்

பவ்வமாய்ப் புவனியைப் புலனமா கப்புறப்
பவ்வத்தை வடவை நீராய்
ஞானியர்க ளும்பர்க ளெவர்க்கேனு மொருகன்ன
னண்ணுமயு தத்தி னொன்றி
னாள்பலப் பலசெலவு மாயஞ்செய் கிரவுஞ்ச
நகமுந் தகர்த்த வடிவேற்
றானையணி செங்கரங் கொடுகுமர மலையதிப
சப்பாணி கொட்டி யருளே
சத்தாகி யுயர்ஞான வித்தாய் முளைத்தவா
சப்பாணி கொட்டி யருளே

பதவுரை

வானத்தினை வசுந்தரையாய் = விண்ணைச் செல்வம் மிக்க நிலமாய், வசுந்தரையை வானகமாதாக = செல்வம் மிக்க நிலத்தை வானகமாய் ஏலா வலயம் பொருப்பாய் = நிலை பேறற்ற நிலவலயம் முழுமையும் மலையாய், அடுக்கல் முந்நீரதா = மலைகள் கடலாய், மார்த்தாண்டன் வெண்மதியமாய் = செஞ்ஞாயிற்றை வெண்மதியமாய், பால் நிலா மதி இரவியாய் = பால் நிலவு தரும்நிறைமதியைச் செஞ்ஞாயிறாய், அணுவை மேருவாய் = சிற்றணுவை மாமேரு மலையாய், பகர் மேரு வணுவாய் = மலைப்பு மீக்கூரக் கொல்லும் மேருமலை ஒரு சிற்றணுவரிய, புவனியைப் புறப் பவ்வமாய் = உலகின் மண்ணை உலகு சூழ்ந்த கடலாய், புறப்பவ்வத்தைப் புவனமாக = உலகு சூழ்ந்த கடலை உலகின் மண்ணாய், வடவை நீராய் = வடவைத் தீயை நீராய், ஞானியர்கள் உம்பர்கள் எவர்க்கேனும் = ஞானியர்கள் தேவர்கள் மற்றுமுள்ளோர் ஒரு கன்னல் நண்ணும் அயுதத்தின் ஒன்றி = ஒரு கரும்பு போன்ற பசியிலா வாழ்வின் நின்று நாள் பலப்பல செலவும் = நாட்கள் பலப்பல கழியவும், மாயஞ் செய்கிரவுஞ் நகமும் = மாயவினை புரியும் கிரவுஞ்ச மலையை தகர்த்த வடிவேல் = பொடித்த வடிவேல் தானையணி செங்கரங்கொடு = படையைச் செங்கையில் பிடித்த, குமரமலை யதிப = குமரமலைத் தலைவனே, சப்பாணி கொட்டி யருளே = இருகைகளையும் கொட்டி விளையாடியருள்வாயாக. சத்தாகி உயர்ஞான வித்தாய் = சத்தாய் உயர்ஞான விதையாய், முளைத்தவா = தோன்றியவனே, சப்பாணி கொட்டியருளே = இருகைகளையும் கொட்டி விளையாடி யருள்வாயாக (எ.று.).

## பொழிப்பு

விண்ணைச் செல்வமிக்க நிலமாய், செல்வம் மிக்க நிலத்தை வானகமாய் நிலைபேறற்ற நிலவலயம் முழுமையும் மலையாய, மலைகள் கடலாய், செஞ்ஞாயிற்றை வெண் மதியமாய், பால் நிலவும் தரும் நிறை மதியைச் செஞ்ஞாயிறாய், சிற்றணுவை மாமேரு மலையாய், மலைப்புமீக் கூரச்சொல்லும் மேருமலை ஒரு சிற்றணுவாய், உலகின் மண்ணை உலகு சூழ்ந்த கடலாய், உலகு சூழ்ந்த கடலை உலகின் மண்ணாய், வடவைத் தீயை நீராய் ஞானியர்களுக்கேனும் தேவர்களுக்கேனும் ஒரு கரும்பு போன்ற இவ்வுலக வாழ்வின் ஒன்றி நாட்கள் பலப்பல கழியவும் மாயவினை புரியும் கிரவுஞ்ச மலையைத் தகர்த்த வடிவேல் படையைச் செங்கையில் பிடித்த குமரமலைத் தலைவனே இருகைகளையும் கொட்டி விளையாடி யருள்வாயாக. சத்தாய் உயர்ஞான விதையாய்த் தோன்றியவனே இருகைகளையும் கொட்டி விளையாடி யருள்வாயாக.

## அருஞ்சொற்பொருள்

வேலா என விளித்துப் பொருள் கொள்க. புறப்பவமதாய்ப் புவனியை என்பதையும் புவனமாகப் புறப்பவ்வத்தை என்பதையும் தன்னின் சொல்மாற்றிப் பொருள் கொள்க. எவர்க்கேனும் என்பதனை ஞானியர்கள் உடனும் இயைத்துப் பொருள் கொள்க. அயுதம் = பிரிவின்மை, வாழ்வு, தானை = படை, ஆயுதம்.

### சப்பாணி 6

சீரதழ் நளினத் தளியிற் றுலவிய
 செய்யவண் மணிமார்பச்
செம்மலு மொள்ளிய வெள்ளிய சலசைச்
 செல்வனு மைந்தரு வாழ்
கார்முகி லூர்திக் கடவுட் குவிசக்
 கடவுளி லேகரு மாய்க்
கதறக் கதற வரந்தை யியற்று
 கடும்பணி யாவிளையாப்
பாரி னெமக்குமை யன்றியொர் புகலிலை
 பார நுமக்கடியார்
பரம தயாளு வெனக்குறை கூறப்
 படருஞ் சூர்மாவைக்

கூர்யில் கொண்டு துளைக்க விடுத்தவ
கொட்டுக சப்பாணி
குமரச் சிலைவதி யமரர்க் கதிபதி
கொட்டுக சப்பணி

பதவுரை

சீரிதழ் நளினத்து அளியிற் குலவிய செய்யவன் மணிமார்ப = செவ்விதழ்த் தாமரை வண்டுகள் என இனிதின் விளங்கிய செம்மையும் வன்மையும் கொண்ட மணிமார்பனே, செம்மலும் = சிவபெருமானும், ஒள்ளிய வெள்ளிய சலகை வாழ்செல்வனும் மைந்தரும் = செந்திருவுடனாய் வாழ் திருமாலும், வெண் திருவுடனாய் வாழ் நான்முகனும், கார்முகில் ஊர்திக் கடவுள் = கருமேகத்தினை ஊர்தியாகக் கொண்ட இந்திரனும், குலிசக் கடவுளிலே = உள்ளிட்ட வச்சிரப் படையுடையார் தம்முள், கருமாய்க் கதறக் கதற = உடலழிய வாய்விட்டு அரற்ற, அரந்தை யியற்று கடும்பணியால் இயைபு = துன்பம் செய்யும் கடுமையான வேலைப் பளுவினால் உடல் இளைத்து, பாரின் எமக்கு உமையன்றி ஓர் புகலிலை = இவ்வுலக வாழ்வில் எங்களுக்கு உம்மையல்லால் வேறு ஒருவரும் அடைக்கலம் தருவார் இல்லை, பாரம் நுமக்கு = எம்மை காவாவிடில் அதனால் வரும்பழி உம்மையே சாரும், அடியார் பரம தயாளு = தொண்டர்கட்குச் சிறந்த அருள் வடிவானவனே, எனக் குறைகூற = என்று முறையிட, படரும் சூர்மலை = துன்பம் செய்யும் சூரபன்மனை, கூர் அயில் கொண்டு தளைக்க விடுத்தவ = கூரிய வேல் கொண்டு துளைத்து அழிக்க அதனைவிட்டவனே, சப்பாணி கொட்டுக = இருகைகளையும் கொட்டி விளையாடுக. குமரச் சிலைவதி அமரர்க்கு அதிபதி = குமரமலைக் கண் வாழும் தேவர்கட்கும் தலைவனே, சப்பாணி கொட்டுக = இருகைகளையும் கொட்டி விளையாடுக. (எ.று).

பொழிப்பு

செவ்விதழ்த் தாமரை வண்டுகள் என இனிதின் விளங்கிய செம்மையும் வண்மையும் கொண்டமணி மார்பனே, சிவ பெருமானும், செந்திருவுடனாய் வாழ்திருமாலும், வெண் திருவுடனாய் வாழ் நான்முகனும், கருமேகத்தினை ஊர்தியாகக் கொண்ட இந்திரனும் உள்ளிட்ட வச்சிரப் படையுடையார் தம்முள் உடலழிய வாய்விட்டு அரற்றத் துன்பம் செய்யும் கடுமையான வேலைப் பளுவினால் உடல் இளைக்க இவ்வுலக

வாழ்வில் எங்களுக்கு உம்மையல்லாமல் வேறு ஒருவரும் அடைக்கலம் தருவார் இல்லை; எம்மைக் காலாவிடில் அதனால் வரும்பழி உம்மையே சாரும் தொண்டர்களுக்குச் சிறந்த அருள்வடிவானவனே என்று முறையிட துன்பம் செய்யும் சூரபன்மனை உரிய வேல் கொண்டு துளைத்து அழிக்க அதனை விட்டவனே இருகைகளையும் கொட்டி விளையாடுக. குமரமலைக் கண் வாழும் தேவர்கட்கும் தலைவனே இருகைகளையும் கொட்டி விளையாடுக (எ.று.).

### அருஞ்சொற்பொருள்

மணிமார்பன் = முருகன் முருகன், அவன் மணிகள் கிடந்து அலைதலை செந்தாமரையில் வண்டுகள் மொய்ப்பதாக கொண்டு 'சீரிதழ் நளினத்து அணியிற் குலவிய" என்றார். சலசை = திருமகள். எனினும் ஒள்ளிய வெண்ணிய என்ற மையின் செல்வதிருமாலையும் கல்வித் திருமகளையும் குறித்தார் என்க. அம்முறையானே செல்வனும் மைந்தரும் என்று திருமாலையும் நான் முகனையும் குறித்தமை காண்க. வாழ் என்பதனை கலசை என்பதனுடன் இணைத்துப் பொருள் கொள்க. தான் தனித்து தாயின் கருப்பையில் இருந்து பிரிவதற்கு முன்பு தாயின் உணர்வுகளையே பெறும் வெற்றுடலாய் தனியியுர் என்று கருத்தப்படாத கருவை, அது அழிதலை "கருமாய்" என்றார். எனவே கரு வெற்றுடல் என்பதாயிற்று. கொட்டுக சப்பாணி என்பதனை மாற்றி சப்பாணி கொட்டுக என இயைத்துப் பொருள் கொள்க.

### சப்பாணி 7

தவளக் கரிமிசை வருசக் கரனரு
டனையை தனக்குவடுந்
தகரத் தளவணி யளகக் குறமயி
றடமுலை யின்குவடுஞ்
சுவடுற் றிடநனி தழுவத் தழுவிய
தோள்வடு வன்றிவழுச்
சொலுதற் கிலையென லொளிர்மெய்ச் சிவகுரு
துன்புசெய் தாரகனா
மவுணக் கொடியன துடலைக் கிழிய
வடர்ந்துரு செம்புனனீ
ரதியுக் கிரமொடு பருகித் திசைதிசை
யஞ்ச மடங்கல்வரு

குவதொப் பெனவரு மயிலைப் பயில்கர
கொட்டுக சப்பாணி
குமரச் சிலைவதி யமரர்க கதிபதி
கொட்டுக சப்பாணி

பதவுரை

தவளக்கரி மிசை = வெள்ளை யானை மீது, வருசக்கரன் அருள் தனையை = வரும் இந்திரன் அருளிய மகள் தெய்வ யானைதன், தனக்குவடும் = கொங்கைச் சிகரமும், தகர = சிதைய, தனவு அணி அளகக் குறமயில் = முல்லைமலர் சூடிய கூந்தலை யுடைய குறமகள் வள்ளியின், தடமுலையின் குவடும் = பெருத்த கொங்கையின் சிகரமும், சுவடுற்றிட = தழும்புண்டாக நனி தழுவத் தழுவ = மிகுதியும் கட்டியணைக்க, தோள்வடு அன்றி = அதனாலாய தோளின் தழும்பு அல்லாமல், வழுச் சொல்லுதற்கு இலையென = வேறொன்றும் குற்றம் கூறுதற்கில்லை என்று, ஒளிர் மெய் சிவகுரு = ஒளிவிடும் உடலையுடையச் சிவகுருவே, துன்பு செய்தாரகளாம் அவுணக் கொடியன் = பிற உயிர்க்கு வருத்தம் செய்யும் தாரகளாம் அரக்கக் கொடியவனை, உடலை கிழிய அடர்ந்து உகு செம்புனல் நீர் = உடலைக் கிழிக்கப் பீறிட்டு வரும் குருதி நீரை, அதியுக் கிரமொடு = மிகுந்த சினத்தோடு, பருகி திசை திசை யஞ்ச = குடித்து நாற்றிசையும் அச்சம் கொள்ள, மடங்கல் வருகுவது ஒப்பு என = ஆண் சிங்கம் புறப்பட்டு வருகுவது ஒப்பாம் எனுமாறு, வரும் அயிலைப் பயில்கர = வரும் வேலைச் செலுத்தும் கையனே சப்பாணி கொட்டுக = இரு கைகளையும் கொட்டி விளையாடுக. குமரசிலைவதி = குமரமலைக் கண் வாழும், அமரர்க் கதிபதி = தேவர்கட்குத் தலைவனானவனே, சப்பாணி, கொட்டுக = இரு கைகளையும் கொட்டி விளையாடுக.

பொழிப்பு

வெள்ளை யானை மீது வரும் இந்திரன் அருளிய மகள் தெய்வயானைத் தன் கொங்கைச் சிகரமும் சிதைய, முல்லை மலர் சூடிய கூந்தலையுடைய குறமகள் வள்ளியின் பெருத்த கொங்கையின் சிகரமும் தழும்புண்டாக மிகுதியும் கட்டி யணைக்க அதனாலாய தோளின் தழும்புமல்லாமல் வேறொன்றும் குற்றம் கூறுதற்கில்லை என்று ஒளிவிடும் உடலை யுடையச் சிவகுருவே பிற உயிர்க்கு வருத்தம் செய்யும் தாரகனாம் அரக்கக் கொடியவனை, உடலைக் கிழிக்கப் பீறிட்டு வரும் குருதி

நீரை மிகுந்த சினத்தோடு குடித்து நாற்றிசையும் அச்சம் கொள்ள ஆண்சிங்கம் (ஒன்று) புறப்பட்டு வருகுவது ஒப்பாம் எனுமாறு வரும் வேலைச் செலுத்தும் கையனே இருகைகளையும் கொட்டி விளையாடுக. குமரமலைக்கண் வாழும் தேவர்கட்கு தலைவனானவனே இருகைகளையும் கொட்டி விளையாடுக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

சக்கரன் - இந்திரன். குவடு = சிகரம். சுவடு = தழும்பு சிவகுரு = சிவனுக்கு மெய்ப்பொருள் கூறியவன். தாரகன் = யானை முகச்சூரன். "ஒப்பு என வரும்" என்பதனால் இஃது உவமையணி.

### சப்பாணி 8

பதகத் தொழில்புரி குநரைப் படரெம
　　படர்கைப் படவுதவிப்
பவமுற் றியகொடு நரகுக் கறுதி
　　படுத்துவ தெப்பொருண்முற்
சதுர்வத் திரனரு ளுலகிற் றன்மனை
　　தரைகச் சுறுமனதைத்
தருவித் தொருநெறி தனில்விட் டுறுகனி
　　சருகிலை நீர்பருகி
யுதகத் தெரியெரி நடுவிற் றலைகீ
　　ழொன்றியு நின்றுமிருந்
துயர்மெய்த் தவமுயல் பவர்நிட் டையின்முடி
　　வொன்றெதெ னெஞ்சுருகக்
கதலைக் கிழவிசொன் மகவெ தியாவுநீ
　　கொட்டுக சப்பாணி
குமரச் சிலைவதி யமரர்க் கதிபதி
　　கொட்டுக சப்பாணி

#### பதவுரை

பதகத் தொழில் புரிகுநரை = பாதகத் தொழில் செய்பவர்களை, படர் எம படர்கைப்பட உதவி = தொடரும் கொடுந்துன்பம் உண்டாகிட உதவி, பவமுற்றிய = கொடுமை முதிர்ந்த, கொடு நரகுக்கு அறுதிப்படுத்துவது எப்பொருள் = கொடிய நரகினுக்கு அறுதியிட்டு உறுதிப்படுத்துவது எந்தப் பொருள், முற்சதுர்வத்திரன் அருள் உலகில் = முன் சூழ்ச்சித் திரன் தரும் உலகில், தனம் மனை தரை நச்சுறுமனதை = செல்வம்

பெண், நிலத்தை விரும்பும் மனதை, தருவித்து ஒரு நெறிதனில் விட்டு = ஒருமுகப்படுத்தி ஒருவழிப்படுத்தி, உறுகணி சருகு இலைநீர் பருகி = சிறந்த பழம் உலர்ந்த இலை, பசிய இலை, நீர் ஆகியவற்றை உண்டு, உதகத்து எரிஎரி நடுவில் = நிலம் நீர் தீ நடுவில் தலைகீழ் ஒன்றியும் நின்றும் இருந்தும் = தலைகீழாகப் பொருந்தியும், நின்றும், அமர்ந்தும், உயர்தவம் முயல்பவர் = உயர்ந்த உண்மையான தவம் செய்பவர், நிட்டையின் முடிவு ஒன்று எது என் = இடையறாத நினைவின் பயன் ஒன்றுயாது என்று, நெஞ்சுருக குதலைக் கிழவி சொல் மகவு எது = மனம் உருக குதலை மொழிச்சொல் மகவு எது, யாவும் நீ = அனைத்தும் நீயே, சப்பாணி கொட்டுக - இருகைகளையும் கொட்டி விளையாடுக. குமரச்சிலை வதி அமரர்க்கதிபதி = குமரமலைக் கண் வாழும் தேவர்கட்கும் தலைவனானவனே, சப்பாணி கொட்டுக = இருகைகளையும் கொட்டி விளையாடுக (எ.று.).

## பொழிப்பு

பாதகத் தொழில் செய்பவர்களைத் தொடரும் கொடுந்துன்பம் உண்டாகிட உதவி கொடிய நரகினுக்கு அறுதியிட்டு உறுதிப்படுத்துவது எந்தப் பொருள்! முன் சூழ்ச்சித் திரன் தரும் உலகில் செல்வம் பெண் நிலம் ஆகியன விரும்பும் மனதை ஒருமுகப்படுத்தி ஒரு வழிப்படுத்திச் சிறந்த பழம் உலர்ந்த இலை, பசிய இலை, நீர் ஆகியவற்றை உண்டு, நிலம் நீர் தீ நடுவில் தலைகீழாகப் பொருந்தியும் நின்றும் அமர்ந்தும் உயர்ந்த உண்மையான தவம் செய்பவர் இடையறாத நினைவின் பயன் ஒன்று யாது என்று மனம் உருக குதலை மொழிச் சொல் மகவு எது? அனைத்தும் நீயே இருகைகளையும் கொட்டி விளையாடுக. குமரமலைக்கண் வாழும் தேவர்கட்கும் தலைவனானவனே இருகைகளையும் கொட்டி விளையாடுக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

பதகம் = பாதகம் என்பதன் குறுக்கல் விகாரம் சதுர்வத்திரன் = சூழ்ச்சித்திரன். அனை = அன்னை என்பதன் இடைக்குறை. சொல் மகவு = உருவகம். புரிகுநர், முயல்பவர் என்பன வினையாலணையும் பெயர்கள். மூவாசைகளை, தனம், மனை தரை நச்சுறுமனதை" என்றார்.

### சப்பாணி 9

பங்கய மியாவுமெ முந்தெம தையநின்
பனிமதி முக நோக்கிப்

பகரி னிதற்கீ டிலையா மென்று
பயத்தொடு பங்கமரீஇச்
சங்கையி லாவளி கண்ணீ ராறு
தழீஇயு மதிப்பகையாற்
றலைநா ணுறல்கொண் டிதழ்வாய் மூட
றவா துற வெய்த்த னமா
லங்கணின் முகசா ரூபம் பெறவரு
ளாயென வொருதாணின்
றரிய வனந்தனி லுரிய தவஞ்செய
வாற்றிடு கவினுடையாய்
கொங்கலர் நீப மணிந்தபு யாசல
கொட்டுக சப்பாணி
குமரச் சிலைவதி யமரர்க் கதிபதி
கொட்டுக சப்பாணி

**பதவுரை**

பங்கயம் யாவும் எழுந்து = தாமரை அனைத்தும் ஒன்று சேர்ந்து எழுந்து, எமது ஐயனே = எங்கள் தலைவனே, முருகனே, நின்பனிமதி முகம் நோக்கி = நினது குளிர்ந்த முழுமதிமுகம் பார்த்து, பகரின் இதற்கு ஈடு இலையாம் என்று = சொல்வதாயின் இதற்கு ஒப்புமை இல்லையாம் என்று, பயத்தொடு பங்கம் மரீஇ = நீருடனாய சேற்றை அடைந்து சங்கையிலா வளிக்கண்ணீராறு தழீஇ = அளவின்றி உருஞ்சும் கண்ணீரைச் சிந்தி மதிப்பகையால் தலை நாணுறல் கொண்டு = மதிப்பகையினால் தலை சாய்ந்து கொண்டு, இதழ்வாய் மூடல் தவாது = தனது இதழ்களை மூடிக் கொண்டு, உறவு எய்த்தனமால் = நன்கு வருந்தினோம், அங்கணின் முகசாரூபம் பெற அருளாய் என = அவ்விடத்து இறைவநின் முகச் சாயல் பெறுதலைப் பெறும்படி அருள்வாயாக என்று, ஒரு தாள் நின்று = ஒரு காலின் நின்று, அரிய வனந்தனில் = சிறந்த காட்டினுள், உயரிய தவம் செய = உயர்ந்த தவம்புரிய, ஆற்றிடு கவினுடையாய் = நல்வழிப்படுத்தும் அழகனே கொங்கலர் நீபம் அணிந்த புயாசல = தேன் ஒழுகு கடப்ப மாலை அணிந்த தோள்களையுடையவனே, சப்பாணி கொட்டுக = இரு கைகளையும் கொட்டி விளையாடுக. குமரச் சிலைவதி அமரர்க்கதிபதி = குமர மலைக் கண் வாழும் தேவர்கட்கும் தலைவனே சப்பாணி கொட்டுக = இருகைகளையும் கொட்டி விளையாடுக (எ.று.).

## பொழிப்பு

தாமரை அனைத்தும் ஒன்று சேர்ந்து எழுந்து எங்கள் தலைவனே (முருகனே) நினது குளிர்ந்த முழுமதி முகம் பார்த்து (பின்பு) சொல்வதாயின் இதற்கு ஒப்புமை இல்லையாம் என்று நீரோடு கூடிய சேற்றை வடைந்து, அளவின்றி உருஞ்சும் கண்ணீரைச் சிந்தி மதிப்பகைமையினால் தலை சாய்ந்து கொண்டு தனது இதழ்களை மூடிக் கொண்டு மிகுதியும் (ஒவ்வாத) உறவின் முறைமையால் வருந்தினோம். (எனவே) அவ்விடத்து இறைவநின் முழுச்சால் பெறுதலைப் பெறும்படி அருள்வாயாக என்று சிறந்த காட்டினுள் உயர்ந்த தவம்புரிய நல்வழிப்படுத்தும் அழகனே தேன் ஒழுகு கடப்பமாலை அணிந்த தோள்களை யுடையவனே இருகைகளையும் கொட்டி விளையாடுக. குமர மலைக்கண் வாழும் தேவர்கட்கும் தலைவனே இருகைகளையும் கொட்டி விளையாடுக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

மாீஇ, தழீஇ = என்பன சொல்லிசை அளபெடைகள்.

### சப்பாணி 10

தெண்டிரை நீர்நிலை யோடையி னோக்குநர்
சிந்தை கவர்ந்தெழிலிற்
றிகழெகி னம்புய முற்றந் நீரொடு
தெரியுந் தன்சாயற்
கண்டொரு பேடிது வென்று திளைப்பக்
காமுறு மாடுவாரால்
காவி நறும்பா சடையிற் றங்கிய
காமரு குருகு டனத்
தண்டினை வாய்கொண் டீர்ப்பத் தவறித்
தண்புனன் மூழ்குபெழீஇத்
தழைசிறை யுதறியுள வெள்குறும் வளமலி
தருசோ ணாடணிசீர்
கொண்டு தினந்திகழ் புல்லைப் புரியாய்
கொட்டுக சப்பாணி
குமரச் சிலைவதி யமரர்க் கதிபதி
கொட்டுக சப்பாணி

### பதவுரை

தெண்திசை நீர்நிலை ஓடையின் நோக்குநர் = தெளிந்த நீரலைகளையுடைய நீர்நிலையாம் ஓடையினிடத்து உற்று நோக்குபவர், சிந்தை கவர்ந்து எழிலில் திகழ் எகின் = மனம் கவர்ந்து அழகோடு விளங்கும் அன்னம், அம்புயம் உற்று = அழகிய தாமரை மீது பொருந்தி, அந்நீரோடு தெரியும் = அந்த நீரோடு தெரியும், தன் சாயல் கண்டு = தன் நிழல் அழகினைக் கண்டு, ஒரு பேடிது என்று திளைப்பகாமுறும் = ஒரு பெண் அன்னம் என்று நினைந்து நீரில் மூழ்க, காமுறும் மாடுவரால் = பக்கத்தில் இருந்த வரால் மீன் காவி நறும் பாசடையில் தங்கிய = கருங்குவளையின் மணமிக்க பசிய இலையில் தங்கிய, காமுரு குருகுடன் = விரும்பத்தக்க இளம்புட்களுடன், அத்தண்டினை வாய் கொண்டு ஈர்ப்ப = அந்தத் தண்டினைத் தன் வாய் கொண்டு இழுக்க, தவறித் தண்புனல் மூழ்குபு எழீஇ = தவறித் தண்புனல் படிந்து எழுந்து, தழை சிறை உதறி = நீர் தளும்பித் தழைத்த சிறகுகளை உதறி நீர் போக்கி, உள் வெண்குறும் = தன்னுள் கூச்சப்படும், வளமலிதரு = வளப்பம் மலிந்த, சோணாடு அணிசீர் கொண்டு = சோழநாடு தன் அழகின் சிறப்பினைப் பெற்று, தினந்திகழ் புல்லைப் புரியாய் = நாளும் திகழும் திருபுல்லைப்புரி எழுந்தருளியவனே, சப்பாணி கொட்டுக = இருகைகளையும் கொட்டி விளையாடுக. குமரச் சிலை வதி அமரர்க்கதிபதி = குமரமலை வாழும் தேவர்கட்கும் தலைவனே, சப்பாணி கொட்டுக = இருகைகளையும் கொட்டி விளையாடுக (எ.று.).

### பொழிப்பு

தெளிந்த நீரலைகளையுடைய நீர்நிலையாம் ஓடையினிடத்து உற்று நோக்குபவர் சிந்தை கவர்ந்து அழகுடன் விளங்கும் அன்னம் அழகிய தாமரை மீது பொருந்தி அந்த நீரோடு தெரியும் தன் நிழல் அழகினைக் கண்டு ஒரு பெண் அன்னம் என்று நினைந்து நீரில் முழுகக் காமுறும் பக்கத்தில் இருந்த வரால்மீன் கருங்குவளையின் மனமிக்க பசிய இலையில் தங்கிய விரும்பத்தக்க இளம்புட்களுடன், அந்தத் தண்டினை தன் வாய் கொண்டு இழுக்கத் தவறித் தண்புனல் படிந்து எழுந்து நீர்தளும்பித் தழைத்த சிறகுகளை உதறி நீர் போக்கித் தன்னுள் கூச்சப்படும் வளப்பம் மலிந்த சோழநாடு தன் அழகின் சிறப்பினைப் பெற்று நாளும் திகழும் திருப்புல்லைப் புரி எழுந்தருளியவனே இருகைகளையும் கொட்டி விளையாடுக. குமரமலை வாழும் தேவர்கட்கும் தலைவனே இருகைகளையும் கொட்டி விளையாடுக. (எ.று.).

**அருஞ்சொற்பொருள்**

தெண்திரை = பண்புத் தொகை, எகின் அம்புயம் உற்று அந்நீரோடு தெரியும் தன் சாயல் கண்டு ஒரு பேடு இது என்று திளைப்ப என்பது மயக்க அணி.

*சப்பாணிப்பருவ முற்றிற்று*

## முத்தப் பருவம்

முத்தப் பருவமாவது பிள்ளையினது வாய் முத்தத்தினை விரும்பிக் கூறும் நிலை என முன்னரே உரைக்கப்பட்டது. ஐந்தாம் பருவமாகிய முத்தப் பருவம் பதினோராந்திங்கள் தொடங்கி நிகழ்வதாகக் கூறுவர்.

### முத்தம் 1

பத்தித்திரு மணிமாளிகை
பகலைப் பகல் செய்யும்
பணிவெங்கயி றிட்டண் டர்கள்
பயவாரி மதிக்கும்
மத்திற்பொரு செய்குன் றொடு
மதிமாமணி வாயின்
வழியேசெல வளர்கோ புரம்
வடமேருவை நேர
வெத்திக்கும்வில் வீசிப் பட
ரிரவுக்கிற வெய்த
விமையோர்தப தியுநா ணுற
வெழிலைத்தரு புல்லை
முத்தர்க்கருண் முத்திக் கிறை
முத்தந்தனை யருளே
முருகாதிரு மருகா வொரு
முத்தந்தனை யருளே

**பதவுரை**

பத்தித்திரு மணிமாளிகை பகலைப் பகல் செய்யும் = அலங்காரவேலைப் பாட்டு அழகுடைய மணிகளால் ஆகிய திருக்கோயில் பகற்பொழுதையும் விளக்கமுறச் செய்யும், பணி வெங்கயிறிட்டு அண்டர்கள் = ஆதிசேடனெனும் நச்சுக் கயிறினை

இட்டுத் தேவர்கள், பயவாரி மதிக்கும் = திருப்பாற்கடலைக் கடையும், மத்திற் பொரு மாமேருமலைக்கு ஒத்த, செய்குன்றொடு = செயற்கை மலையோடு, மதி மாமணி வாயில் வழியே செல = முழுமதியானது சிறந்தமணிகளால் இழைக்கப்பட்ட வாயில் வழியே நுழைந்து செல்ல, வளக்கோபுரம் = வளர்ந்த கோபுரம், வடமேருவை நேர = வடக்கிலுள்ள மேருமலையை ஒப்பவும் எத்திக்கும் வில்வீசி = எப்புறமும் எழில் வீசிடவும் படர் இரவுக்கு இறவு எய்த = விரைந்து பரவுகின்ற இருளுக்கு அழிவு உண்டாகவும், இமையோர் தபதியும் நாணுற = இமையோர் தச்சன் மயனும் நாணம் அடையவும் எழிலைத் தரு புல்லை = அழகைச் செய்யும் திருப்புல்லைக்கண், முத்தர்க்கு அருள் முத்திக்கு இறை = சீவன் முத்தர்க்குந்திருவருள் புரியும் வீடுபேற்றின் இறைவனே, முத்தந்தனை அருளே = முத்தமிட்டு அருள்புரிய வேண்டும். முருகா திருமருகா ஒரு முத்தந்தனை அருளே = முருகனே, திருமகளின் மருமகனே, ஒரு முத்தமிட்டு அருள்புரிய வேண்டும் (எ.று.).

## பொழிப்பு

அலங்கார வேலைப்பாட்டு அழகுடைய மணிகளால் ஆகிய திருக்கோயில் பகற்பொழுதையும் விளக்கமுறச் செய்ய அழகைச் செய்யும் ஆதிசேடனெனும் நச்சுக் கயிறினை இட்டுத் தேவர்கள் திருப்பாற்கடலைக் கடையும் மாமேரு மலைக்கு ஒத்த செயற்கை மலையோடு முழுமதியானது சிறந்த மணிகளால் இழைக்கப்பட்ட வாயில் வழியே நுழைந்து செல்ல வளர்ந்த கோபுரம், வடக்கிலுள்ள மேருமலையை ஒப்பவும் எப்புறமும் எழில் வீசிடவும் விரைந்து பரவுகின்ற இருளுக்கு அழிவு உண்டாக்கவும் இமையோர் தச்சன் மயனும் நாணம் அடையவும் அழகைச் செய்யும் திருப்புல்லைக் கண் சீவன் முத்தர்க்குத் திருவருள் புரியும் வீடுபேற்றின் இறைவனே முத்தமிட்டு அருள் புரிய வேண்டும். முருகனே திருமகளின் மருமகனே ஒரு முத்தமிட்டு அருள்புரிய வேண்டும்.

## அருஞ்சொற்பொருள்

செய்குன்றொரு மதி மாமணிவாயில் வழியே செல" என்பது உயர்வு நவிற்சியாகும். இமையோர் தபதி நானுற என்பதும் உயர்வு நவிற்சியே ஆகும். திருமருகா என்பதற்குச் சிறந்த வழித் தோன்றலே என்றும் உரைக்கலாம்.

## முத்தம் 2

வேலைச்சுடர் வாளைப் பழி
விடவார்விழி மடவார்
மேருத்தன பாரத் துணை
விம்மப்பிரி கணவர்
மாலைப்புய மாவெற் பொடு
மருவற்குறு மூடன்
மதியைத்தடை புரியக் கழி
மணிசேரணி மறுகின்
பாலுற்றொளி ரத்தீ பிகை
பலவைத்தன புல்லைப்
பதிவாழரு ணிதியே யுமை
பதிகாதினில் வேத
மூலப்பொரு ளுரைவாய் மணி
முத்தந்தனை யருளே
முருகாதிரு மருகா வொரு
முத்தந்தனை யருளே.

**பதவுரை**

வேலைச் சுடர் வாளைப் பழி விட ஆர்விழி மடவார் = வேற்படையையும் ஒளிர் வாட்படையையும் ஆகிய இரண்டையும் பழிக்கும் கூரிய நச்சு நிறைவிழி கொண்ட பெண்டிர் தம் மேருத் தன பாரத்துணை விம்மப் பிரி கணவர் = மேருமலையென வளர்ந்த கனத்த முலை இரண்டும் ஏங்குமாறு பிரியும் கணவரை, மாலைப்புயமாவெற்பொடு = மாலைகள் அணிந்த தோள்களாம் பெருமலைகளோடு, மருவற்குறுமூடல் = தழுவுதற்குக் காரணமான ஊடற்கு மதியைத் தடைபுரிய = ஆகும் அறிவைத் தடை செய்ய, கழிமணி சேர் = மிகுந்த மணிகள் சேர்ந்த, அணி மருங்கின் = அழகிய தெருக்களினிடத்து, பாலுற்று ஒளிரத் தீபிகை = பாலென ஒளிரப் பல விளக்குகள் வைத்துள்ள புல்லைப் பதிவாழ் அருள் நிதியே = திருப்புல்லைப் பதியில் வாழும் அருள் செல்வோமே உமைபதி வகதினில் = சிவபெருமானின் திருசெவியில், வேத மூலப் பொருள் = மாமறைகளின் மூலப் பொருளை, உரைவாய் = உரைத்த வாயினால், மணிமுத்தந்தனை அருளே = சிறந்த முத்தமிட்டு அருள் புரிய வேண்டும். முருகா திருமுருகா! ஒரு முத்தந்தனையருளே = முருகனே திருமகளின் மருமகனே ஒரு மித்தமிட்டு அருள்புரிய வேண்டும் (எ.று.).

## பொழிப்பு

வேற்படையும் ஒளிர் விட்படையும் ஆகிய இரண்டையும் பழிக்கும் கூரிய நச்சுநிறைவிழி கொண்ட பெண்டிர் தம் மேருமலையென வளர்ந்த கனத்த முலை இரண்டும் ஏங்குமாறு பிரியும் கணவரை, மாலைகள் அணிந்த தோள்காம் பெருமலைகளோடு தழுவுதற்குக் காரணமான ஊடற்கு ஆகும் அறிவைத் தடை செய்ய மிகுந்த மணிகள் சேர்ந்த அழகிய தெருகளினிடத்துப் பாலென ஒளிரப் பல விளக்குகள் வைத்துள்ள திருப் புல்லைப் பதியில் வாழும் அருட்செல்வமே, சிவபெருமானின் திருச்செவியில் மாமறைகளின் மூலப் பொருளை உரைத்த வாயினால் சிறந்த முத்தமிட்டு அருள்புரிய வேண்டும். முருகனே திருமகளின் மருமகனே ஒருமித்தமிட்டு அருள் புரிய வேண்டும் (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

ஊடல் மதியைத் தடைபுரிய....... தீபிகை பலவைத்தன" என்பது உயர்வு நவிற்சி.

### முத்தம் 3

பாவாணரின் மலர்வண் டிசை
 பாடுங்குயில் கூடும்
பலவின்கனி சாடுங் கவி
 பசுமாமயி லாடுங்
காவார்தரு வளனும் பணை
 களினேர்தரும் வாளனுங்
சுனநீர்தரும் வளனும் பல
 கவினுஞ் சோணாடா
கோவார்தரு குமரா சல
 குமராசல முறும்வை
குந்தாவை குந்தா திபர்
 குலிசன்புகழ் தேவே
மூவாமுழு முதலே யொரு
 முத்தந்தனை யருளே
முருகாதிரு மருகா வொரு
 முத்தந்தனை யருளே.

### பதவுரை

பாவாணரின் மலர் வண்டிசை பாடும் = பாவலர்களைப் போன்று மலர் வண்டினம் இசைபாடும். குயில் கூடும் = குயிலிசைக் குரல் சேரும். பல இன்கனிசாடும் = பல இனிய கனிகள் சுவையென விளங்கும், கவி = இனிய பசு மாமயிலாடும் காவார் தரு வளனும் = இளைய மாமயில்கள் ஆடும்படியான இளமரக்காக்கள் நிறைந்த வளனும், பனைகளின் நேர்தரும் வாளனும் = வயற் பண்ணைகளின் நிரம்பிய உழுபடைகளும், கனநீர் தரும் வளனும் = நிறைந்த நீர் தரும் வளப்பமும், பல கவினும் சோணாடா = பல அழகுகள் நிறைந்த சோழ நாடனே, கோவார்தரு குமராசல = ஆநிரைகள் நிறைதரு குமரமலையவனே, குமராசமுலும் வைகுந்தா = குமரமலையில் எழுந்தருளிய கூரிய எரிகோலவனே, வைகுந்தாதிபர் = வைகுந்தத்து அதிபன் திருமாலும், குலிசனும் = இந்திரனும், புகழ் தேவே = புகழ்கின்ற தேவனே, மூவா முழுமுதலே = அழியாத முழுமுதல் இறைவனே, ஒரு முத்தந்தனை யருளே = ஒரு முத்தமிட்டு அருள்புரிய வேண்டும். முருகா திருமுருகா ஒரு முத்தந்தனை யருளே = முருகனே, சிறந்த வழித்தோன்றலே ஒரு முத்தமிட்டு அருள்புரிய வேண்டும் (எ.று.).

### பொழிப்பு

பாவலர்களைப் போன்று மலர் வண்டினம் இசைபாடும், குயிலிசைக் குரல் சேரும். பல இனிய கனிகள் சுவையென விளங்கும் இனிய இளைய மாமயில்கள் ஆடும்படியான இளமரக்காக்கள் நிறைந்த வளனும், வயற்பண்ணைகளின் நிரம்பிய உழுபடைகளும், நிறைந்த நீர்தரும் வளப்பமும் பல அழகுகள் நிறைந்த சோழ நாடனே ஆநிரைகள் நிறைதரு குமரமலையவனே குமரமலையில் எழுந்தருளிய உரிய எரிகோலவனே வைகுந்தந்து அதிபன் திருமாலும் இந்திரனும் புகழ்கின்ற தேவனே அழியாத முழுமுதல் இறைவனே ஒரு முத்தமிட்டு அருள்புரிய வேண்டும். முருகனே சிறந்த வழித் தோன்றலே ஒரு முத்தமிட்டு அருள் புரிய வேண்டும்.

### அருஞ்சொற்பொருள்

வைசகுந்தா = கூரிய எரிகோல் எறிபவன்.

## முத்தம் 4

ஆசைக்கரி யோடத் தனி
யாசைக்கிரி யாட
வமராவதி யுலகோ டுபொ
னமராவதி கூட
நாசத்தினை யுறுமென் னவு
நாசத்தை யிழந்து
நமனாருயிர் தடுமா றமு
னமநாரத னயரும்
மாசைத்தவிர் வேள்விக் கிடை
வருவாயுவி னுலவும்
வருடைப்பரி யிவர்புல் லையின்
வாழ்வேயளி மேவி
மூசக்கமழ் நீபப் புய
முத்தந்தனை யருளே
முருகாதிரு மருகா வொரு
முத்தந்தனை யருளே

### பதவுரை

ஆசைக்கரியோட = திசையானைகள் ஓடவும், தனியாசைக்கிரி யாட = ஒப்பற்ற பொன்மலை ஆடவும், அமராவதியுல கொடு = பொன்னுலகொடு, பொன்னமராவதி கூட = பொன்னமராவதி நகரமும் நாசத்தினையுறுமென்னவும் - அழியும் என்று கூறவும், நாசத்தை இழந்து = அழிவைத் தவிர்த்து, நமனார் உயிர் தடுமாற = அதற்கு மாறாய் நமனின் உயிர் தடுமாற்றம் அடையவும் முன் நம நாரதன் அயரும் = முன்பு வணக்கத்திற்குரிய நாரதனும் மயங்கவும், மாசைத் தவிர் = குற்றம் குறை தவிர்க்கும், வேள்விக் கிடை வருவாயுவின் உலவும் = வேள்வியின் இடையில் வரும் வாய்வு என உலவும், வருடைப் பரி இவர் புல்லையின் வாழ்வே ஆட்டின் வேகத்தினை ஒத்து அன்பர்களைக் காக்க வரும் திருப்புல்லைப் புரி வாழ்வே, அளிமேவி மூசக்கமழ் நீபப்புய = வண்டுகள் தங்கி முரளக் கமழ் கடப்பமாலை அணிந்த தோளனே, முத்தந்தனை அருளே = திருவாய் முத்தமிட்டு அருள்க. முருகா திருமுருகா ஒரு முத்தந்தனை அருளே = முருகனே, திருமகள் மருமகனே ஒரு முத்தமிட்டு அருள்புரிவாயாக (எ.று.).

## பொழிப்பு

திசையானைகள் ஓடவும், ஒப்பற்ற பொன்மலை ஆடவும், பொன்னுலகொடு பொன்னமராவதி நகரமும் அழியும் என்று கூறவும், அழிவைத் தவிர்த்து அதற்கு மாறாய் நமனின் உயிர் தடுமாற்ற மடையவும், முன்பு வணக்கத்திற்குரிய நாரதனும் மயங்கவும் குற்றம் குறை தவிர்க்கும் வேள்விக்கிடையில் வரு வாயு' என உலவும் ஆட்டின் வேகத்தினை ஒத்து அன்பர்களைக் காக்க. திருப்புல்லைப்புரி வாழ்வே வண்டுகள் தங்கி முரளக் கமழ் கடப்பமாலையணிந்த தோளனே திருவாய் முத்தமிட்டு அருள்க; முருகனே திருமகள் மருகனே ஒரு மித்தமிட்டு அருள் புரிவாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

ஆசைக்கரி = திசையானைகள். ஆசைக்கிரி = பொன்மலை. வருடைபரி = வருடை மான், மலையாடு. நீபம் = கடம்பு. பரி = வேகம், இவர் = ஒத்த, ஈண்டு ஆடு என்றது அசமுக சூரனை என்க.

### முத்தம் 5

நந்தாவள முந்தா பதர்
நண்ணுந்தா வளமும்
நளிர்சந்தருண் மணநா றுநல்
வளமுந்தரு பொதிகை
மந்தானிலம் வந்தா நில
மருவிக்கடை சியர்கூழ்
மாறென்களை களையக் களை
மாற்றுஞ்சோ ணாடா
செந்தாமரை யடிமீ தணி
செந்தா மரை வாயிற்
றிகழ்நூபுர மொடுதண் டை
சிலம்பத்தனி வந்து
முந்தார்மறை முதலே யொரு
முத்தந்தனை யருளே
முருகாதிரு மருகா வொரு
முத்தந்தனை யருளே.

### பதவுரை

நந்தா வளமும் அழியாத வாழ்வின் வளமும் தாபதர் நண்ணுந்தா வளமும் முனிவர்தம் அன்பு குன்றாத வளமும் நளிர் சந்தருண் மணநாறுநல் வளமும் = குளிர்ந்த சந்தனத்தின் மணம் வீசும் நல்வளமும், தரு பொதிகை மந்தாநிலம் வந்து = தருகின்ற பொதிகையின் தென்றல் வந்து, ஆநிலம் மருவி = ஆநிரை பெருகி, கடைசியர் கூழ்மாறு (என்)களை களைய = உழவப் பெண்டிர் பயிரின் மாறுபட்ட களையைக் களைய, களை மாற்றும் சோணடா = உயிர்களின் களைப்பைப் போக்கும் சோழ நாடனே, செந்தாமரை யடிமீது = நின் செந்தாமரைத் திருதாள்களின் மீது இருந்து, அணி செந்தாமரை வாயில் = அழகு செய்யும் வளவியதவளை வாயளையதாய், திகழ் நூபுரமொடு = விளங்கும் சிலம்போடு, தண்டை சிலம்ப = தண்டையணியும் ஒலிக்க, தனி வந்து = சிறப்புற வந்து, முந்தார் மறை முதலே = பழ மறைகளின் முதலே, ஒரு முத்தந்தனை அருளே = ஒரு முத்தமிட்டு அருள்புரிய வேண்டும். முருகா திருமருகா வொரு முத்தந்தனை யருளே = முருகனே, திருமகள் மருமகனே ஒரு முத்தமிட்டு அருள்புரிய வேண்டும் (எ.று.).

### பொழிப்பு

அழியாத வாழ்வின் வளமும் அன்பு குன்றாத வளமும் குளிர்ந்த சந்தனத்தின் மணம் வீசும் நல்வளமும் தருகின்ற பொதிகையின் தென்றல் வந்து, ஆநிரை பெருகி உழவப் பெண்டிர் பயிரின் மாறுபட்ட களையைக் களைய உயிர்களின் களைப்பைப் போக்கும் சோழநாடனே நின் செந்தாமரைத் திருத்தாள்களின் மீது இருந்து அழகுசெய்யும் வளவிய தவளை வாயனையதாய் விளங்கும் சிலம்பொடு தண்டையணியும் ஒலிக்கச் சிறப்புற வந்து, பழமறைகளின் முதலே ஒருமுத்தமிட்டு அருள்புரிய வேண்டும் முருகனே! திருமகள் மருகனே ஒரு முத்தமிட்டு மகிழ்விப்பாயாக. (எ.று.).

### அருஞ்சொற்பொருள்

மாறென் = என்பதிலுள்ள 'என்' அசைச்சொல்.

### முத்தம் 6

கார்கொண்ட முகிலைப் பிழிந்துண் டுமிழ்ந்தெனக்
கட்டுடைந் தூற்று நீத்தக்

கரடகக் களிற்றுரிக் கஞ்சுகக் கிஞ்சுகக்
கனிவாய்க் கனிக்கி டந்தந்
தேர்கொண்ட செம்பவள மேனியணி வெண்ணீற்
றிரும்பொடித் தொகையி னோடங்
கெய்துசெஞ் சீறடிப் பொடியுங் கலந்துற
விவர்ந்துவிளை யாட னோக்கி
வார்கொண்ட தூத்திப் பணப்பணி யுடன்கலா
மதிவீற் றிருந்த முடிமேல்
வளருமப கீரதி பரிந்தெடுத் திலகமடி
வைத்தணிகள் பலதிருத் திச்
சீர்கொண்ட மகவுரைமை காட்டிமுத் தாடுபவ
திருவாயின் முத்த மருளே
சிகரவட வரைதணிய வளர்குமர மலையதிப
திருவாயின் முத்த மருளே.

பதவுரை

கார்கொண்ட முகிலைப் பிழிந்து உண்டு உமிழ்ந்தென = கருமை கொண்ட மேகத்தைப் பிழிந்து உட்கொண்டு துப்பினாற் போல, கட்டுடைத் தூற்று நீத்தக் கரடக் களிற்று உரி கஞ்சுக = கட்டுமீறி ஊற்றும் வெள்ளம் அனைய மதம் பாயும் யானையின் தோலைப் போர்வையாகக் கொண்டவனே, கிஞ்சுகக் கனிவாய்க் கனிகிடந்து அம்தேர்கொண்ட செம்பவளமேனி = கிளியின் சிவந்த கனிவாயுடன் ஒரு பழம் இருந்தாற் போன்று அழகிய தேர் நிறைந்து ஒளிரும் செம்பவளநிற உடலில், அணி வெண்ணீற்று இரும்பொடித் தொகையினோடு - அழகிய திருநீற்றின் சிறந்த பொடியின் நிறைவினொடு, அங்கு எய்தும் செஞ்சீரடிப் பொடியும் கலந்துற அங்கு வரும் செஞ்சந்தனர் திருவடிகளின் பொடியும், கலந்திட, இவர்ந்து விளையாடல் நோக்கி = நகர்ந்து விளையாடுதலைப் பார்த்து, வாக்கொண்ட துத்திப் பணப் பணியுடன் = நீண்ட புள்ளிகளோடு கூடிய படத்தையுடைய பாம்புடன், கலாமதி வீற்றிருந்த முடிமேல் = கலைமதி தங்கியிருந்த திருமுடி மீது, வளரும் பகீரதி பரிந்து எடுத்து இல் அகம் மடிவைத்து அணிகள் பல திருத்தி = பெருக்கெடுக்கும் கங்கை அன்னைத் தன்னிடத்து மடியின் மீது வைத்து ஆபரணங்கள் பலவும் திருத்தமுற அணிவித்து, சீர்கொண்ட மகவுரிமை காட்டி முத்தாடுபவர் = சீர்சிறப்பு மிகக் கொண்ட மகவின் உரிமை பாராட்டி முத்தம் வழங்குதற்குரியவனே திருவாயின் முத்தமருளே = நின் திருவாயின்

முத்தமிட்டு = அருள் புரிவாயாக சிகர வடவரை தணிய வளர்குமரமலை அதிப = குன்றுகள் நிறைந்த இமயமும் தாழும்படி வளரும் குமரமலைத் தலைவனே, திருவாயின் முத்த மருளே = நின் திருவாயின் முத்தமிட்டு அருள் புரிவாயாக. (எ.று.).

## பொழிப்பு

கருமை கொண்ட மேகத்தைப் பிழிந்து உட்கொண்டு துப்பினாற் போலக் கட்டுமீறி ஊற்றும் வெள்ளம் அனைய மதம் பாயும் யானையின் தோலைப் போர்வையாகக் கொண்டவனே, கிளியின் சிவந்த கனிவாயுடன் ஒரு பழம் கிடந்தாற் போன்று அழகிய் தேர் நிறைந்து ஒளிரும் செம்பவளநிற உடலில் அழகிய திரு நீற்றின் சிறந்த பொடியின் நிறைவினொடு அங்கு செஞ்சந்தன திருவடிகளின், பொடியும் கலந்திட விளையாடுதலைப் பார்த்து நீண்ட புள்ளிகளோடு கூடிய படத்தையுடைய பாம்புடன் கலைமதி தங்கியிருந்த திருமுடி மீது பெருக்கெடுக்கும் கங்கை அன்னைத் தன்னிடத்து மடியின் மீது வைத்து ஆபரணங்கள் பலவும் திருத்தமுற அணிவித்துச் சீர்சிறப்பு மிகக் கொண்ட மகவின் உரிமை பாராட்டி முத்தம் வழங்குதற்குரியவனே, நின் திருவாயின் முத்தமிட்டு அருள்புரிவாயாக. குன்றுகள் நிறைந்த இமயமும் தாழும்படி வளரும் குமரமலைத் தலைவனே நின் திருவாயின் முத்தமிட்டு அருள்புரிவாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

கஞ்சுகம் = மேலாடை, போர்வை.

### முத்தம் 7

அந்தரத் தமரரொரு புடைநிற்ப வொருபுறத்
தவுணர்நின் றரவை நாணா
யார்த்துத் தரங்கஞ் சுருட்டும் பயோததி
யலம்பப் புலம்ப மேனாண்
மந்தரமெ னுங்கிரி நிறீஇமதிக் கத்தோன்றும்
வானமுதொ டஃறி ணைப்பேர்
மருஉங்கோ கிலந்தத்தை யோசெய்ய கற்றாவின்
மடிகொன்று கவர முமோ
பைந்தொடிக் குறமான் மொழிக்குவமை யாமெனப்
பகருமென் கிழவியந் தேன்
பன்னிரு செவித்துளை நிரப்பியுட் போந்துளம்
பரலவன் பேயுரு வமாய்ச்

சிந்தையொத் தவண்மணிக் கவுளின்முத் திட்டவா
திருவாயின் முத்த மருளே
சிகரவட வரைதணிய வளர்குமர மலையதிப
திருவாயின் முத்த மருளே.

பதவுரை

அந்தரத் தமரர் ஒருபுடை நிற்ப = கால்நிலம் தோயத் தேவர்கள் ஒருபுறம் நிற்கவும், ஒருபுறத்து அவுணர் நின்று = ஒரு பக்கத்து அரக்கர்கள் நின்று, அரவை நாணாய் = அதிசேடனைக் கயிறாக ஆர்த்து = கட்டி, தரங்கம் சுருட்டும் பயோத்தி = அலைகளையுடைய பாற்கடல், அலம்பப் புலம்ப மேனாள் = ஆரவாரித்துப் புலம்ப முன்பொரு நாள், மந்தரமெனும் கிரி நிறீஇ = மந்தரம் எனும் மலையை நிறுத்தி, மதிக்கத் தோன்றும் = மத்திக்கத் தோன்றும், வானமுதொடு = விண்ணின் அமுதத்தோடு, அஃறிணைப் பேர் மரூஉ = அஃறிணைப் பேர் கொண்ட, கோகிலம் தத்தையோ = குயிலோ கிளியோ, செய்ய கற்றாவின் மடி கொன்று கவர் அமுதமோ = செவலைப் பசுவின் மடியினை வருத்திக் கைகொண்ட பாலோ, பைந்தொடிக் குறமகள் = பசிய வளையல்களை அணிந்த குறமகள் வள்ளியின், மொழிக்கு உவமையாமென = மொழிக்கு உவமை ஆகுமென்று, பகரும் மென்கிழவியந்தேன் = பேசும் மென்மைக் கிளவியாகிய நறுந்தேறல், பன்னிரு செவித்துளை நிரப்பி = பன்னிரு காதுகளிலும் நிரம்பி, உள்போந்து உளம்பரவ = உட்புகுந்து உள்ளம் பரவ, அன்பே உருவமாய் = அன்பே வடிவமாய், சிந்தையொத்து = மனமொத்து, அவள் மணிகவுளின் = குறமகள் வள்ளியின் மணிநிறக் கன்னத்தில், முத்தமிட்டவா = முத்தம் கொடுத்தவனே, திருவாயின் முத்தமருளே = நின் திருவாயினால் முத்தமிட்டு அருள்வாயாக. சிகர வடவரை தணிய வளர் குமரமலையதிப = குன்றுகள் நிறைந்த இமயமும் தாழும்படியாக வளரும் குமரமலைத் தலைவனே, திருவாயின் முத்தமருளே = நின் திருவாயினால் முத்தமிட்டு அருள்வாயாக (எ.று.).

பொழிப்பு

கால் நிலம் தோயாத தேவர்கள் ஒருபுறம் நிற்கவும், ஒரு பக்கத்து அரக்கர்கள் நின்று ஆதிசேடனைக் கயிறாகக் கட்டி அலைகளையுடைய பாற்கடல் ஆரவாரித்துப் புலம்ப முன்பொரு நாள் மந்தரம் எனும் மலையை நிறுத்தி மத்திக்கத் தோன்றும் விண்ணின் அமுதத்தோடு, அஃறிணைப் பேர் கொண்ட குயிலோ

கிளியோ செவலைப் பசுவின் மடியினை வருத்திக் கைக்கொண்ட பாலோ பசியை வளையல்களை அணிந்த குறமகள் வள்ளியின் மொழிக்கு உவமையாகுமென்று பேசும் மென்மைக் கிளவியாகிய நறுந்தேறல் பன்னிரு காதுகளிலும் நிரம்பி உட்புகுந்து உள்ளம் பரவ அன்பே வடிவமாய் மனமொத்து அவள் மணிநிறக் கன்னத்தில் முத்தம் கொடுத்தவனே நின் திருவாயினால் முத்தமிட்டு அருள்வாயாக. குன்றுகள் நிறைந்த இமயமும் தாழும் படியாக வளரும் குமரமலைத் தலைவனே நின் திருவாயினால் முத்தமிட்டு அருள்வாயாக (எ.று.).

### அருஞ்சொற்பொருள்

பயோததி = பாற்கடல், மதிக்கும் = மத்திக்கும், கடையும். இடைக்குறை, கவுள் = கன்னம்.

## முத்தம் 8

சங்குறழ் மிடற்றுத் திருத்தங்கு மருமச்
சரோருகக் கண்ண னீன்ற
தாமரைக் கண்ணனை விளித்துநின் பணியாது
சாற்றென்ன நீவி னவலும்
பங்கமற வுலகம் படைத்தலென் றொழிலெனப்
பழமறைக் காதிமனு வின்
படுபொரு ளுணர்த்தெனத் தெரியாமை கண்டுபத
பதுமத்தி னாலு தைத்து
மங்கவனை நாற்றலை குலுங்கக் கரங்குட்டி
யடுதாட் டுணைக்கு நிகள
மார்த்தச் சுறக்கந்த மாதனக் குகைதனி
லருஞ்சிறைப் பட்டு ழலவே
செங்கனியு நாணப் பணித்தசெம் பவள்நேர்
திருவாயின் முத்த மருளே
சிகரவட வரைதணிய வளர்குமர மலையதிப
திருவாயின் முத்த மருளே.

### பதவுரை

சங்குறழ் மிடற்றுத் திருத்தங்கு மருமச் சரோருகக் கண்ணன் ஈன்ற = சங்கொத்த கழுத்தும், திருமகள் தங்கிய மார்பும் கொண்ட தாமரைக் கண்ணன், ஈன்ற தாமரைக் கண்ணனை பெற்ற பிரமனை, விளித்து நின்பணியாது என்ன? = அழைத்து நினது வேலை யாது கூறுவாய் என்று, நீ வினவலும்

= நீ வினாவவும், பங்கமற உலகம் படைத்தல் என் தொழிலென = ஐயுறவின்றி உலகைப் படைத்தல் என்தொழிலென்று கூற, பழமறைக் காதி மனுவின் படுபொருள் உணர்த்தென = பழமறைகளுக்கும் முதன்மையாம் மறுமுறை நூலின் கூறப்படும் பொருள் உணர்த்துவது என்ன? என்று வினவவும் தெரியாமை கண்டு = அவனுக்கு அது தெரியாததைக் கண்டு, பதபதுமத்தினால் உதைத்தும் = பாதத் தாமரையால் உதைத்தும், அங்கு அவனை நாற்றலை குலுங்கக் கரங்குட்டியிடு - அங்கே அவனை நான்கு தலைகளும் குலுங்கும் படியாகத் தன் கையினால் குட்டுவித்து தாள் துணைக்கு = திருவடிகளுக்கு நிகளம் ஆர்த்து = விலங்கு பிணித்து, அச்சுற கந்தமாக் குகைதனில் = அச்சமுறயானைத் தறிகள் மிக்க குகையில், சிறைப்பட்டுழலவே = சிறைப்பட்டு வருந்தவே, செங்கனியும் நாணப் பணித்த செம்பவளம் நேர் = சிவந்த கனியும் நாணுறப் பழுத்த செம்பவளம் ஒத்த, திருவாயின் முத்தமருளே = நின் திருவாயினால் முத்தமிட்டு அருள்க. சிகர வடவரை தணிய வளர்குமரமலையதிப = குன்றுகள் நிறைந்த இமயமும் தாழும்படி வளரும் குமரமலைத் தலைவனே, திருவாயின் முத்த மருளே = நின் திருவாயின் முத்தமிட்டு அருள் புரிவாயாக (எ.று.).

## பொழிப்பு

சங்கொத்த கழுத்தும் திருமகள், தங்கிய மார்பும் கொண்ட தாமரைக் கண்ணன் பெற்ற பிரமனை அழைத்து நினது வேலை யாது கூறுவாய் என்று நீ வினாவவும், ஐயறவின்றி உலகைப் படைத்தல் என் தொழிலென்று கூற, பழமறைகளுக்கும் முதன்மையாம் மனுமுறை நூலின் கூறப்படும் பொருள் உணர்த்துவது என்ன என்று நீ வினவவும் அது அவனுக்குத் தெரியாததைக் கண்டு பாதத்தாமரையினால் உதைத்தும் அங்கே அவனை நான்கு தலைகளும் குலுங்கும்படியாகத் தன் கையினால் குட்டுவித்தும் திருவடிகளுக்கு விலங்கு பிணித்து அச்சமுறயானைக் கட்டுத்தறிகள் மிக்க குகையில் சிறைப்பட்டும் வருந்தவே சிவந்த கனியும் நாணுறப் பழுத்த செம்பவளம் ஒத்த நின் திருவாயினால் முத்தமிட்டு அருள்க. குன்றுகள் நிறைந்த இமயமும் தாழும்படி வளரும் குமரமலைத் தலைவனே நின் திருவாயின் முத்தமிட்டு அருள்புரிவாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

சரோருகம் = தாமரை பதபதுமம் = உருவகம்.

## முத்தம் 9

தன்னின் மிக்கோ ரிலையெனற் கோர்
சான்றாய் மழுவைக் கரந்தூக்குந்
தனியில் கருணைப் பெருந்தகையாஞ்
சசிவேய் மணிவே யீன்றமுத்து
முன்னி னரிய தவநெடுநா
ளோவா துஞற்றுந் தாபதரோ
டுகளக் கமலத் துறைமடவா
ருவக்குங் கொழுநற் கரிவரிதாய்ப்
பொன்னின் குவடுஞ் சிறுவிதியும்
புரிமா தவப்பே றெய்தியிறும்
பூதுண் டாகத் தடநதியிற்
பூந்தா மரையும் பணிலமுமீன்
கன்னி முத்து மீன்றவிளங்
காளாய் முத்தந் தருகவே
கந்தா குமர மலைக்குகந்தாய்
கனிவாய் முத்தந் தருகவே.

### பதவுரை

தன்னின் மிக்கோர் இலையெனற்கு ஒரு சான்றாய் = தன்னை விடப் பெரியோர் இல்லை என்பதற்கு ஒரு எடுத்துக் காட்டாய், மழுவைக் கரந்தூக்கும் = மழுப்படையைக் கையில் ஏந்தும், தனியில் பெருங்கருணை பெருந்தகையாம் = ஒப்பற்ற பெருங்கருணைப் பெருந்தகையாளனாம், சசிவேய் மணிவேய் யீன்ற முத்து = பிறைசூடிய பெம்மாள் அருளிய முத்துக் குமரன், உன்னின் அரிய தவநெடுநாள் = நினைப்பின் அரிய தவத்தை நெடுநாட்கள், ஓவாது ஞற்றுந் தாபதரோடு = குறைவின்றி முயலும் தவவொழுக்க முடையவரோடு, உகள = விரும்பி, கமலத் துறை மடவார் = கமல மலரின் வாழ் பெண்டிர், உவக்கும் கொழுநற்கும் அரிவரிதாய் = மகிழும் கணவன்மார்க்கும் செயற்கரியதாய், பொன்னின் குவடும் சிறுவிதியும் புரிமாதவப் பேறு எய்தி = பொற்குன்றும், சிறிய விதிமுறைகளும் செய்யும் பெருந்தவப்பேறு அடைந்து, இறும்பூதுண்டாக = வியப்புண்டாக, தடநதியில் பூந்தாமரையும் பணிலமும் மீன்கன்னி முத்தும் ஈன்ற இளங்காளாய் = பெருநதியில் பூந்தாமரையும், சங்கும், ஒளிமிக்க கவர்ச்சியான முத்தும் ஈன்ற இளங்காளையே, முத்தந்தருகவே = முத்தம் தந்து அருள்வாயாக. கந்தா குமரமலைக்

குகந்தாய் கனிவாய் முத்தந் தருகவே = கந்தனே, குமரமலைக் கண் விரும்பி வாழ்பவனே நின்று கனிபோன்ற வாயினால் முத்தந்தந்து அருள்வாயாக (எ.று.).

## பொழிப்பு

தன்னைவிடப் பெரியோர் இல்லை என்பதற்கு ஒரு எடுத்துக்காட்டாய் மழுப்படையைக் கையில் ஏந்தும் ஒப்பற்ற பெருங்கருணைப் பெருந்தகையாளனாம் பிறைசூடிய பெம்மான் அருளிய முத்துக் குமரன் நினைப்பின் அரிய தவத்தை நெடுநாட்கள் குறைவின்றி முயலும் தவவொழுக்கமுடையவரோடு விரும்பி, கமலமலரின் வாழ் பெண்டிர் மகிழும் கணவன் மார்க்கும் செயற்கரியதாய் பொற்குன்றும் சிறு விதிமுறைகளும் செய்யும் பெருந்தவப்பேறு அடைந்து வியப்புண்டாகப் பெருநதியில் பூந்தாமரையும் சங்கும் ஒளிமிக்க கவர்ச்சியான கன்னி முத்தும் ஈன்ற இளங்காளையே, முத்தம் தந்து அருள்வாயாக. கந்தனே குமரமலைக்கண் விரும்பி வாழ்பவனே நினது கனிபோன்ற வாயினால் முத்தந்தது அருள்வாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

மழுப்படை = தீப்படை. கனிவாய் = உவமைத் தொகை. இன்பமன்றி துன்பம் செய்யாத நற்சொல் அருளும் வாயாதலின் கனிவாய் எனப்பட்டது. இனிய உளவாக குறள் நினைக்கத் தக்கது. யாரும் நுகராத முத்துக்கன்னி முத்து எனப்பட்டது. கன்னிமுத்து எனவே முதிரமுத்து யாரும் நுகராத முத்து கன்னி முத்து எனப்பட்டது. எனலாது என்பார் மீன் எனும் அடையும் பொருத்தார் என்க.

### முத்தம் 10

கொம்பிற் றேனை நசைகொண்முடக்
குலமா னிடனு மடமையினாற்
கோதாட் டயர்ந்தெட் டாப்பொருளைக்
கோடற் கழுகுஞ் சிறாருமொப்ப
வம்பைப் பெருக்கும் பவஞ்சமெனும்
வாழ்விற் கிடந்து கொடுநிரய
வாழ்க்கைக் காக்கைப் பொறைநிதமும்
வளர்ப்பார் நினைப்புக் கரியநின்றா

ணம்பு மன்பர்க் கருட்செல்வ
நல்கிப் பெறும்பே ரின்பசுக
நாளுந் துய்ப்பக் கடைக்கணித்தா
ணவைதீர் ஞானப் பெருஞ்சுடரே
கம்பக் களிற்றுக் கிளையசிறு
களிறே முத்தந் தருகவே
கந்தா குமர மலைக்குகந்தாய்
கனிவாய் முத்தந் தருகவே

### பதவுரை

கொம்பில் தேனை நசைகொள் முடக்குல மானிடனும் = கொம்புத் தேனை விரும்பிய மக்கள் இனத்து முடவனும், மடமையினால் = அறியாமையினால், கோதாட்டயர்ந்து = குறும்புத்தனமாக விளையாடி, எட்டாப் பொருளுக்கழுஞ் சிறாரும் ஒப்ப = அடைய முடியாத பொருளுக்காக அழுகின்ற சிறுவர்களை ஒப்பவும் வம்பைப் பெருக்கும்பவஞ்சமெனும் வாழ்விற் கிடந்து = வஞ்சனை பெருகச் செய்யும் தீயொழுக்க வாழ்வின் நின்று, கொடுநிரய வாழ்க்கைக்கு ஆக்கைப் பொறை நிதமும் வளர்ப்பார் = கொடிய துன்ப வாழ்க்கைக்கு உடற் பொறையை நாளும் வளர்ப்பவர்களுக்கு, நினைப்பிற்கரிய நின்றாள் நம்பும் அன்பர்க்கு = எண்ணற்கரிய விழுப் பொருளாம், நின்திருவடியை நம்பும் அன்பர்க்கு, அருட் செல்வம் நல்கி = திருவருள் செல்வம் தந்து, பெறும் பேர் இன்ப சுகம் நாளும் துய்ப்ப = பெறற்கு அரும் வீடுபேற்று இன்ப நல்வாழ்வினை நுகர, கடைக்கணித்து ஆள் நவைதீர் ஞானப் பெருஞ்சுடரே = அருள் செய்து ஆட்கொள்ளும் குற்றமற்ற ஞானப் பெருஞ்சுடரே, நம்பக் களிற்றுக்கு இளைய சிறு களிறே = ஏகம்பக் களிறாம் யானை முகனுக்கு இளஞ்சிறு களிறே, முத்தம் தருகவே = முத்தமிட்டு அருள்வாயாக. கந்தா குமரமலைக்குகந்தாய் கனிவாய் முத்தந் தருகவே = கந்தனே நினது கனி போன்ற வாயினால் முத்தமிட்டு அருள்வாயாக (எ.று.).

### பொழிப்பு

கொம்பத் தேனை விரும்பிய மக்களினத்து முடவனும் அறியாமையினால் குற்றம் நீக்கி, அடைய முடியாத பொருளுக் காக அழுகின்ற சிறுவர்களை ஒப்ப வஞ்சனை பெருகச் செய்யும் தீயொழுக்க வாழ்வின் நின்று கொடிய துன்ப வாழ்க்கைக்கு உடற்

பொறையை நாளும் வளர்பவர்களுக்கு எண்ணிற்கரிய விழுப்பொருளாம். நின் திருவடியை நம்பும் அன்பருக்குத் திருவருள் தந்து பெறற்கரும் வீடுபேற்று இன்ப நல்வாழ்வினை நுகர அருள் செய்து ஆட்கொள்ளும் குற்றமற்ற ஞானப் பெருஞ் சுடரே, ஏகம்பக் களிறாம் யானை முகனுக்கு இளஞ்சிறு களிறே முத்தமிட்டு அருள்வாயாக. கந்தனே நினது கனிபோன்ற வாயினால் முத்தமிட்டு அருள்வாயாக (எ.று.).

### அருஞ்சொற்பொருள்

மனிதகுல முடவன் என்பதனை அவன் மடமை கருதியும், மடமையின் மிகுதி கருதியும் முறைமை மாற்றி "முடக்குல மானிடன்" என்றார். ஐம்பெரும் பொருள் கூட்டுறவால் உடல் இயன்றதாயினும் பெரிதும் நிலத்தின் கூறையே பெற்ற உடல், பொறுமைக்குச் சான்றாய நிலம் போலக்கொடு நிரய வாழ்க்கையை பொறுத்தற்குரியது என்பார் அதனை ஆக்கைப் பொறை என்றார்.

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வாரைப் பொறுத்தல் தலை (குறள் 152)

எனும் குறள் நினைவு கூரற்குரியது. உயிரையன்றி வெற்றுடலை வளர்ப்பாரை "ஆக்கைப் பொறை நிதமும் வளர்ப்பார்" என்றார்.

முத்தப் பருவம் முற்றிற்று

## வருகைப் பருவம்

ஆறாம் பருவமாக அமையப்பெற்றது. முத்தம் தந்து மகிழ்ந்த பெற்றோர், அக்குழந்தை மெல்ல எழுந்து தங்களை நாடி வர வேண்டுவதாக அமையும் பருவம். இது குழந்தையின் பதின்மூன்றாம் திங்களில் நிகழ்வது. இப்பருவத்தை வாரானைப் பருவம் என்றும் அழைப்பர்.

### வருகை 1

செங்கதி ரொளிக்கற்றை வெந்நிடக் கமலமென்
சிற்றடித் துணையின் மேய
சிற்றொலிக் கிண்கிணி மணிச்சிலம் பொளிரத்
திருக்கைவிர லாழி மின்ன
வைங்கணைக் கிழவனை யடர்க்குநின் றாதைநுத
லக்கத் துதித்த வுணரா
மடையலரை யடையவென் றிடும்வாகை யம்புயத்
தணிவாகு வலய மிளிரப்

பொங்குமலர் முகமொடு நுதற்சுட் டியுங்கருணை
பொழிவிழிக் கடையு மோங்கப்
பொற்பவள வெற்பினிடை சூழ்மினற் கொடியுறிற்
புரையுமரை ஞாணி லங்கத்
தங்கவரை நூறத் தகர்த்தசெண் டாயுதந்
தாங்குசே வகவ ருகவே
சம்புசங் கரிமதலை யின்புறுங் குமரமலை
தங்குகண் மணிவ ருகவே

**பதவுரை**

செங்கதிர் வெளிக்கற்றை - சூரியனின் ஒளிமயமான வெண்கதிர்கள், வெந்நிடடக் கமலமென் சிற்றடி துளையின் மேய = பின்னிட்ட செந்தாமரைச் சீறடித் துணையின்மீது, சிற்றொலிக் கிண்கிணி மணிச் சிலம் பொளிர = சன்னமான நுண்ணிய சிறு சிறு ஒலியை எழுப்ப வல்ல, மாணிக்கம் பிரல் நிறைந்த சிலம்பு கிடந்து ஒளிர, திருக்கை விரலாழி மின்ன = பெருமை பொருந்திய சிறப்புகளை உடைய அழகிய கை விரல்களில் மோதிரங்கள் ஒளிபரப்ப, ஐங்கணைக் கிழவனை யடர்க்கும் நின் தாதை - ஐந்து வகையான மலரம்புகளை கரும்பு எனும் வில்லில் ஏற்றி பிறருக்குக் காமத்தை எழுப்பும் மன்மதனை கடிந்து தண்டித்த உன் தந்தையாகிய சிவபெருமான், நுதலக்கத் துதித்த அச்சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலே தோன்றிய நீ, அவுணர் வீழ்ந்து பட; அவுணராமடையலரை யடைய வென்றிடும் வாகையும் புயத்து அணி வாகு வலையம் மிளர அசுரரை மாய்த்த வெற்றிதனை ஆபரணமாகக் கொண்டதோடு அவ்வெற்றியின் விம்மிதத்தால் தோள்கிளல் பூரித்து நிற்கும் வாகு வலயம் ஒளி வீசு, பொங்குமலர் முகமொடு நுதற்கட்டாயுங் கருணை மொழி விழிக் கடையு மோங்கப் = திருவளர் தாமரை முகமொடு நெற்றியில் வெற்றிப் பட்டமும் அருள் ஒழுகு கடை விழிப் பார்வையும் சிறந்து விளங்க.

பவழ மலையின் இடையில் மின்னற்கொடி ஒன்று சூழ்ந்து கிடத்தாற் போன்று, அரைஞாண் இலங்க = இடுப்பில் கட்டிய கயிறு விளங்க, தங்க வரை நூற = தங்க மலையும் பொடிபட, தகர்த்த செண்டாயுதம் தாங்கு சேவக வருகவே = நொறுக்கிய செண்டாயுதப் படையைக் கைக்கண் தாங்கிய இமையார் சேவகனே நடைபயின்று வருகவே. சம்புசங்கரி மதலை இன்புறும் = அம்மையப்பன் மகன் மனம் மகிழும், குமரமலை தங்கு கண்மணி வருகவே = திருகுமரமலைக்கண் வீற்றிருந்தருளிய கண்மணியே நடைபயின்று வருவாயாக (எ.று.).

## பொழிப்பு

செங்கதிர் ஒளித் தொகுதி ஒளியும் பின்னிட செந்தாமரைச் சீறடியின் துணையின் மீது சிறுசிறு ஒலியினை எழுப்பும் கிண்கிணிகளின் மாணிக்கப் பரல் நிறைந்த சிலம்பு கிடந்து ஒலி செய்ய திருக்கைகளின் விரல்களில் கணையாழிகள் மின்ன, ஐந்து மலர் அம்புகளை விடுக்கும் மன்மதனைத் தாக்கும் நின் தந்தை சிவனின் நெற்றிக்கண்ணில் தோன்றி அரக்கராம் பகைவரை அடைந்து வெற்றி வாகை கொண்ட திருத்தோள்களில் அணிந்த வாகுவலயம் ஒளிவீச திருவளர் தாமரை முகமொடு நெற்றியில் நெற்றிப்பட்டமும் அருளொழுகு கடைவிழிப் பார்வையும் சிறக்க, பொன் போல் ஒளிரும் பவழ மலையின் இடையில் மின்னற் கொடி ஒன்று சூழ்ந்து கிடந்தாற் போன்று இடுப்பில் கட்டிய கயிறு விளங்க, தங்கமலையும் பொடிபட நொறுக்கிய செண்டாயுதப் படையைக் கைகள் தாங்கிய இமையார் சேவகனே நடைபயின்று வருகவே. அம்மையப்பன் மனம் மகிழும் குமரமலைக் கண் விற்றிருந்தருளிய கண்மணியே நடைபயின்று வருவாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

வெந்நிட = பின்னடைய, தங்க வரை = கிரௌஞ்சமலை.

### வருகை 2

ஓதரிய மறைகளு மரந்தையுற் றுந்துருவ
வொல்லாமை கண்டுமு ணர்வின்
றொப்பனை செயற்கொருவ ராலுமொண் ணாநினக்
கொப்பனையி யற்றல் போலப்
பேதையே முள்ளத் தவாமிக்க தன்மையாற்
பீடுலகி னன்ப ருக்கே
பிள்ளைப் பெருங்கலி துடைத்தரு ளினைச்சிறிதொர்
பிள்ளையுரு வாய மைத்து
நாதனென லாயவுனை நன்னீரி லாட்டியொண்
ணறுநுதற் றிலத மிட்டு
நவமணிப் பணிகளிட் டுன்னழகு காணநனி
நாடிவா வெனவ ழைத்தேஞ்
சாதுசங் கம்பரவி நேயமிகு புல்லைத்
தலேசசண் முகவ ருகவே

சம்புசங் கரிமதலை யின்புறுங் குமரமலை
தங்குகண் மணிவ ருகவே.

### பதவுரை

ஓதரிய மறைகளும் அரந்தையுற்றுந் துருவம் ஒல்லாமை கண்டும் = நின்பெருமைகளை எடுத்தியம்ப முடியாத மறை மொழிகளும் வருந்தி முயன்றும் நின்னின் உவமையாதல் பொருந்தாமை கண்டும், உணர்வின் ஒப்பனை செயற்கு ஒருவராலும் ஒண்ணா நினக்கு = நின் உணர்வினோடு உன்னை உவமை செயற்கு ஒருவராலும் இயலாத நின்தனக்கு பேதையேம் உள்ளத்து அவாமிக்க தன்மையால் = அறிவிலியாகிய எங்கள் உள்ளத்து பேராசை மிக்க தன்மையால், பீடுலகின் ஒப்பனை யியற்றல் போல = பெருமைமிக்க இவ்வுலகின்கண் நாங்கள் உருவ உவமையியற்றல் போல, அன்பருக்கே பிள்ளைப் பெருங்கவி = நினது அன்பர்களுக்கே பிள்ளைப்பேறு இன்மை எனும் பெரிய வறுமையை சிறிதோர் பிள்ளையுருவாய் அமைந்து = சிறியதோர் பிள்ளை யுருவாய்ப் பிறந்து, துடைத்து அருள்நினை = நீக்கி யருள்புரிந்தயுன்னை நாதனெலாய்வுனை = தலைவனாய உன்னை நன்னீராட்டி = நன்னீரில் குளிப்பாட்டி, ஒண்நறுநுதல் திலகமிட்டு = ஒளியும் மணமுமிக்க நெற்றியில் பொட்டிட்டு, நவமணிப் பணிகளிட்டு = ஒன்பது பணிகாளால் ஆன அணி கலன்கள் அணிவித்து நின்னழகு காண = நினது அழகினைப் பார்க்க பேதையேம் உள்ளத்து அவாமிக்க தன்மையால், நளிநாடி = மிகவும் விரும்பி, வாவென அழைத்தேம் = வருக என அழைத்தோம். சாது சங்கம் பரவி = சாதுக்களின் குழுமம் கூடி வணங்கிடும் நேயமிகு புல்லைத்தலைவ = அன்புடையாளர் மிக்க திருப்புல்லை திருநகரின்கண் எழுந்தருளியவனே, சண்முக வருகவே = ஆறுமுகனே வருக வேத சம்பு சங்கவி தலையின்புறும் = அமமையப்பன் மனம் மகிழும், குமரமலை தங்கு கண்மணி வருகவே = திருமலைக்கண் வீற்றிருந்தருளிய கண்மணியே வருகவே.

### பொழிப்பு

நின்பெருமைகளை எடுத்தியம்ப முடியாத மறை மொழிகளும் வருந்தி முயன்றும் நின்னின் உவமையாதல் பொருந்தாமை கண்டும், நின் உணர்வினோடு உன்னை உவமை செயற்கு ஒருவராலும் இயலாத நின்தனக்கு, அறிவிலியாகிய

எங்கள் உள்ளத்துப் பேராசை மிக்க தன்மையால் பெருமைமிக்க இவ்வுலகின் கண் நாங்கள் உருவ உவமையியற்றல் போல நினது அன்பர்களுக்கே பிள்ளைப்பேறு இன்மை எனும் பெரிய வறுமையைச் சிறியதோர் பிள்ளையுருவாய் பிறந்து நீக்கி அருள்புரிந்த உன்னை, தலைவனாய உன்னை நன்னீரில் குளிப்பாட்டி, ஒளியும் மணமும் மிக்க நெற்றியில் பொட்டிட்டு ஒன்பது அணிகளாலான அணிகலன்கள் அணிவித்து நினது அழகினைப் பார்க்க அறிவிலியாகிய எங்கள் உள்ளத்துப் பேராசைமிக்க தன்மையால்) மிகவும் விரும்பி வருக என அழைத்தோம். சாதுக்களின் குழுமம் கூடி வணங்கிடும் அன்புடையாளர் மிக்க திருப்புல்லைத் திருநகரின்கண் எழுந்தருளியவனே ஆறுமுகவனே வருகவே அம்மையப்பன் மனம் மகிழும் திருக்குமர மலைக்கண் வீற்றிருந்தருளிய கண்மணியே வருகவே.

அருஞ்சொற்பொருள்

பேதையேம் உள்ளத்து அவாமிக்க தன்மையால் என்பதனை நனிநாடி வருக என அழைத்தேம் எனவும் கூட்டிப் பொருள் கொள்க. இப்பாடல் கொண்டு கூட்டுப் பொருள் போல் அமைத்தது.

**வருகை 3**

பொன்மணி யினொளிவீசு வடிவேற் படைக்கரம்
பொலியுமணி யெப்பு வனமும்
புகழுமணி பெண்சிகா மணியிருவர் நாப்பண்
பொருந்துசெம் மணிய டியராற்
சொன்மணி மறைக்குமெட்டாதமணி யீராறு
தோளுடைய மணிகொ டுங்கோற்
சூர்தடிந் தமரருக் கருடயா மணிபரம
சுகபோக ஞான மணிநீ
பன்மணி நிகர்க்குங் கருங்கட் சிவந்தவாய்ப்
பதுமா னத்தி னோக்கும்
பச்சையப்ப சுங்கொண்டன் மார்பில ணையுந்திருப்
பாவைநித மேவு புல்லை
தன்மணி தனக்கிணையி லாதசண் முகமணி
சதானந்த மணிவ ருகவே
சம்புசங் கரிமதலை யின்புறுங் குமரமலை
தங்குகண் மணிவ ருகவே.

**பதவுரை**

பொன்மணியின் ஒளிவீசு வடிவேல் படைக்கரம் பொலியும் மணி = பொன்மணி என ஒளிவீசும் வடிவேல் படைக்கையில் விளங்கும் மணியே, எப்புவனமும் புகழும் மணி = எவ்வுலகமும் புகழும் மணியே, பெண் சிகாமணி இருவர் நாப்பண் பொருந்து செம்மணி = உயர்ந்த பெண்மணிகளாம் வள்ளி தெய்வயானை இருவர் நடுவில் பொருந்திய செம்மையான மணியே, யடியரால் சொல்மணி = திருவடியார்களால் பேசப்படும் மணியே மறைக்கு எட்டாத மணி = மாமறைகளுக்கும் எட்டாத மணியே, யீராறு தோளுடைய மணி = பன்னிரு தோள்களை யுடைய மணியே, கொடுங்கோல் சூர்தடிந்து அமரக்கு அருள் தயாமணி = கொடுங்கோல் புரியும் அரக்கர்களைக் கொன்று வேதர்களுக்கு அருள்புரிந்த அருள்மணியே, பரம சுகபோக ஞானமணி மேலான இன்பப்பட்டறிவு ஞானமணியே, நி பண்மணிநிகர்க்கும் = நீ பலவண்ண ஒளிர் மணிகளை ஒப்பாய், கருங்கண் சிவந்த வாய்ப்பதுமாசனத்தின் ஓங்கும் பச்சைப் பசுங்கொண்டல் = கரிய கண்களும் சிவந்த வாயும் கொண்டு திருதாமரை மலரின் விற்றிருக்கும் பச்சைப் பசுங்கொண்டல் அனைய திருமாலின், மார்பில் அணையும் திருப்பாவை நிதமும் மேவும் = மார்பில் தங்கும் திருமகள் நாளும் வந்து பொருந்தும், புல்லை தன்மணி = திருப்புல்லை திருநகரின் மணியே, தனக்கு இணையிலாத சண்முக மணி = நின்தனக்கு ஈடிணையில்லாத ஆறுமுக மணியே, சதானந்த மணிவருகவே = எக்காலும் இன்புறுவாய மணியே வருகவே; சம்பு சங்கரி மதலை யின்புறும் = அம்மையப்பன் மனம் மகிழும், குமரமலை தங்கு கண்மணி வருகவே = திருக்குமரமலைக்கண் வீற்றிருந்தருளும் கண்மணியே வருகவே.

**பொழிப்பு**

பொன்மணி என ஒளிவீசும் வடிவேல் படைக்கருவி. கையில் விளங்கும் மணியே, எவ்வுலகமும் புகழும் மணியே, உயர்ந்த பெண்மணிகளாம் வள்ளி தெய்வயானை இருவர் நடுவில் பொருந்திய செம்மையான மணியே, திருஅடியார்களால் பேசப்படும் மணியே, மாமறைகளுக்கும் எட்டாத மணியே, பன்னிரு தோள்களையுடைய மணியே, கொடுங்கோல் புரியும் அரக்கர்களைக் கொன்று தேவர்களுக்கு அருள்புரிந்த அருள்மணியே, மேலான இன்பப் பட்டறிவு ஞான மணியே நீ

பலவண்ண ஒளிர் மணிகளை ஒப்பாய். கரிய கண்களும் சிவந்த வாயும் கொண்டு திருத்தாமரை மலரின் வீற்றிருக்கும் பச்சைப் பசுங் கொண்டல் அனைய திருமாலின் மார்பில் தங்கும் திருமகள் நாளும் வந்து பொருந்தும் திருப்புல்லைத் திருநகரின் மணியே நின் தனக்கு ஈடிணையில்லாத ஆறுமுக மணியே, எக்காலும் இன்புறுவாய மணியே வருகவே; அம்மையப்பன் மனம் மகிழும் திருக்குமரமலைக்கண் வீற்றிருந்தருளும் கண்மணியே வருகவே.

### அருஞ்சொற்பொருள்

வடித்த கூரிய வேல். கொண்டல் = மேகம்

### வருகை 4

கடியேறு கற்பகக் கானேறு நீரின்று
கமரேற வெண்குவ டுநேர்
கவினேறு படிவப் புழைக்கைவெள் ளிபநெஞ்சு
கரிசேற வானா டுவெங்
கொடியேறு கேதனக் கொடிய செயர சொடு கொடுங்
கோலேற வேறு மாண்மை
கொண்டபுய வெற்பமர கண்டகர்கள் குன்றுரங்
குன்றாத வுர முமேகத்
திடியேறு மஞ்சத் தாங்கவன் குணிலேறு
மெழின்மார பேரி யகடு
மீர்தரக் கூவுசெஞ் சேவலங் கொடிபடைத்
தேறுக ரவனச மலரிற்
றடியேறு கூனற் பழங்கிழமெ னப்புனந்
தன்னில்வரு சேய்வ ருகவே
சம்புசங் கரிமதலை யின்புறுங் குமரமலை
தங்குகண் மணிவ ருகவே

### பதவுரை

கடியேறுகற்பகக் கானேறு = நறுமணம்மிக்க கற்பகக் காடுகள் நிறைய, நீரின்று வெண்குவடு நேர் கவினேறு படிவ புழக்கை வெள்ளிபம் கமரே = அளவின்றி வெண்குன்று அனைய அழகுமிக்க வடிவத்து வெள்ளையானைகள் நிலத்தின் கண் நிறைய, நெஞ்சு கரி சேற = நெஞ்சில் நடுவுநிலை உண்டாக, வானாடு வெங்கொடியேறு = வானாட்டின் ஏறிய கொடிய

கொடியாகிய, கேதனக் கொடிய செய் அரசொடு கொடுங்சோறே = வெற்றிக் கொடி, செய் அரசோடு கொடுங்கோல் அழிய, ஏறும் ஆண்மை கொண்ட புயம் வெற்பு அமர்மேல் மேல் ஏறும் ஆண்மைமிக்க புயவெற்பின் குடியேறிய கண்டர்கள் குன்னுரக் குன்றாத உரமும் = தேவர்தம் குன்றனையை குறையாத வலிமையும் மேகத்திடியேறும் = மேகத்தின் இடி ஏறும், மஞ்சத் தரங்க வன்குணிலேறு எழில் மார = கட்டிலான மேடை வன்பரண் மீது ஏறும் அழகிய மாரண் அணையவனே, பேரியகடும் ஈர்தர = பெரிய விண்ணகமும் பிளவுபட, கூவு செஞ்சேவல் = கொக்கரிக்கும் சிவந்த சேவல், அம்கொடிபடைத்து ஏறுகர = அழகிய கொடி படையைப் பிடித்த கையனே, வசைமலரின் = தாமரை மலரின் வண்ணத்து, தடியேறு உனல் பழங்கிழமென = தசைத்திரள் மிக்க உண்ணும் பழுத்த கிழவனை, புனந்தனில் வருசேய் வருகவே = தினைப்புனந்தன்னில் வரும் முருகனே வருகவே (எ.று.).

## பொழிப்பு

நறுமணமிக்க கற்பக்காடுகள் நிறைய, அளவின்றி வெண்குன்றனைய அழகுமிக்க வடிவத்து வெள்ளை யானைகள் நிலத்தின் கண் நிறைய நெஞ்சில் நடுவுநிலை உண்டாக, வானாட்டின் ஏறிய கொடிய கொடியாகிய வெற்றிக்கொடி செய்யும் அரசொடு கொடுங்கோல் அழிய, மேன்மேல் ஏறும் ஆண்மைமிக்க புயவெற்பின் குடியேறிய தேவர்தம் குன்றனைய குறையாத வலிமையும், மேகத்தின் இடியேறும், கட்டிலான மேடை வன்பரண் மீது ஏறும் மாரன் அனையவனே பெரிய விண்ணகமும் பிளவுபட கொக்கரிக்கும் சிவந்த சேல் ஏறிய அழகிய கொடி படையைப் பிடித்த கையனே தாமரை மலரின் வண்ணத்துத் திசைத்திரள் மிக்க பழுத்த கிழவனெனத் தினைப் புனந்தனில் வரும் முருகனே வருகவே. அம்மையப்பன் மகன் மனம்மகிழும் திருக்குமரமலைக்கண் வீற்றிருந்தருளிய கண்மணியே நடைபயின்று வருவாயக (எ.று.)

## அருஞ்சொற்பொருள்

வெண்ணிபம் = வெள்ளை யானை. சொற்பொருட்பின் வருநிலையணி.

## வருகை 5

குண்டலஞ் செவியுறப் பரிதியுத யஞ்செய்து
குறுநகையு டன்வ ரத்தன்
கொண்கன்வர வெனவறிந் தம்புயக் கோதைமகிழ்
கூர்வதென முகிழ்வி ரிப்பக்
கண்டழுக் காளறுங் கொண்டல்வி யங்கோதை
கண்மூடி யேதன் மதியாங்
கணவற் றணந்தபிரி வாற்றாது கரிமுகங்
காட்டலென வலர்மு கிழ்ப்ப
வெண்டகு தடந்திகழ் குரம்பைவா னதிசெலற்
கிட்டசோ பானமெ னவே
பயிலகிய வனங்குலவு சோணாடு புகழ்புல்லை
யிறைமறைப் பொருளு மறியாத்
தண்டணிவி திக்குமொரு தண்டனைவி திக்குமுத்
தண்டனே நீவ ருகவே
சம்புசங் கரிமதலை யின்புறுங் குமரமலை
தங்குகண் மணிவ ருகவே.

### பதவுரை

குண்டலஞ் செவியுற = வானம் செவ்வியுற, பரிதியுதயஞ் செய்து குறுநகையுடன் வர = ஞாயிறு தோன்றி இளமுறுவலுடன் வர, தன் கொண்கன் வரவு என அறிந்து = தன் கணவன் வருகை என அறிந்து, அம்புயக் கோதை மகிழ் கூர்வது என முகிழ்விரிப்ப = தாமரை மகள் மகிழ்ச்சியடைவது என முகை முறுக்கவிழ, கண்டு அழுக்காறு உளங்கொண்டு அல்லியங் கோதை = அதனைக் கண்டு அழுக்காற்றினை மனதில் கொண்டு அல்லியாகிய மகள், கண்மூடியே = கண்களை மூடியே, தன் மதியாம் கணவன் தணந்த பிரிவாற்றாது = தனது மதியாகிய கணவன் மறைந்த பிரிவாற்றாமல், சுரிமுகங் காட்டலென = சுருக்கிய முகத்தைக் காட்டல் போல, அலர்முகிழ்ப்ப = மலர்ந்த மலர் கூம்ப, வெண்நகு தடந்திகழ் குரும்பை வானதி செலற்கு இட்ட சோபானம் எனவே = வெள்ளிய நீர்நிலையுடன் விளங்கும் சிறுகுடில்கள் விண்ணுலகு செல்ல இட்ட படிகள் என, இலகிய வளங்குலவு சோணாடு = விளங்கிய வளம் நிறைந்த சோழநாட்டின் கண் உள்ள புகழ்புல்லை யிறை = புகழ் புல்லைத் தருநகரின் இறைவனே, மறைப்பொருளும் அறியாத தண்டு அணி

விதிக்கும் ஒரு தண்டனை விதிக்கும் முத்தண்டனே = வேதப் பொருள் அறியாத பிரமனுக்கும் ஒரு தண்டனை அளிக்கும் முத்துக் குமரனே, நீ வருகவே = நீ நடைபயின்று வருவாயாக. சம்பு சங்கரி மதலை யின்புறும் = அம்மையப்பன் மகன் மனம் மகிழும், குமரமலை தங்கு கண்மணி வருகவே = திருகுமர மலைக்கண் வீற்றிருந்தருளிய கண்மணியே நடைபயின்று வருவாயாக.

## பொழிப்பு

வானம் செவ்விற ஞாயிறு தோன்றி இளமுறுவலுடன் வரத் தன்னவள் வருகை என அறிந்து தாமரை மகள் மகிழ்ச்சியடைவது என முகை முறுக்கவிழ, அதனைக் கண்ட அழுக்காற்றினை மனதில் கொண்டு அல்லியாகிய மகள் கண்களை மூடியே தன் மதியாகிய கணவன் மறைந்த பிரிவாற்றாமல் சுருக்கிய முகத்தைக் காட்டல் போல மலர்ந்த மலர் கூம்ப, வெள்ளிய நீர்நிலையுடன் விளங்கும் சிறுகுடில்கள் விண்ணுலகு செல்ல இட்ட படிகள் என விளங்கிய வளம் நிறைந்த சோழநாட்டின்கண் உள்ள புகழ்புல்லைத் திருநகரின் இறைவனே வேதப் பொருள் அறியாத பிரமனுக்கும் ஒரு தண்டனை அளிக்கும் முத்துக்குமரனே நீ நடைபயின்று வருவாயாக. அம்மையப்பன் மகன் மனம் மகிழும் குமரமலை கண்வீற்றிருந்தருளிய கண்மணியே நடைபயின்று வருவாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

குண்டலம் = ஆகாயம், வானம். செவியுற என்றது செவ்வியுற என்பதன் இடைக்குறைக் காலத்தே பொருந்த. குண்டலம் என்பதற்கு காதணி எனவும் பொருள் கூறலாம். குடில்கள் = கோயில்கள்.

### வருகை 6

இந்தப் பிறவி தனிலெமக்கு
        விருங்கட் கருணை வாராதே
லினியெப் பிறவி களினுனதா
        ளிணையிற் கலப்பேங் கலவேமேற்
சிந்தத் துமிக்கும் யமபடராற்
        செகுக்கும் பாசந் தனைச்சுழற்றிச்

சினமீக் கொண்டு கவரவரிற்
செய்யுந் தொழிலொன் றறியேமா
லந்தப் பொழுதெம் மாகுலநீத்
தருள வருக வென்னுமன்பர்க்
கன்பே வருக புல்லைநகர்க்
கத்தா வருக வமரேசன்
சொந்தக் குமரி காமுறுமெய்த்
துணைவா வருக பசுஞ்சுட்டுத்
தோகை விரித்து நடஞ்செய்மயிற்
றுரங்கா வருக வருகவே.

பதவுரை

இந்தப் பிறவிதனில் எமக்கு உன் இருங்கண் கருணை வாராதேல் = இப்பிறவியில் எங்களுக்கு உனது இரு திரு விழிகளின் திருவருள் வாராதொழியின், இனி எப்பிறவிகளின் உனது தாளிணையிற் கலப்பேம் = இனிமேல் எப்பிறவிகளில் உன்னுடைய திருத்தாள் இணையில் கலப்போம். கலவேமேல் = கலவாவிட்டால், சிந்தத் துமிக்கும் யமபடரால் செருக்கும் பாசந்தனை = குருதி சிந்த வெட்டும் யமதூதுவர்தம் கொல்லும் பாசக் கயிற்றை, சுழற்றிச் சினம் மீக்கொண்டு கவரவிரல் செய்யும் தொழிலோன்றியேமால் = சுழற்றிக் கொண்டு சினம் மிகவும் கொண்டு உயிர் கவர வந்தால், மீண்டிடச் செய்யும் தொழில் ஒன்றுமறியேம். அந்தப் பொழுது எம்ஆகுலம் நீத்து அருள வருக என்னும் அன்பர்க்கு அன்பே வருக = அப்பொழுது எமது மனக்கலக்கம் நீக்கி அருள்புரிய வருக என்று அழைக்கும் நின் அன்பர்களுக்கு அன்பனே வருக. அமரேசன் சொந்தக் குமரி காமுறும் மெய் துணைவா வருக = தேவேந்திரனின் சொந்த மகள் தெய்வாயனை விரும்பும் உண்மைத் துணைவனே வருக. பசுஞ்சுட்டுத் தோகை விரித்து நடஞ்செய் மயில் துரங்க = வருக வருகவே = பசிய கொண்டையினையும் தோகையினையும் சிலிர்த்து விரித்து கூத்தாடும் மயிற்பரியூர்பவனே வருக சிறு நடை பழகி வருக (எ.று.).

பொழிப்பு

இப்பிறவியில் எங்களுக்கு உனது இரு திருவிழிகளின் திருவருள் வாராதொழியின், இனிமேல் எப்பிறவிகளில் உன்னுடைய திருத்தாள் இணையில் கலப்போம். கலவாவிட்டால்

குருதி இந்த வெட்டும் யமதூதுவர் தம் கொல்லும் பாசக் கயிற்றைச் சுழற்றிக் கொண்டு சினம் மிகவும் கொண்டு உயிர் கவர வந்தால், மீண்டிடச் செய்யும் தொழில் ஒன்று மறியேம். அந்தப்பொழுது எமது மனக்கலக்கம் நீக்கி அருள்புரிய வருக என்று அழைக்கும் நின் அன்பர்களுக்கு அன்பனே வருக; தேவேந்திரன் சொந்த மகள் தெய்வயானை விரும்பும் உண்மைத் துணைவனே வருக; பசிய கொண்டையினையும் தோகை யினையும் சிலிர்த்து விரித்துக் கூத்தாடும் மயிற்பரியூர்பவனே வருக; சிறுநடை பழகி வருகவே (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

ஆல் = ஆசை. சூட்டு = மயில் கொண்டை. பரி = குதிரை, ஊர்தி.

### வருகை 7

எழுதா வேதப் போலிதனை
யெழுதா ரணியும் புகழ்ந்தேத்த
வேமச் சிலையேட் டொருகோட்டா
லெழுதும் பிரானோ டகங்களிப்பப்
பொழுதார் மாலை மதிநுதற்செம்
பொற்பூ தரத்தா யணைத்தெடுத்தும்
பொருந்த மடியாந் தொட்டிலிட்டும்
புறனுந் தட்டி விழிதுயிற்று
முழுதா ரளிசூழ் கடம்பணிதோ
ளும்பா வருக தகட்டிலைலேற்
குடையாய் வருக சூறச்சிறுமிக்
குறவா வருக வாதரத்திற்
றொழுதார்க் கருளும் புல்லைநகர்த்
துங்கா வருக பசுஞ்சூட்டுத்
தோகை விரித்து நடஞ்செய்மயிற்
றுரங்கா வருக வருகவே.

## பதவுரை

எழுதா வேதப் போலிதனை = ஏட்டில் எழுதப்படாத மறைகளில் துணைவேதம் எனப்படும் பாரதக் கதையினை, எழுதாரணியும் புகழ்ந்தேத்த = ஏழுலகமும் புகழ்ந்து போற்ற,

ஏமச்சிலை ஒட்டு ஒரு கோட்டால் எழுதும் பிரானோடு = அழியாத குன்றை ஏடாகக் கொண்டு தன்னொடு கொம்பினால் எழுதும் ஐங்கரனோடு, அகம் களிப்ப = உள்ளம் உவப்புற, பொழுதார் மாலை மதிநுதல் செம்பொற்பூ தரத்தாய் அணைத்து எழுத்தும்= சிறந்தமாலைப் பொழுதின் மதிபோன்ற நெற்றியில் செம்மையான பொன்னாற் செய்த நெற்றிச் சுட்டியின் சிறப்பினதாய் அணைத்து எடுத்தும், பொருந்த மடியாம் தொட்டிலிட்டும் = பொருத்தமுற மடியாம் தொட்டியில் இட்டும், புறனும் தட்டி விழிதுயிற்றும் = புறத்தே தட்டிக் கொடுத்துக் கண்மூடி உறங்கச் செய்தும், முழுதாரணி சூழ் கடம்பணி தோள் உம்பா வருக = உலகம் முழுமையும் போற்றும் கடம்புமாலை அணிந்த தோளையுடைய தெய்வமே வருக. தகட்டிலை வேற்குடையாய் வருக = வெற்றிலை போன்ற வேற்படைக்கு உரிமை உடையவனே வருக, குறச்சிறுமிக்கு உறவா வருக = குறமகள் வள்ளிக்கு உறவானவனே வருக. ஆதரத்தில் தொழுதார்க்கருளும் = அன்பின் ஆதாரப்பட்டுத் தொழும் அடியார்களுக்கு அருள்புரியும், புல்லை நகர்த்துங்கா வருக = திருப்புல்லைத்திரு நகரத்துத் தூயவனே வருக. பசுஞ்சூட்டுத் தோகை விரித்து நடஞ் செய் மயிற்றுரங்கா வருக வருகவே = பசிய கொண்டையினையும் தோகையினையும் சிலிர்த்து விரித்து கூத்தாடும். மயிற் பரியூர்பவனே வருக; சிறு நடை பழகி வருகவே (எ.று.).

பொழிப்பு

ஏட்டில் எழுதப்படாத மறைகளின் துணைவேதம் எனப்படும் பாரதக் கதையினை ஏழுலகமும் புகழ்ந்து போற்ற அழியாத குன்றை ஏடாகக் கொண்டு தன்னொரு கொம்பினால் எழுதும் ஐங்கரனோடு உள்ளம் உவப்புறச் சிறந்த மாலை பொழுதின் மதி போன்ற நெற்றியில் செம்மையான பொன்னாற் செய்த நெற்றிச் சுட்டியின் சிறப்பினதாய் அணைத்து எடுத்தும் பொருத்தமுற மடியாம் தொட்டிலில் இட்டும் புறத்தே தட்டிக் கொடுத்துக் கண்மூடி உறங்கச் செய்தும் உலகம் முழுமையும் போற்றும் கடம்பு மாலை அணிந்த தோளையுடைய தெய்வமே வருக; வெற்றிலை போன்ற வேற்படைக்கு உரிமை உடையவனே வருக; குறமகள் வள்ளிக்கு உறவானவனே வருக; அன்பின் ஆதாரப்பட்டுத் தொழும் அடியார்களுக்கு அருள்புரியும் திருப்புல்லைத் திருநகரத்துத் தூயவனே வருக; பசிய கொண்டையினையும் தோகையினையும் சிலிர்த்து விரித்து கூத்தாடும் மயிற்பரி யூர்பவனே வருக; சிறுநடை பழகி வருகவே.

## அருஞ்சொற்பொருள்

வேதப்போலி = பாரதம். தகட்டிலை = வெற்றிலை.

### வருகை 8

ஈமத் தாடி விதிதலையோ
டேந்திப் பணியா ரமுஞ்சுமந்து
மியற்றுந் தவமா முனிமகற்கா
வியமற் றடிந்தும் வரலறியாக்
காமற் காய்ந்த பெருங்கடவுள்
கல்லா னிழற்கீழ்க் கற்றவர்க்குக்
கருதற் கரிய மறைப்பொருளைக்
காட்டா நிற்கு மன்னாற்கே
மாமிக் குயர்ந்த முதன்மனுவை
வழுத்துங் குருவே வருகபுல்லை
மன்னா வருக குமரமலை
வாசா வருக வோரா று
சோமத் திருமண் டலமுகங்க
டுலங்க வருக பசுஞ்சூட்டுத்
தோகை விரித்து நடஞ்செய்மயிற்
றுரங்கா வருக வருகவே.

### பதவுரை

ஈமத்து ஆடி = திருநீறு பூசி, விதிதலையோடு ஏந்தி = பிரமனின் தலையைக் கையில் ஏந்தி, பணியாரமும் சுமந்து = பாம்பினை மாலையாகத் தாங்கி, இயற்று தவமாமுனி மகற்கா = செய்யும் தவமாமுனி மிருகண்ட முனிவன் மகன் மார்க் கண்டனுக்காய், இயமன் தடிந்தும் = எமனைத் தண்டித்தும் வரலறியா காமற் காய்ந்த பெருங்கடவுள் = மன்மதனின் வரவு அறியாது அவனை எரித்த பெருங்கடவுள், கல்லான் நிழற்கீழ் = கல்லால மரத்தின் கீழிருந்து, கற்றவர்க்குக் கருதற்கரிய மறைப் பொருளைக் காட்டாநிற்கும் அன்னாற்கு = கற்றவர்கட்கும் எண்ணற்கரிய வேத விழுப்பொருளை இன்னதென எடுத்தியம்பிக்காட்டி நிற்கும் அத்தன்மையார்க்கு ஏமாம் மிக்குயர்ந்த முதன் மறுவை வழுத்துங் குருவே வருக = விருப்பமானவனே, மிகவுயர்ந்த மூலமந்திரத்தினைத் துதிக்கும் குருவே வருக. புல்லை மன்னா வருக = திருப்புல்லைத் திரு நகருக்கு மன்னவனே வருக. குமரமலை வாசா வருக = திருக்

குமரமலைக்கண் வாழ்பவனே வருக. ஓராறு சோமத்திருமண்டல முகங்கள் விளங்க வருக. ஓராறு குளிர்ந்த திருத்தலங்களில் எழுந்தருளிய திருமுகங்கள் விளங்க வருகவே பசுஞ்சூட்டுத் தோகை விரித்து நடஞ்செய் மயிற்றுரங்கா வருக வருகவே = பசிய கொண்டையினையும் தோகையினையும் சிலிர்த்து விரித்து கூத்தாடும் மயிற்பரி யூர்பவனே வருக; சிறுநடை பழகி வருகவே.

## பொழிப்பு

திருநீறு பூசி பிரமனின் தலையைக் (கபாலம்) கையில் ஏந்திப் பாம்பினை மாலையாகத் தாங்கிச் செய்யும் தவமாமுனி மிருகண்ட முனிவன் மகன் மார்க்கண்டனுக்காய் எமனைக் தண்டித்தும், மன்மதனின் வரவு அறியாது அவனை எரித்த பெருங்கடவுள் கல்லால மரத்தின் கீழிருந்து கற்றவர்கட்கும் எண்ணற்கரிய வேத விழுப்பொருளை எடுத்தியம்பிக் காட்டிநிற்கும், அத்தன்மையார்க்கு விருப்பமான மிகவுயர்ந்த மூலமந்திரத்தினைத் துதிக்கும் குருவே வருக; திருப்புல்லைத் திருநகருக்கு மன்னவனே வருக; திருக்குமரமலைக்கண் வாழ்பவனே வருக; ஓராறு குளிர்ந்த திருத்தலங்களில் எழுந்தருளிய திருமுகங்கள் விளங்க வருக; பசிய கொண்டையினையும், தோகையினையும் சிலிர்த்து விரித்து கூத்தாடும் மயிற்பரி யூர்பவனே வருக; சிறுநடை பழகி வருகவே (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

விதி = பிரமன், ஆகுபெயர். தலையோடு = தலையுடன் எனவும், தலை + ஓடு எனப் பிரிந்து கபாலத்துடன் எனவும் ஒரே பொருளை இருவகையில் சுட்டிய நயம் இன்புறற்குரியது. இப்பாடலில் மார்க்கண்டன் கதையும் காமன் எரித்த கதையும் குறிப்பில் குறிக்கப்பட்டுள்ளன.

### வருகை 9

சுகந்த மறப்ப ரூடலினார்
　　சொல்ல மறப்பர் சீர்கணிப்போர்
சுவர்க்க மறப்ப ரவிசயில்லார்
　　துன்ப மறப்ப ரின்பமுளா
ரகந்தை மறப்பர் ஞானியர்க
　　ளைய மறப்பர் விவேகியர்க
ளாக மறப்பர் யோகியர்க
　　ளமரும் புல்லைக் கிறைவருக

திகந்தத் துதிக்கக் கருணைபுரி
செவ்வேள் வருக சிவைக்குகந்த
செல்வா வருக மணிநிறத்துத்
தேகா வருக வனவரதந்
தொகுந்தோந் தொந்தோந் தொந்தோந்தொந்
தோமென் றிலகு பசுஞ்சுட்டுத்
தோகை விரித்து நடஞ்செய்மயிற்
றுரங்கா வருக வருகவே.

**பதவுரை**

ஊடலினார் சுகந்தம் மறப்பர் = ஊடுல் கொண்ட கணவன் மனைவியர் நறுமணப் பொருள்களை மறுத்து ஒதுக்குவர், சீர் கணிபோர் சொல் மறப்பர் = நடுநிலையை மதிப்பிடுவோர் பலசொல்லல் மறுத்து ஒதுக்குவர். அவிசு அயில்வார் சுவர்க்கம் மறப்பர் = வேள்வியில் அவிப்பலி கொள்ளுபவர் இன்பம் அறியார். இன்பம் உளார் துன்பம் மறப்பர் = இன்பமாய் வாழ்பவர் துன்பம் அறியார் ஞானியர்கள் அகந்தை மறப்பர் = ஞானியர்கள் அழுக்காற்றினை விடுவர். விவேகியர்கள் ஐயம் மறப்பர் = பகுத்தறிவாளர்கள் குற்றங்களை ஒழிப்பர். யோகியர்கள் ஆகம் மறப்பர் = யோகியர்கள் உடல் ஓம்புதலை ஒழிப்பர். புல்லை அமரும் இறைவருக = திருப்புல்லைத் திருநகரில் வீற்றிருக்கும் தலைவனே வருக திகந்தம் துதிக்க கருணைபுரி செவ்வேள் வருக = திக்கின் முடிவு வரையுள்ள யாவரும் வணங்க, அவர்களுக்கு அருள்புரியும் செவ்வேளே வருக. சிவைக்கு உகந்த செல்வா வருக = பார்வதிக்கு விருப்பமான செல்வனே வருக. மணிநிறத்துத் தேகா வருக = பவள மணி நிறத்து வண்ண மேனியனே வருக. அனவரதம் = நாளும், தொகுந்தோம் தொந்தோம் தொந்தோம் தொந்தோம் என்று இலகு பசுஞ்சுட்டுத் தோகை விரித்து நடஞ்செய் மயிற் றுரங்கா வருக வருகவே = தொகுந்தோம் தொந்தோம் தொந்தோம் தொந்தோம் என்று விளங்கும் பசிய கொண்டையையும் தோகையையும் சிலிர்த்து விரித்துக் கூத்தாடும் மயில் ஊர்தியில் வருபவனே வருக சிறுநடை பயின்று வருகவே (எ.று).

**பொழிப்பு**

ஊடல் கொண்ட கணவன் மனைவியர் நறுமணப் பொருள்களை மறுத்து ஒதுக்குவர். நடுநிலையை மதிப்பிடுவோர் பல சொல்லல் மறுத்து ஒதுக்குவர். யாகத்து அவிப்பலி

கொள்ளுபவர் இன்பம் அறியார். இன்பமாய் வாழ்பவர் துன்பம் அறியார். ஞானியர்கள் அழுக்காற்றினை விடுவர். பகுத்தறிவாளர்கள் குற்றங்களை ஒழிப்பர். யோகியர்கள் உடலோம்பலை ஒழிப்பர். திருப்புல்லைத் திருநகரில் வீற்றிருக்கும் தலைவனே வருக. திக்கின் முடிவுவரையுள்ள யாவரும் வணங்க, அவர்களுக்கு அருள்புரியும் செவ்வேளே வருக. பார்வதிக்கு விருப்பமான செல்வனே வருக. பவளமணி நிறத்து வண்ண மேனியனே வருக. நாளும் தொகுந்தோம் தொந்தோம் தொந்தோம் தொந்தோம் என்று விளங்கும் பசிய கொண்டையையும் தோகையையும் சிலிர்ந்து விரித்துக் கூத்தாடும் மயில் ஊர்தியில் வருபனே வருக. சிறு நடை பயின்று வருக (எ.று.).

### அருஞ்சொற்பொருள்

ஊடல் = கணவன் மனைவியர் இடையில் தோன்றும் சிறுபிணக்கு. அகந்தை = அழுக்காறு. திகந்தம் = திசை முடிவு. தொகுந்தோம் தொந்தோம்........ தொந்தோம் - ஒலிக்குறிப்புச் சொற்கள்.

### வருகை 10

பணவா ளெயிற்றுப் பணிக்கரசும்
பதுமா சனனு நின்பேற்றைப்
பகர்தற் கரிதா மோராறு
படைவீ டமர்ந்தன் பருக்கருள்வோய்
கணமார் குணங்கு துணங்கைகொட்டக்
களம்புக் கமரி னிணங்கமழுங்
கதிர்வேல் விடுத்துச் சுரர்பகையின்
கருவே ரறுக்க வருமுதலே
மணமார் பொழிற்றேன் மிசைந்தளிவிண்
வழிபோஞ் சத்த மாவுடலை
மறைப்பக் கதிர்நீ னிறப்பரியாய்
மருவற் கொன்னோ வெனவயிர்ப்பத்
துணர்வான் பொதுளும் புல்லைநகர்த்
தோன்றால் வருக பசுஞ்சூட்டுத்
தோகை விரித்து நடஞ்செய்மயிற்
றுரங்கா வருக வருகவே.

### பதவுரை

பண வாகுளயிற்று பணியரசும் - கொடிய நச்சுப் பற்பனையுடைய ஆதிசேடனும், பதுமாசனனும் = தாமரை மலர்வாழ் பிரமனும், நின் பேற்றை = நின்பிறவிப் பேற்றை, பகர்தற்கரிதாம் = வழுத்துதற்கு நினைப்பினும் வழுத்துதல் அரிதாம் ஓராறு படைவீடு அமர்ந்து = ஒப்பற்ற அறுபடை வீட்டில் வீற்றிருந்து, அன்பருக்கு அருள்வோய் = நினக்கு அன்புடையாருக்கு அருள் தருபவனே. கணமார் குணங்க துணங்கை கொட்ட களம்புக்கு அமரின் நிணங்கமழும் கதிர்வேல் விடுத்து = கூட்டம் கூட்டமாய் பேய் பிசாசுகளின் துணங்கைக் கூத்தின் முழக்கம்மிக்க போரிடைப் புலால் மணங்கமழும் ஒளிர்வேல் செலுத்தி, சுரர் பகையின் கரு வேரறுக்க வருமுதலே = தேவர் பகைமையைக் கருவுடன் வேரறுக்கு வரும் முழுமுதல்வனே, மணமார் பொழிற்தேன் மிசைந்து அளிவிண்வழிபோம் = மணம் மிக்க சோலைகளில் தேனை உண்டு வண்டுகள் விண்வழியே செல்லும், சத்தமாவுடலை மறப்ப = உயிர்ப்பாய உண்மைப்பேருடலை மறைத்துக் கொண்டு, கதிர் நீல்நிறப்பரியாய் = நீலநிறக்கதிர்களை வீசும் மயில் ஊர்தியில் வருபவனே, மருவற்கு அயிர்பது என்னே என உணர்வான் பொதுளும் = நின்னை அடைவதற்கு மயங்குவது என்னே! என உணர்வான் தழைக்கும், புல்லை நகர்த்தோன்றால் வருக = திருப்புல்லைத் திருநகர்த் தலைவனே வருக. பசுஞ்சூட்டுத் தோகை விரித்து நடஞ்செய் மயிற்றுரங்கா வருக வருகவே = பசிய கொண்டையும் தோகையும் சிலிர்த்து விரித்துக் கூத்தாடும் மயில் ஊர்தியினனே வருக சிறுநடை பயின்று வருகவே (எ.று.).

### பொழிப்பு

கொடிய நச்சுப் பற்களையுடைய ஆதிசேடனும், தாமரை மலர்வாழ் பிரமனும் நின்பிறவிப்பேற்றை வழுத்துதற்கு நினைப்பினும் வழுத்த அரிதாம். அறுபடை வீட்டில் வீற்றிருந்து நினக்கு அன்புடையாருக்கு அருள் தருபவனே கூட்டம் கூட்டமாய்ப் பேய் பிசாகுகளின் துணங்கைக் கூத்தின் முழக்கம் மிக்க போரிடைப் புலகல்மணம் கமழும் ஒளிர்வேல் செலுத்தித் தேவர் பகைமையைக் கருவுடன் வேர் அறுக்க வரும் முழு முதல்வனே மணம்மிக்க சோலைகளில் தேனை உண்டு வண்டுகள் விண்வழியே செல்லும் உயிர்ப்பாய உண்மைப் பேருடலை மறைத்துக் கொண்டு நீலநிறக் கதிர்களை வீசும் மயில் ஊர்தியில் வருபவனே நின்னை அடைவதற்கு மயங்குவது என்னே! என உணர்வான் தழைக்கும் திருப்புல்லைத் திருநகர்த் தலைவனே

வருக; பசிய கொண்டையும் தோகையும் சிலிர்த்து விரித்துக் கூத்தாடும் மயில் ஊர்தியினனே வருக; சிறு நடை பயின்று வருகவே (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

மணமார் பொழிற்தேன் மிசைந்து அளிவிண் வழிபோம் சத்தமாவுடலை மறைப்ப என்பது எடுத்துக்காட்டுவமை. கதிர்நீர் = இலக்கணப் போலி. இரண்டாயிரம் நாவினையுடைய ஆதிசேடனாலும், நாவில் நாமகள் குடியிருக்கும் நான் முகனாலும் எடுத்தியம்ப முடியாத அளவில் பெருமையுடைய பிறவிப் பேற்றை உடையவன் குமரமலைக் கடவுள் என்பதனைப் பண வாளெயிற்றுப் பணிக்ரசும் பதுமாசனனும் நின் பேற்றைப் பகர்தற்கரிதாம்" என்றார்.

வருகைப் பருவம் முற்றிற்று

# அம்புலிப் பருவம்

அம்புலி = திங்கள் நிலா. அம்புலிப் பருவம்; அஃதாவது "பாட்டுடைப் பிள்ளையுடன் விளையாட வரும்படி மாதர் அப்பிள்ளையை ஒக்கலில் இருத்தி வைத்துக் கொண்டு சந்திரனைச் சாம பேத தான தண்டங்களால் கூறி யழைக்கும் நிலை" என முன்னர் உரைக்கப்பட்டுள்ளது. ஏழாம் பருவமாகிய இதனைப் பதினைந்தாம் திங்கள் தொடங்கி நிகழ்வதாகக் கூறுவர். இதுகாறும் கூறயவற்றான் அம்புலிப் பருவமாவது பெண்டிர் பாட்டுடைத் தலைவனாம் குழந்தையைத் தம் இடுப்பில் இருத்தி விண்மதி காட்டி அக்குழந்தைத் தம்முடன் விளையாட வரும்படி இன்சொற் கூறல், வேறுபடுத்தல், ஈதல், ஒறுத்தல் எனும் நால்வகையால் கூறி அழைப்பதாகப் பாடுவதாகும்.

## அம்புலி 1

செங்கமல முகமா றுறத்தோன்ற லான்மிக்க
தெண்ணிலாப் புன்னகை யினாற்
றிருவல்லி முகமலர மலருவித் தங்கவுட்
டிகழுமுத் தந்தரு தலாற்
கங்கையொடு குலவிமான் மருமானெ னப்படுங்
காட்சியாற் சூரனோ டக்
கனகமணி வடவரையின் மொய்ம்பின்வல மருவலாற்
கவினுமொண் வேலை யார்ந்து

பொங்குசின வரவம் பிடிக்கலா லந்தரப்
புலவர்களி னொருவனெ னலாற்
பொற்புமிகு கற்கடக வேந்ததென்ன லாலெங்கள்
புங்கவனு நீயுமொப் பாம்
ஐங்கரற் கிளவலென வந்தநற் குழகனுட
னம்புலீ யாடவா வே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே.

பதவுரை

செங்கமல முகம் ஆறுஉ றத் தோன்றலான் = செந்தாமரை ஒத்த முகம் ஆறினைக் கொண்டு தோன்றுதலான் (செங்கமல முகம் மாறுறத் தோன்றலான் = மலர்ந்த செந்தாமரை மலர் முகங்கள் குவிந்திடத் தோன்றுதலான்), மிக்கது எண்ணிலாப் புன்னைகையினால் = போற்றத்தக்க அளவில்லாத இளமுறு வலால், கூறு இருவல்லி முகமலர மலர்வித்து அங்கவுள் திகழும் முத்தம் தருதலால் = கூறப்படும் இரண்டு வள்ளி தெய்யானை வல்லியர்கள் முகம் மலர, அவர்தம் உள்ளத்தை மலர்வித்து அவர்கள் கனத்தில் வாய்முத்தம் தருதலால் (மிக்கது எண்ணிலாப் புன்னகையினால் கூறு இரு அல்லி முகம் அயர மலர் வித்து அங்கவுள் திகழும் முத்தம் தருதலால் = போற்றத்தக்க அளவிறந்த நிலவொளி புன்னகையினால் கூறப்படும் வெள்ளல்லி, செவ்வல்லி ஆகிய இருவகை மலர்முகைகளும் விரிய மலர்வித்துத் தேன்ஒழுகும் அம்மலர்களில் நிவொளியைப் பாய்ச்சுதலால்), கங்கையொடு குலவி மான் மருமான் எனப்படுங் காட்சியால் = கங்கைத் தாயினிடம் பிறந்து வளர்ந்த அம்மான் வழித்தோன்றல் என உணர்வதால் (கங்கையொடு குலவி மான் மருமான் எனப் படும் காட்சியால் = சிவன் தலையில் கங்கை நதியுடன் சேர்ந்த பெருமையுடன் தன்கண்மானைக் களங்கமெனக் கொண்டுள்ள தன்மையினால்), சூரன் ஓடக் கனகமணிவட வரையின் மொய்ம்பின் வலம் வருதலால் = சூரன் அழியக் கனகமணி வாகு வலயம் தரித்து, மலை ஒத்த வலிமையுடன் உலகை வலமாகச் சுற்றி வருதலால் (சூரன் ஓடக் கனகமணி வரையின் மொய்ம்பின் வலம் வருதலால் = சூரியன் மறைப் பொன்மணிகள் ஒளிரும் வடமலையிடத்துத் தோன்றி, அம்மலையை வலிமையுடன் வலப்புறமாகச் சுற்றி வருவதால்), கவினும் ஒண்வேலை ஆர்ந்து பொங்குசினவர் அவம் பிடிக்கலால் = அழகிய ஒளியுடைய வேலாயுதத்தைப் பெற்று, பெருகிவரும் ஆத்திரம் உடைய அவுணர்கட்குத் துன்பம் உண்டாக அதனை இனிதே பிடிப்பதால்

(கவினும் ஒண் வேலை ஆர்ந்து பொங்குசின அரவம் பிடிக்கலால் = அழகு ஒளிரும் கடலை அடைந்து பொங்குகின்ற அலை ஒலியை எழுப்புதலால்) அந்தரப்பு புலவர்களில் ஒருவன் எனலால் = அந்தரத்துத் தேவர்களில் ஒருவன் எனப்படுதலால் (சங்கத்துத் தெய்வப் புலவர்களில் ஒருவன் எனப்படுதலால்) (அம்தரத்துப் புலவர்களில் ஒருவன் எனலால்அந்தரத்தில் கோள்கள் எனும் தேவர்களில் ஒருவனாக விளங்குதலால் (பதினாறு கலைகளைப் பெற்ற அழகிய தன்மையால் புலவர் பெருமக்களில் ஒருவனாக மதிக்கப் படுதலால்), பொற்புமிகு கற்கடக வேந்து எனலால் = சிறப்புமிக்க காரியங்களைக் கைகூடச் செய்யும் ஆடிக் கார்த்திகைத் தலைவன் என்பதால் (பொற்புமிகு கற்கடகம் வேந்து எனலால் = சோதிடக் கலையில்) சிறப்பு மிக்க கடகராசிக்கு உரிய தலைவன் என்பதால்) எங்கள் புங்கவனும் நீயும் ஒப்பாம் = எங்கள் தேவனும் நீயும் ஒப்பாய் (ஆதலால்), ஐங்கற்கு இளவல் என வந்த நற்குழகனுடன் அம்புலியாட வாவே = ஐந்துகைகளையுடைய யானை முகத்தவனுக்குப் பின்னர்த் தோன்றிய இளவலுடன் அம்புலியே விளையாட வருவாயாக, அனகன் அகல் மேரு நிகர் குமரமலை யாளியுடன் அம்புலியாட வாவவே = அழகானவன், அகன்ற மேருமலை ஒத்த குமரமலையின்கண் எழுந்தருளிய முருகனுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

## பொழிப்பு

செந்தாமரை ஒத்த முகம் ஆறினைக் கொண்டு தோன்றுதலான் (மலர்ந்த செந்தாமரை மலர் முகங்கள் குவிந்திடத் தோன்றுதலான்) போற்றத்தக்க அளவில்லாத இளமுறுவலால், கூறப்படும் இரண்டு வள்ளி தெய்வயானை வல்லியர்கள் முகம்மலர அவர்தம் உள்ளத்தை மலர்வித்து அவர்கள் கன்னத்தில் வாய்முத்தம் தருதலால் (போற்றத்தக்க அளவிறந்த நிலவொளிப் புன்னகையினால், கூறப்படும் வெள்ளல்லி செவ்வல்லி ஆகிய இருவகை மலர் முகைகளும் விரிய மலர்வித்துத் தேனொழுகும் அம்மலர்களில் நிலவொளியைப் பாய்ச்சுதலால்) கங்கைத் தாயினிடம் பிறந்து வளர்ந்த அம்மான் வழித்தோன்றல் என உணர்வதால் (சிவன் தலையில் கங்கை நதியுடன் சேர்ந்த பெருமையுடன் தனகண் மானைக் களங்கமெனக் கொண்டுள்ள தன்மையினால்), சூரன் அழியக் கனகமணி வாகுவலயம் தரித்து, மலையொத்த வலிமையுடன் உலகை வலமாகச் சுற்றி வருதலால் (சூரியன் மறையப் பொன்மணிகள் ஒளிரும் வடமலையிடத்துத் தோன்றி, அம்மலையை வலிமையுடன் வலப்புறமாகச் சுற்றி

வருதலால்), அழகிய ஒளியுடை வேல் ஆயுதத்தைப் பெற்றுப் பெருவரும் ஆத்திரம் உடைய அவுணர்கட்குத் துன்பம் உண்டாக அதனை இனிதே பிடிப்பதால் (அழகு ஒளிரும் கடலை அடைந்து பொங்குகின்ற அலை ஒலியை எழுப்புதலால்), அந்தரத்துத் தேவர்களில் ஒருவன் எனப்படுதலால் அன்றிச் சங்கத்துத் தெய்வப் புலவர்களில் ஒருவனாக விளங்குதலால் (அந்தரத்தில் கோள்கள் எனும் தேவர்களில் ஒருவனாக விளங்குதலால் அன்றிப் பதினாறு கலைகளைப் பெற்ற அழகிய தன்மையால் புலவர் பெருமக்களில் ஒருவனாக மதிக்கப்படுதலால்), சிறப்புமிக்க காரியங்களைக் கைகூடச் செய்யும் ஆடிக் கார்த்திகைத் தலைவன் என்பதால் (சோதிடக் கலையில் சிறப்புமிக்க கடகராசிக்கு உரிய தலைவன் என்பதால் எங்கள் தேவனும் நீயும் ஒப்பாய் ஆதலால் ஐந்து கைகளையுடைய யானைமுகத்தவனக்குப் பின்னர் தோன்றிய இளவலுடன் அம்புலியே விளையாட வருவாயக; அழகானவன் அகன்ற மேருமலை ஒத்த குமரமலையின் கண் எழுந்தருளிய முருகனுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

இப்பாடல் நிலவை இன்சொல் கூறிப்பாட்டுடைத் தலைவனுடன் விளையாட வரும்படி அழைப்பதாக அமைந்தது; இரட்டுற மொழிதல் எனும் அணியின் பாற் பட்டதுமாம். இப்பாடலில் மருமான், முத்தம், வேலை, சூரன் என்பன செம்மொழிச் சிலேடையாக இருபொருள் தந்து நின்றன. மற்றும் முகமாறு (முகம் + ஆறு; முகம் + மாறு), புன்னகையினாற் றிருவல்லி )புன் + நகையினால் + திருவல்லி; புன்னகையின் + இரு + அல்லி), முகமலர (முகம் + மலர; முகம் + அலர) அங்கவுள் (அம் + கவுள்; அங்கம் + உள்) கனகமணி வடவரை (கணகமணி வடம் + வரையின்; கனகமணி + வடவரையின்) எனும் சொற்களைப் பிரிமொழிச் சிலேடையிலும் பிரித்துப் பொருள் கொள்க. முருகனை முன் நினைந்து பொருள் காணும்போது கங்கையொடு என்பது கங்கைக்கண் எனப்பொருள் தருவதால் உருபுமயக்கமாகும். இதுபோன்றே வடவரையின் என்பதற்கு திங்களை முன் வைத்துப் பொருள்காணும் கால் ஒப்புப் பொருளதாய இன் உருபிற்கு மாறாய் இடப்பொருள் தரும் ஏழன் உருபு ‘கண்’ என்பது நின்று பொருள் தருவதால் இதுவும் உருபு மயக்கமே ஆகும். மான் = அம்மான் எனப் பொருள் கொள்வுழி முதற் குறையாகக் கொள்க. யாளி = சிங்கமுகமும், தும்பிக்கையும் உடையை வன்மைமிக்க ஒருவிலங்கு ஆகும். இவ்விலங்கு

தற்போது இல்லை. எனினும் இருந்தமைக்குக் கரியால் கோயில்களில் இவ்வுருவம் செதுக்கப்பட்டுள்ளது. திங்களைக் கற்கடக வேந்து என்பதால் ஆசிரியர் சோதிடக் கலையில் தேர்ந்தவராக இருக்க வேண்டும்.

## அம்புலி 2

கனிதரப் பரமனை விரும்பித்து திக்கையுறு
கடவுண்மா வுடனு தித்துக்
கவினுநற் குணவாரி யுற்றுமே லாசையங்
கடன்மூழ்கி முன்னமொரு நாள்
வனமருவு பொற்பூங் கொடிச்சிற் றிடைச்சிமேன்
மயல்கொடு கொடுஞ்சா பமும்
வாங்கியக் கணமங் கிராதவொளி யுருவாகி
மண்டலம் பரவவர லாற்
றனையொக்கு மென்றோ நினைச்சுட்டி னாவெனத்
தானழைக் கின்றபொ ழுதே
தனியனா னோமெனக் கருதிவா ராதினுந்
தாழ்ப்பதெவ னீசொற் றிடர்
யனவரத மடியர்மன வனசமுறை சரணனுட
னம்புலீ யாட வாவே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே.

*பதவுரை*

கனிதரப் பரமனை விரும்பித் துதிக்கையுறு கடவுள் மாவுடன் உதித்துக் கவினும் நற்குணவாரியுற்று = கனி ஒன்றினைக் கொடுக்கும் சிவனை விரும்பித் தும்பிக்கையுடைய யானை முகக் கடவுளுடன் பிறந்து விளங்கும் நற்குணக்கடலாம் முருகனுக்கு ஒப்பாகி (கனி ஒன்றினைக் கொடுக்கும் சிவனை விரும்பித் தும்பிக்கையுடைய யானை முகக்கடவுளுடன் தந்த வடிவல் பிறந்து சிறப்புறத் கிழக்குத் திசையில் தோன்றி), மேல் ஆசையாய்கடல் மூழ்கி முன்னமொரு நாள் வனமருவு பொற்பூங் கொடிச் சிற்றிடைச்சி மேல் மயல் கொடு கொடுஞ்சாபமும் வாங்கி அக்கணம் அங்கிராத ஒளியுருவாகி மண்டலம் பரவவரலாம் = அளவிறந்த காமக்கடலில் மூழ்கி முன்னம் ஒருநாள் தினைப்புனம் காக்கும் பொன்னாலாகிய பூங்கொடி போன்று சிற்றிடையுடைய வள்ளியின் மேல் மயக்கம் கொண்டு வளைந்த, வில்லைக் கையில் ஏந்தி வேடன் வடிவில் பேரொளிப்

பிழம்பாய் மாறி உலகம் போற்ற வலம் வருதலால் (பேராசைப் பிணியாம் கடலில் மூழ்கி அல்லது மேலைக் கடலில் மூழ்கி முன்பொரு நாளில் சோலைகளுக்கு இடையில் சென்று பொன்னாலாகிய பூங்கொடி போன்று சிற்றிடையுடைய குருவின் மனைவி மேல் மயக்கம் கொண்டு அதனால் கொடிய சாபத்திற்கு ஆளாகி அவ்விடம் விட்டுக் கொடியவன் என்னும் பெயரோடு விலகிச் சென்று நிலவொளி வடிவாய் உலகம் போற்ற வருதலால்), தனை ஒக்கும் என்றே நினைச்சுட்டி வாவெனத் தானழைக்கின்ற பொழுதே தனியன் ஆனோம் எனக் கருதி வாராதினும் தாழ்ப்பது எவன் நி சொற்றிடாய் = முருகன் தன்னை ஒப்பாய் என்றே உன்னைச் சுட்டிக்காட்டி வாவா என்று அழைக்கின்ற நிலையில் நீ தனியன் ஆகிவிட்டோம் என்று தாழ்வு மனப்பான்மையில் இன்றும் வாராது காலம் தாழ்ப்பது என்ன காரணம் சொல்வாயாக. அனவரதம் அடியர் மனவசன முறை சரணனுடன் அம்புலீயாட வாவே = நாளும் தம் அடியார் திருவுள்ளத்துத்தன் திருவடித் தாமரையுள் வீற்றிருப்பானுடன் அம்புலியே விளையாட வருவாயாக. அனகனகன் அசல் மேருநிகர் குமரமலை ஆளியுடன் அம்புலியாட வாவா = அழகானவன், அகன்ற மேருமலை ஒத்த குமரமலையின்கண் எழுந்தருளிய முருகனுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

## பொழிப்பு

கனி ஒன்றினைக் கொடுக்கும் சிவனை விரும்பித் தும்பிக்கையுடைய யானை முகக்கடவுளுடன் பிறந்து விளங்கும் நற்குணக்கடலாம் முருகனக்கு ஒப்பாகி, அளவிறந்த காமக் கடலில் மூழ்கி முன்னம் ஒருநாள் தினைப்புனம் காக்கும் பொன்னாலாகிய பூங்கொடி போன்று சிற்றிடையுடைய வள்ளியின்மேல் மயக்கம் கொண்டு வளைந்த வில்லைக் கையில் ஏந்தி வேடன் வடிவில் பேரொளி பிழம்பாய் மாறி உலகம் போற்ற வலம் வருதலால் (கனி ஒன்றினைக் கொடுக்கும் சிவனை விரும்பித் தும்பிக்கையுடைய யானைமுகக் கடவுளுடன் தந்த வடிவில் பிறந்து சிறப்புறக் கிழக்கு திசையில் தோன்றி மேலைக் கடலில் மூழ்கி (அல்லது) பேராசைப்பிணியாம் காமக் கடலில் மூழ்கி) முன்பொரு நாளில் சோலைகளுக்கு இடையில் சென்று பொன்னாலாகிய பூங்கொடி போன்று சிற்றிடையுடைய குருவின் மனைவிமேல் மயக்கம் கொண்டு அதனால் கொடிய சாபத்திற்காளாகி அவ்விடம் விட்டுக் கொடியவன் என்றும் பெயரோடு விலகிச் சென்று நிலவொளி வடிவாய் உலகம் போற்ற

வருதலால்) முருகன் தன்னை ஒப்பாய் என்றே உன்னைச் சுட்டிக்காட்டி வாவா என்று அழைக்கின்ற நிலையில் நீ தனியன் ஆகிவிட்டோம் என்று தாழ்வு மனப்பான்மையில் இன்றும் வாராது காலம் தாழ்த்துவதன் என்ன காரணம் சொல்வாயாக. நாளும் தம் அடியார் திருவுள்ளத்துத்தன் திருவடித்தாமரையுடன் வீற்றிருப்பானுடன் அம்புலியே விளையாட வருவாயாக. அழகானவன் அகன்ற மேருமலை ஒத்த குமரமலையின் கண் எழுந்தருளிய முருகனுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

இப்பாடலில் பாட்டுடைத் தலைவன் இன் சொற்கூறி நிலவைத் தன்னுடன் விளையாடவரும்படி அழைப்பதாக அமைந்தது; இரட்டுற மொழிதல் எனும் அணியின் பாற்பட்டதாகும். இப்பாடலில் வனம், சிற்றிடைச்சி, கொடுஞ் சாபம், மண்டலம் என்பன செம்மொழிச் சிலேடைகள் ஆகும். மற்றும் குணவாரி (குணம் + வாரி; குணக்கு + வாரி), மேலாசையம் கடல் = (மேல் + ஆசை + அம் + கடல்; மேற்கு + ஆசு + ஐயம் + கடல்), அங்கிராத (அம்கிராத; அங்கு + இராத) எனும் சொற் களைப் பிரிமொழிச் சிலேடையில் பிரித்துப் பொருள் கொள்க.

## அம்புலி 3

கண்டபே ரண்டத்தி னுலவிலரு வாயிவன
கண்டவெளி யுருவா னவன்
கண்ணுதன் முடிக்கண் கிடப்பையம் முடியிவன்
காறுவைத் தாடுமிட மாம்
துண்டவெண் பிறையெனச் கிளர்வையெவ ரினுமிக்க
தூயபரி பூரண னிவன்
சுகதுக்க மனவரத முடையனீ யினையற்கொர்
சுகதுக்க மென்றுமிலை யா
லெண்டருஞ் சோடச கலைக்குமீ றுடையனீ
யெண்ணில்கலை முழுது முள்ளா
னிரவினித் தந்திரிவை யிவனிராப் பகலற்ற
விடமுறைந் தருள்வ னதனா
லண்டர்பணி கின்றவனை நேரா யழைக்கினிவ
னம்புலீ யாட வாவே
யனைகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே.

*பதவுரை*

கண்ட பேரண்டத்தின் உலவி வருவாய் = நிலவே! நீ அகன்ற வான மண்டலத்தில் உலவி வருவாய், இவன் அகண்ட வெளியுருவானவன் = ஆனால் பாட்டுடைத் தலைவனோ அந்த அகன்ற வான மண்டலத்தையே தன் உருவாய் உடையன், கண்ணுதல் முடிக்கண் கிடப்பை = கண்ணுதற் கடவுளின் முடிமீது இருப்பாய், அம்முடி இவன் கால் துவைத்து ஆடும் இடமாம் = அம்முடியோ எங்கள் பாட்டுடைத் தலைவன் காலால் மிதித்து விளையாடுமிடமாகும், துண்ட வெண்பிறையெனக் கிளர்வை = முழுமையற்ற வெள்ளிய தேய்பிறையாய் விளங்குவாய், எவரினும் மிக்க தூயபரிபூரணன் இவன் = எல்லாரினும் மிகத் தூய முழு வடிவானவன் இவன், சுகதுக்கம் அனவரதமும் உடையன் நீ = இன்ப துன்பங்களை நாளும் உடையன் நீ, இனையற்கு ஒர் சுகதுக்கம் ஒன்று மிலையால் = இத்தன்மையனுக்கு ஒரு இன்ப துன்பமும் இல்லை, எண் அரும் சோடச கலைக்கும் ஈறுடைய நீ = எண்ணப்படும் பதினாறு கலைகளுக்கும் முடிவானவன் நீ, எண்ணில் கலை முழுதும் உள்ளான் = எண்ணற்ற கலைகளில் முழுமையாகவும் உள்ளான், இரவின் நித்தம் திரிவை = இரவில் மட்டும் நாளும் நாளும் திரிவாய், இவன் இராப்பகல் அற்ற இடம் உறைந்து அருள்வான் = இவன் இரவு பகல் அகற்ற இடங்களிலும் வாழ்ந்து உயிர்களுக்கு அருள் செய்வான், அதனால் அண்டர் பணிகின்றவனை = அத்தன்மையான் தேவர்களும் பணிகள் தேத்தும் இவனுடன், நேராய் அழைகின் இவன் அம்புலீயாடவாவே = நேர் நின்று அழக்கின்ற மையினால் இவனுடன் அம்புலியே விளையாட வருவாயாக, அனகன் அகல் மேருநிகர் குமரமலையாளியுடன் அம்புலீயாடவாலே = அழகானவன் அகன்ற மேருமலை ஒத்த குமரமலையின்கண் எழுந்தருளிய முருகனுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

*பொழிப்பு*

நிலவே நீ அகன்ற வான மண்டலத்தில் உலவி வருவாய் ஆனால் பாட்டுடைத் தலைவனோ அந்த அகன்ற வான மண்டலத்தையே தன் உருவாய் உடையன், நீ கண்ணுதற் கடவுளின் முடிமீது இருப்பாய், அம்முடியே எங்கள் பாட்டுடைத் தலைவன் காலால் மிதித்து விளையாடும் இடமாகும். நீ முழுமையற்ற வெள்ளிய தேய்பிறையாய் விளங்குவாய், எல்லாரினும் மிக்க தூய முழுவடிவானவன் இவன், இன்ப

துன்பங்களை நாளும் உடையவன் நீ, இவனுக்கோ இன்ப துன்பம் எதுவும் இல்லை. எண்ணப்படும் பதினாறு கலைகளுக்கும் முடிவானவன் நீ, எண்ணற்ற கலைகளில் முழுமையாகவும் உள்ளான், இரவில் மட்டும் நாளும் திரிவாய்; இவன் இரவு பகல் அற்ற இடங்களிலும் வாழ்ந்து உயிர்களுக்கு அருள் செய்வான் அத்தன்மையான் தேவர்களும் பணிந்தேத்தும் இவனுடன் நேராய் நின்று அழைக்கின்றமையினால் இவனுடன் அம்புலியே விளையாட வருவாயாக. அழகானவன் அகன்ற மேருமலை ஒத்த குமரமலையின்கண் எழுந்தருளிய முருகனுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

### அருஞ்சொற்பொருள்

கண்ட பேரண்டம் = அகண்ட பேரண்டம். முதற்குறை. இலையால் = ஆல் -அசை. பணிகின்றவனை = மூன்றன் உருபுக்கான இடத்தில் இரண்டன் உருபு நின்று அப்பொருள் தந்தமையின் உருபு மயக்கம். இப்பாடல் வேறுபடுத்தல் வகையால் பாட்டுடைத் தலைவன் தன்னுடன் விளையாட வரும்படி நிலவை அழைப்பதாகும்.

## அம்புலி 4

வட்டவடி வத்தம் பரத்துலா யொண்கிரண
வருடம் பொழிந்து சிதமார்
மதிக்கலை யுருக்கிநீ ருகுவிப்பை யையனெ
மனக்கலை யுருக்கி விழியிற்
கொட்டமிக் கானந்த பாட்பநீ ரைப்பெருக்
குவனமுத முதவுநா ணீ
கோளுரைத் தொருகோ ளிடர்ப்பட்டை யினையனெக்
கோள்செயிட ருந்தவிர் ப்பன்
உட்டகவி லர்க்கரிய வுருவாயி னானிவற்
கொருசிறிது முறழாய் நித
மும்பர்பதி யைப்புசி தியற்றியணி செயினுமிதை
யொக்குமோ வென்னவழ கார்ந்
கட்டலக் குமிமருவு புல்லைமுரு கேசனுட
னம்புலீ யாட வரவே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வானே.

பதவுரை

வட்ட வடிவத்து அம்பரத்துலாய் = வட்ட வடிவமாய் அமைந்து அந்தரத்தில் உலவி, ஒண்கிரண வருடம் பொழிந்து = ஒளிக்கதிர் (நிலவு) மழையைப் பெய்து, சிதமார் மதிக்கலையுருக்கி நீர் உகுவிப்பை = வெண்மை நிறைந்த முழுமதியாய் நாளும் பதினாறு கலை வடிவுகளும் குறைந்து இறந்து படுவாய் ஐயன் என் மணக்கவலையுருக்கி = எங்கள் தலைவன் முருகன் எம்மனக் கவலைகளை நீக்கி, விழியிற் கொட்டமிக்கு ஆனந்தம் பரப்ப நீரைப் பெருக்குவன் விழியிற் பெருக்கெடுக்கும் மகிழ்வுக் கண்ணீரைப் பெருக்குவன், அமுதம் உதவு நாள் = திருப்பாற்கடல் அமுதத்தை உண்பதற்குத் தகும் அந்நாளில், நீ ஒரு கோளுரைத்து = நீ அரக்கர் ஒருவன் தேவவடிவில் அமுதம் பெற்றமையைச் சுட்டிக்காட்டி, ஒரு கோள் இடர்ப்பாட்டை = அவ்விருவரில் ஒருவன் தன்னைப்பிடித்துக் கொள்ள (கிரகணம் பிடிப்பது) யினையன் எனக் கோள்செய் இடர்ப்பாட்டை = இத்தன்மையில் துன்பப்படுபவன் என்று அக்கோள் தரும் துன்பத்தை, தவிர்ப்பன் = நீக்குவான். உள் தகவு இலர்க்கு அரிய உருவாயினான் = மனம் ஒருநிலைப்படாதவர்களுக்குக் காணற்கரிய வடிவமுடையன். இவற்கு ஒரு சிறிதும் உறழாய் = இவனுக்கு ஒருசிறிதும் ஒப்பாக மாட்டாய். நிதம் உம்பர் பதியை புதிது இயற்றி அணி செயினும் = நாளும் வானுலகை புதிய முறையில் மாற்றியமைத்து அழகு செய்தாலும், இதை ஒக்குமோ என்ன அழார்ந்து அட்ட லக்குமி மருவு புல்லை முருகேசனுடன் அம்புலி ஆடவாவே = இதற்கு இணையாகாது என்று கூறுமாறு அழகுமிகுந்து எட்டு திருமகள்களும் இணைந்து வாழும் திருப்புல்லைத் திருநகர் முருகே சனுடன் நிலவே விளையாட வருவாயாக. யகன் அகல் மேரு நிகர் குமரமலை ஆளியுடன் அம்புலீ யாடவாவே = அழகானவன் அகன்ற மேருமலைக்கு ஒப்பான குமரமலைக்கண் வீற்றிருக்கும் யாளியனையானுடன் நிலவே விளையாட வருவாயாக (எ.று.).

பொழிப்பு

வட்டவடிவமாய் அமைந்து அந்தரத்தில் உலவி ஒளிக்கதிர் !நிலவு) மழையைப் பெய்து வெண்மை நிறைந்த முழுமதியாய் நாளும் பதினாறு கலைவடிவுகளும் குறைந்து இறந்துபடுவாய். எங்கள் தலைவன் முருகன் எம்மனக்கவலைகளை நீக்கி, விழியில் பெருக்கெடுக்கும் மகிழ்வுக் கண்ணீரைப் பெருக்குவன், திருப்பாற்கடல் அமுதத்தை உண்பதற்குத் தகும் அந்நாளில் நீ

அரக்கன் ஒருவன் தேவவடிவில் அமுதம் பெற்றமையைச் சுட்டிக்காட்டி, அவன் தன்னைப் பிடித்துக் கொள்ள (கிரகணம் பிடிப்பது) இத்தன்மையில் துன்பப்படுபவன் என்று அக்கோள் தரும் துன்பத்தை நீக்குவான், மனம் ஒருநிலைப்படாத வர்கட்குப் காணற்கரிய வடிவமுடையவன்; இவனுக்கு ஒரு சிறிதும் ஒப்பாக மாட்டாய் (எனவே) நாளும் வானுலகைப் புதிய முறையில் மாற்றியமைத்து அழகு செய்தாலும் இதற்கு இணையாகாது என்று கூறுமாறு அழகு மிகுந்து எட்டுத் திருமகள்களும் இணை வாழும் திருப்புல்லைத் திருநகர் முருகேசனுடன் நிலவே விளையாட வருவாயாக; அழகானவன்அகன்ற மேருமலைக்கு ஒப்பான குமரமலைக்கண் விற்றிருக்கும் யாளியனையானுடன் நிலவே விளையாட வருவாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

இப்பாடல் வேறுபடுத்தல் வகையால் கூறிப் பாட்டுடைத் தலைவனுடன் விளையாட வரும்படி நிலவை அழைப்பதாகும். இடர்ப்பாட்டை நீக்குவன் என்பதால் ஈதல் முறையில் அழைப்பது எனினுமாம். அரிய உருவாயினான் என்பதனால் ஒருத்தல் முறைமையினும் அழைத்தல் எனினுமாம்.

### அம்புலி 5

குலவுநின் மரபினுக் கிரவமுதி யாவரு
குலாபிமா னங்கரு தியோ
குடிலத்தி னத்தன்வேய் மாலையின் விசிட்டமிக்
கூர்ங்கண்ணி யெனவுன் னியோ
வுலகுபுகழ் புகழினுக் குவமிக்கும் வத்துவென
வோகைநெஞ் சிற்பொங்கி யோ
வுபயநா யகியர்தந் திருமுகத் திற்கிடந்
தொளிருவா மதியென் னவோ
சலதியை யுழுந்தெலைத் தாகப்பு ரிந்துண்ட
தமிழ்முனிக் கருளுமெங் கள்
சற்குருக டாட்சம்வைத் துனைவருக வென்றனன்
சமையுமா தவமென் கொலோ
வலகையுயிர் முலையினெறி நுகருமரி மருகனுட
னம்புலீ யாட வாவே
யனகனகள் மேருநிகர் குமரமலை யானியுட
னம்புலீ யாட வாவே.

### பதவுரை

குலவுநின் மரபின் உக்கிர வழுதி யாவரும் விளங்கும் நினது மதிமரபின் உக்கிரப் பெருவழுதி உள்ளிட்ட யாவரும், குலாபிமானம் கருதியோ, உனை வருக என்றனன் = தோன்றிய குலத்தின் தோன்றிய தன் மானம் நினைந்தோ உன்னை வருக என்று அழைத்தனன், குடிலத்தின் அத்தன் வேய் மாலையின் விசிட்டமிக் கூர்ங்கண்ணி என வுண்ணியோ உனை வருக என்று அழைத்தனன் = சடாமுடித் தலைவன் சிவன் அணிந்த தலை மாலையின் நற்குணம் மிகுந்த கண்ணி என நினைந்தோ **உன்னை வருக என்று அழைத்தனன்** உலகு புகழ் புகழினுக்கு உவமிக்கும் வத்துவென ஓகை நெஞ்சிற் பொங்கியோ உனை வருக என்றனன் = நிறைநீர நீரவர் கேண்மை பிறை என உலகுபுகழ் புகழினுக்கு உவமையாய் விளங்கும் பொருளாய் நீ விளங்குதலால் உன்மீது தன் நெஞ்சில் மகிழ்வுமிகப் பெருகியோ உன்னை வருக என்று அழைத்தனன், உபய நாயகியர் தம்திருமுகத்திற் கிடந்து ஒளிர் உவாமதி என்னவோ உனை வருக என்றழைத்தனன் = இருமனைவியர்தம் முகமாகி இருந்து ஒளிரும் முழுமதி என நினைந்தோ உன்னை வருக என்று அழைத்தனன், சலதியை உழுந்து எலைதாகப் புரிந்து உண்ட தமிழ் முனிக்கருளும் = கடலைக் கமண்டலத்தில் விழுந்து பகலின் இளகிய தன்மை யுடையதாய்ச் செய்து உட்கொண்ட அகத்திய முனிவனுக்கு அருள் செய்த, எங்கள் சற்குரு கடாட்சம் வைத்து உனை வருக என்றழைத்தனன் = எங்கள் சற்குருவாகிய முருகன் அருள் வைத்து உன்னை வருக என்று அழைத்தனன், சமையுமாதவம் என்கொலோ = நீ புரிந்த பெருந்தவம் யாதோ? அலகையுயிர் முலையின் எறி நுகரும் அரி மருகனுடன் அம்புலீயாடவாவே = பேயின் உயிரை அதன் முலைவாய் வாய்வைத்துக் கடித்து அழித்த நுகர்தற்கடவுள் திருமால் மருகன் முருகன் தன்னுடன் அம்புலியே விளையாட வருவாயாக அனகன் அசல் மேருநிகர் குமரிமலையாளியுடன் அம்புலீயாட வாவே = அழகானவன், அகன்ற மேருமலை ஒத்த குமரமலைக் கண் வீற்றிருந்தருளிய யாளியனையானுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

### பொழிப்பு

விளங்கும் நினது மதிமரபின் உக்கிரப் பெருவழுதி உள்ளிட்ட யாவரும் தோன்றிய குலத்தில் தோன்றிய தன்மானாம் நினைத்தோ, சடாமுடித் தலைவன் சிவன் அணிந்த தலைமாலையின் நற்குணம் மிகுந்த கண்ணி என நினைந்தோ,

நிறைநீர நீரவர் கேண்மை பிறை என உலகுபுகழ் புகழினுக்கு உவமையாய் விளங்கும் பொருளாய் நீ விளங்குதலால் உன்மீது தன் நெஞ்சில் மகிழ்வு மிகப்பெருகியோ, இரு மனைவியர் தம் முகமாகி இருந்து ஒளிரும் முழுமதி என நினைந்தோ, கடலை கமண்டலத்தில் விழுந்து பகலில் இளகிய தன்மையதாய்ச் செய்து உட்கொண்ட அகத்திய முனிவனுக்கு அருள் செய்த எங்கள் சற்குருவாகிய முருகன் அருள் வைத்து உன்னை வருக என்றழைத்தனன். நீ புரிந்த பெருந்தவம் யாதோ? பேயின் உயிரை அதன் முலைவாய் வாய்வைத்துக் குடித்து அழித்த காத்தற்கடவுள் திருமால் மருகன் முருகன் தன்னுடன் அம்புலியே விளையாட வருவாயாக; அழகானவன் அகன்ற மேருமலை ஒத்த குமர மலைக்கண் வீற்றிருந்தருளிய யாளியனையானுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

### அருஞ்சொற்பொருள்

சமையும் மாதவியும் என்கொலோ எனப் புகழ்ந்து அழைத்தலின் இன்சொற் கூறல் எனும் முறைமையின் நிலவைத் தன்னுடன் விளையாட வரும்படி அழைப்பதாகும். பூதகி இவள் கண்ணபிரானைக் கொல்ல ஏவப்பட்ட பூதம். கண்ணன் அதனை அறிந்து, தாய்ப்பால் தரவந்த அவளைக் கொங்கை முறித்துக் கொன்றதாகப் புராணம் கூறும்.

### அம்புலி 6

களங்கஎென் றுலகோ ருனைப்புகல்வ ரிவனெக்
களங்கமு மகன்றதூ யோன்
கள்வனிற் குடிகொண்டு பணிவாயுண் மெலிவையக்
கள்வனிவன் மனையர் சானு
வளங்குல வெழிற்கொல்கி டுங் குகுவி னின்கலை
வழிப்பறி பறிக்கவொவ் வோர்
மதியிலா தவர்தமை யடுப்பையிவ னுயிர்தொறு
மதிக்குமதி யானவன் காண்
விளங்கர சிளங்குமார் மறுகுலா வருமிரத
மெல்லியர் பிணங்கி நீத்து
வீசுசெம் மணியணிப் பணிகளை யறைப்பவவை
மேயசெந் துகளதாய் விண்
ணளந்து செவ்வானநிக ரும்புல்லை முருகனுட
னம்புலீ யாட வாவே

யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாடவாவே.

பதவுரை

களங்கன் என்று உலகோர் உனைப்புகல்வர் = களங்கம் உடையவன் என்று உலகோர் உன்னை இகழ்ந்து சொல்வர். இவன் எக்களங்கமும் அற்ற தூயோன் = இவனோ எவ்வகைக் களங்கமும் இல்லாது விலகிய தூயவன். கள்வன் இல் குடிகொண்டு பணிவாயுள் மெலிவை = கற்கடகவீட்டில் குடிகொண்டு பாம்பின் வாயப்பட்டுக் குறைவை, அக்கள்வன் இவன் மனையர் சானும் = அந்தக் கற்கடகம் இவனது படை வீடுகளாய மலையாகும். வளங்குலவு எழிற்கொல்கிடும் குகுவின் கலை வழிப்பறி பறிக்க ஒவ்வோர் மதியிலாதவர்தமை அடுப்பை = வளப்பம் காட்டும் எழிலால் அமாவாசையன்று நீக்க நீ ஒவ்வொருவராய் மதிநுட்பம் மிக்கவர்களைச் சென்றுயாசிப்பாய், இவன் உயிர்தொறும் மதிக்கும் மதியானவன் காண் = இவன் உயிர்கள் யாவும் மதிக்கும் சிறந்த அறிவானவன் காண்பாயாக. விளங்கு அரசிளங்குமரர் மறுகிலா வரும் இரதம் மெல்லியர் பிணங்கி = சிறந்த அரசிளங் குமரர் தெருக்களில் உலாவருதலைத் தேரில் கண்ட பெண்கள் அவர்களுடன் பிணங்கி நின்று, நீத்து வீசு செம்மணியணி பணிகளை யறைப்ப = கழற்றி வீசி எறிந்த செம்மணிகளால் ஆகிய அணிகலன்களை யறைப்ப அத்தேர்க்கால்கள் அவை மேய செந்துக்கள் விண் அளந்து செவ்வானம் நிகழும் புல்லை = அவை படிய அச்செந்துகள்களே விண்பரந்து செவ்வானமாய் விளங்கும் திருப்புல்லைத் திருநகரின், முருகனுடன் அம்புலீயாடவாவே = வீற்றிருக்கும் முருகனுடன் அம்புலியே விளையாட வருவாயாக. அனகன் அகல் மேருநிகர் குமரமலை யாளியுடன் அம்புலீயாட வாவே = அழகானவன் அகன்ற மேருமலைக்கு ஒப்பான குமரமலைக்கண் வீற்றிருக்கும் யளியனையானுடன் அம்புலியே விளையாட வருவாயக (எ.று.).

பொழிப்பு

களங்கம் உடையவன் என்று உலகோர் உன்னை இகழ்ந்துசொல்வர். இவனோ எவ்வகைக் களங்கமும் இல்லாது விலகிய தூயவன் கற்கடக வீட்டில் குடிகொண்டு பாம்பின் வாயப்பட்டுக் குறைவை, அந்தக் கற்கடகம் இவனது படை வீடுகளான மலைகளாகும். வளப்பம் காட்டும் எழிலை

அமாவாசையன்று நீக்க நீ ஒவ்வொருவராய் மதிநுட்பம் மிக்கவர்களைச் சென்று யாசிப்பாய் இவன் உயிர்கள் யாவும் மதிக்கும் அறிவானவன் காண்பாயாக. சிறந்த அரசிளங் குமரர் தெருக்களில் உலா வருதலைத் தேரில் கண்ட பெண்கள் அவர்களுடன் பிணங்கி நின்று கழற்றி வீசி எறிந்த செம்மணிகளால் ஆகிய அணிகலன்களை அத்தேர்க் கால்கள் அறைப்ப அவை படிய அச்செந்துகள்களே விண்பரந்து செவ்வாமையாய் விளங்கும் திருப்புல்லை திருநகரின் முருகனுடன் அம்புலியே விளையாட வருவாயாக. அழகானவன் அகன்ற மேருமலை ஒத்த குமரமலைக்கண் வீற்றிருக்கும் யாளி யனையானுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

### அருஞ்சொற்பொருள்

கள்வன் இல் = கற்கடக வீடு, குகு = அமாவாசை. இப்பாடல் வேறுபடுத்தல் வகையில் அம்புலியை அழைப்பதாக அமைந்தது

### அம்புலி 7

முப்பவன மன்றியெப் புவனமு நினக்கேவன்
முறைசெயச் செய்தருளி நின்
மூளியுரு மாறியென் றென்றைக்கு மீனிகொளு
முழுமதி யெனப்புரி குலன்
செப்பினொரு பரிகார மில்குருத் துரோகமுந்
தீரக் கடைக்கணிப் பன்
றிக்கெங்கு மோடித் திரிந்துழலு நின்றொழிற்
சிரமந்த விர்த்தாளு வன்
துப்புறமு மேனிப் பரன்குருஉச் சடிலந்
துலங்கிவாழ் பதமுமொரு காற்
சொற்றவறி நீப்பினுந் தணவா துறற்குறுதி
சொற்றிடுவ னாதலா லென்
னப்பனினை வாவென விளித்தபொழு தேயிவனொ
டம்புலீ யாட வாவே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே.

### பதவுரை

முப்புவனம் அன்றி எப்புவனமும் நினக்கு = வல்முறை செயச் செய்தருளி = மூவுலகமே யன்றி மற்று எவ்வுலகமும்

நினக்கு கட்டளையேற்றுப் பணி செய்யச் செய்து, நின் மூளியுருமாறி என்றென்றைக்கும் மீளிகொளும் முழுமதியனெப் புரிகுவன் = நினது உறுப்புக்குறை மாறி என்றென்றைக்கும் மீட்பினைச் செய்து முழுமதியெனவே செய்வான், செப்பின் ஒரு பரிகாரல் குருத்துரோகமும் தீரக் கடைக்கணிப்பன் = கூறுவதாயின் ஒரு கழுவாயுமற்ற உனது குருவிற்குச் செய்நன்றி கொன்ற தீமையையும் மாற்றி அருள் செய்வான், திக்கு எங்கும் ஓடித்திரிந்து உழலும் நின்தொழில் சிரமம் தவிர்த்து ஆளுவான் = எத்திசையும் ஓடித் திரிந்து வருந்தும் உனது தொழில் துன்பம் நீக்கி நின்னை ஆட்கொள்ளுவான், துப்புறழ் மேனிபரன் குரூஉ சடிலம் துலங்கி வாழ்பதமும் ஒருகால் சொல் தவறி நீப்பினும் = பவழம் போன்ற செம்மேனி எம்மான் தன் மணம் மிக்க சடைமுடியில் விளங்கி வாழ்கின்ற நிலையின் நீக்கி, ஒருகால் சொல்தவறி நீப்பினும் தணவாதுறற்கு உறுதி சொற்றிடுவன் ஆதலால், பிரியாமல் இருப்பதற்கு உறுதி மொழி கூறிடுவான் ஆதலால், என் அப்பன் நினை வாவென அழைக்கின்ற பொழுதே இவனோடு அம்புலீயாடவாவே = என் வள்ளல் நின்னை "வா" வென்று அழைக்கும்போதே இவனோடு நிலவே விளையாட வருவாயாக; அனகன் அகல் மேருநிகர் குமரமலை யாளியுடன் அம்புலீயா டவாவே = அழகானவன், அகன்ற மேருமலை ஒத்த குமரமலைக் கண் வீற்றிருந்தருளும் யாளி யனையானுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

## பொழிப்பு

மூவுலகமே அன்றி மற்று எவ்வுலகமும் நினக்குக் கட்டளையேற்றுப் பணி செய்யச் செய்து நினது உறுப்புக் குறை மாறி என்றென்றைக்கும் மீட்பினைச் செய்து முழுமதி எனவே செய்வான் கூறுவதாயின் ஒரு கழுவாயுமற்ற உனது குருவிற்குச் செய்நன்றி கொன்ற தீமையையும் மாற்றி அருள் செய்வான், எத்திசையும் ஓடித்திரிந்து வருந்தும் உனது தொழில் துன்பம் நீக்கி நின்னை ஆட்கொள்ளுவான், பவழம் போன்ற செம்மேனி எம்மான் தன் மணமிக்க சடைமுடியில் விளங்கி வாழ்கின்ற நிலையின் நீக்கி ஒருகால் சொல் தவறி நீப்பினும் பிரியாமல் இருப்பதற்கு உறுதிமொழி கூறிடுவான் ஆதலால் என் வள்ளல் நின்னை "வா"வென்று அழைக்கும் போதே இவனோடு நிலவே விளையாட வருவாயாக; அழகானவன் அகன்ற மேருமலை ஒத்த குமரமலையாளியுடன் அம்புலி விளையாட வருவாயாக (எ.று.).

### அருஞ்சொற்பொருள்

இப்பாடல் ஈதல் கூறி அதன் வாயிலாக நிலைப் பாட்டுடைத் தலைவனுடன் விளையாட வரும்படி அழைப்ப தாகும்.

## அம்புலி 8

நன்மையிவை தீதிவை யெனும்பகுத் தறிவின்மை
நாடினைகொ லிவனருள் பெறின்
ராசயோ கம்பெறுவை கயரோகி யென்னுமொரு
நாமமுந் தவிர்வை யென்றுந்
தொன்மையா வருமசுர பகையச்ச மியாவுந்
துரந்திடுவை நின்னின் மிக்கார்
சொல்லின்வே றெவணுமிலை யதிசயத் தம்பந்
துலங்கிட நிறீஇயா ளுவாய்
பன்மையுள வேதோப நிடதங்க ளன்மைமொழி
பற்பல பகர்ந்து பரவிப்
பற்றுத லுறாமைகண் டின்னமுந் துருவெங்கள்
பகவன்ற னுறவு வேண்டி
னன்மைநிக ருங்குழற் கொம்பிருவர் பங்கனுட
னம்புலீ யாட வாவே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே.

### பதவுரை

நன்மையிவை தீது இவையெனும் பகுத்தறிவின்மை நாடினை கொல் = நன்மை தீமை இவையிவை யெனப் பிரித்து அறியும் பகுத்தறிவின்மையினை விரும்பினையோ? இவன் அருள்பெறின் இராசயோகம் பெறுவை = இவன் அருளைப் பெற்றால் அரசயோகமும் பெறுவாய், கயரோகியென்னும் ஒரு நாமமும் தவிர்வை = இளைப்பு நோயினன் என்னும் ஒரு பெயரையும் நீக்கிக் கொள்ளுவாய், என்றும் தொன்மையா வரும் அசுர பகை அச்சம் இயாவும் துரந்திடுவை = எக்காலமும் தொன்றுதொட்டு வரும் அசுரர் பகையாம் அச்சம் அனைத்தும் நீக்கிக் கொள்ளுவாய், நின்னின் மிக்கார் சொல்லின் யாருமிலை = உன்னை விடப் பெரியோரை எடுத்துக்காட்டுதற்கு யாவரும் இல்லை. அதிசயத்தம்பம் துலங்கிட நிறீஇ யாளுவாய் = புதிய

பற்றுக்கோடு விளங்கி நனின்று ஆளுவாய், பன்மையுன வேதோப நிடதங்கள் நன்மை மொழி பற்பல பகர்ந்து பரவி = பல்வகைப் பட்ட மறைகளும், அவற்றின் உட்பொருள்களும் இன்மொழி பற்பல பகர்ந்து போற்றியும், பற்றுதல் உறாமைகண்டு இன்னமும் துருவு எங்கள் பகவன்தன் உறவு வேண்டின் நன்மை நிகரும் = அப்பற்றுக் கோட்டினைப் பெற இயலாமை அறிந்து இன்னமும் தேடும் எங்கள் இறைவனது உறவை விரும்பினால் நன்மை அடைவாய், குழற்கொம்பு இருவர் பங்கனுடன் அம்புலீயாட வாவே = வள்ளி தெய்வயானை இருவரைப் பக்கத்திற் கொண்டாருடன் அம்புலியே விளையாட வருவாயாக அனகன் அசல் மேருநிகர் குமரமலை யாளியுடன் அம்புலியாட வாவே = அழகானவன் அகன்ற மேருமலைக்கு ஒப்பான குமர மலைக்கண் வீற்றிருந்தருளும் யாளியனையானுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

## பொழிப்பு

நன்மை தீமை இவையிவையெனப் பகுத்தறியும் பகுத்தறிவின்மையினை விரும்பினையோ? - இவன் அருளைப் பெற்றால் அரசயோகமும் பெறுவாய்; இணைப்பு நோயினன் என்னும் ஒரு பெயரையும் நீக்கிக் கொள்ளுவாய்; எக்காலமும் தொன்றுதொட்டு வரும் அசுரப் பகையாம் அச்சம் அனைத்தும் நீக்கிக் கொள்ளுவாய்; உன்னைவிடப் பெரியோரை எடுத்துக் காட்டுதற்கு யாவரும் இல்லை; புதிய பற்றுக் கோட்டுடன் விளங்கி நின்று ஆளுவாய்; பலவகைப்பட்ட மறைகளும் அவற்றின் உட்பொருள்களும் இன்மொழி பற்பல பகர்ந்து போற்றியும் அப்பற்றுக் கோட்டினைப் பெற இயலாமை அறிந்து இன்னமும் தேடும் எங்கள் இறைவனது. உறவை விரும்பினால் நன்மையடைவாய்; வள்ளி தெய்வயானை இருவரைப் பக்கத்திற் கொண்டாருடன் அம்புலியே விளையாட வருவாயாக; அழகானவன், அகன்ற மேருமலைக்கு ஒப்பான குமரமலைக்கண் வீற்றிருந்தருளும் குமரமலையாளியுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

இப்பாடல் தானம் கூறி தங்கள் பாட்டுடைத் தலைவனுடன் நிலவை விளையாட வரும்படி அழைப்பதாகும். தம்பம் = பற்றுக்கோடு. துருவு = ஆய்.

## அம்புலி 9

உயர்திணைப் பொருளன்றி யஃறிணைப் பொருளுமா
யுடையமுப் பாலு மாகி
யுணர்தன்மை முன்னிலை படர்க்கையா நாமாதி
யுயிர்கள்பற் பலபேத மாய்
மயலுறுந் திணைபா லிடம்வேற்று மைத்தொகையின்
வடிவங் கடந்து மேலாம்
வாசாம கோசரப் பொருளாய பிரமமே
மகிதலத் தன்ப ருய்யப்
புயமாறி ரண்டாறி ரண்டுகரு ணைக்கொண்டல்
பொழிவிழிக் கடைவாரி சம்
பொலிகண் முகத்திருக் குமரனா வருமறைப்
பொருளையறி யாதயிர்க்கு
மயனைநிக ளந்தரித் தனநினையு மாற்றுவ
னம்புலீ யாட வாவே
யனகனகண் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே.

**பதவுரை**

உயர்திணைப் பொருளன்றி = அவன் அவள் அவர் என்றும் உயர்திணைப் பொருள்களாக மட்டுமின்றி, அஃறிணைப் பொருளுமாய் = அது அவை என்னும் அஃறிணைப் பொருள் களாகவும் உடைய முப்பாலுமாகி = மூவுலகங்களிலும் இருந்து, உணர்தன்மை முன்னிலை படர்கையாம் அநாதியுயிர்கள் பற்பல பேதமாய் மயலுறும் = உணரும் தன்மையுடனும் முன்பாக இல்லாத தன்மையுடனும் படர்ந்து செல்லுகையாம் தன்மையில் திக்கற்ற உயிர்கள் யாவும் வேறுவேறான தன்மையில் நின்மீது மயக்கம் கொள்ளும். திணை பால் இடம் வேற்றுமைத் தொகையின் வடிவங்கடந்து மேலாம் = ஐந்திணை ஒழுக்கத்து பால் இடநிலை வேற்றுமைக் கட்டுப்பாட்டின் உண்மைநிலை கடந்து, மேலாம் வாசாம் = மேலான கடவுளாம், அகோசரப் பொருளாய = வியப்பான உயர் பொருளுமாய, பிரமமே = முழுமுதற் பொருளே மகிதலத்து அன்பர் உய்யப் புயம் ஆறிரண்டும் = இந்நிலவுலகத்துத் தன் அன்பர் பிழைக்கத் தோள் பன்னிரண்டு, ஆறிரண்டு கருணைக் கொண்டல் பொழி விழிக்கடை பன்னிரண்டு அருள்மழை பொழியும் கடைக்கண் பார்வையும், வாரிசம் பொலி சண்முகத் திருக்குமரனாக வரும் =

தாமரை மலர்போல் அழகு மிளிரும் ஆறுமுகத்துத் திருக்குமரனா வரும் = தாமரை மலர் போல் அழகு மிளிரும் ஆறுமுகத்துத் திருக்குமரனாக வரும், அருமறைப் பொருளை = அரிய மறையின் பொருளை, அறியாது அயிர்க்கும் அயனை நிகனந் தரித்தனன் அறியாமல் விழிக்கும் அயனை விலங்கிட்டனன், நினையும் மாற்றுவன் = நின்னையும் தளையிடுவான். அம்புலியாடவாவே = அம்புலியே விளையாட வருவாயாக; யனகன் அகல் மேருநிகர் குமரமலையாளியுடன் அம்புலி யாடவாவே = அழகானவன், அகன்ற மேருமலைக் கொப்பான குமரமலைக்கண் வீற்றிருந்தருளும் யாளியனை யானுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

## பொழிப்பு

அவன் அவள் அவர் என்னும் உயர்திணைப் பொருள்களாக மட்டுமன்றி அது அவை என்றும் அஃறிணைப் பொருள்களாகவும் உடையயாய் மூவுலகங்களும் இருந்து உணரும் தன்மையுடனும் முன்பாக இல்லாத தன்மையுடனும் படர்ந்து செல்லுகையாம் தன்மையில் திக்கற்ற உயிர்கள் யாவும் வேறு வேறான தன்மையில் நின்மீது மயக்கம் கொள்ளும். ஐந்திணை ஒழுக்கத்து பால் இடநிலை வேற்றுமைக் கட்டுப் பாட்டின் உண்மைநிலை கடந்து மேலான கடவுளாம் வியப்பான உயர் பொருளுமாய முழுமுதற் பொருளே, இந்நிலவுலகத்துத் தன் அன்பர் பிழைக்கத் தோள் பன்னிரண்டு, பன்னிரண்டு அருள் மழை பொழியும் கடைக்கண் பார்வையும் தாமரை மலர்போல் அழகு மிளரும் ஆறுமுகத்துத் திருக்குமரனாக வரும் அரிய மறையின் பொருளை அறியாமல் விழிக்கும் அயனை விலங்கிட்டனன், நின்னையும் தளையிடுவான். அம்புலியே விளையாட வருக; அழகானவன் அகன்ற மேருமலை ஒப்பான குமரமலைக்கண் வீற்றிருந்தருளும் யாளியனையானுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

இப்பாடல் நிலவை, பாட்டுடைத் தலைவனின் ஒறுக்கும் ஆற்றலைப் புலப்படுத்தி அவனுடன் விளையாட வரும்படி அழைப்பதாகும். இப்பாடலில்உயர்திணை அஃறிணை, முப்பால், திணையால், இட வேற்றுமையை இலக்கண மரபுச் சொற்களை நயம்படப் பயன்படுத்திய திறம் பாராட்டற்குரியது.

## அம்புலி 10

சிறுமதலை யெனவெள்ளி யெக்கழுத் தங்கொடு
திரிந்திவண் வராமை நோக்கித்
திகழுநவ வீரர்களி னொருவனை விடுத்துனைச்
சிக்கெனத் தனிகொணர்ந் தே
நறுமதலை வேணியனும் வந்துபல நயமொழி
நவிற்றினும் வேண்டு கோட
னயவா துனைச்சிறையி லிடுவனஃ தன்றிமா
னரகேச ரிப்படி வமா
யுறுமதலை தன்னின்வந் தாடகனு ரங்கீண்
டுயிர்ப்பலியை வாங்க லொப்ப
வுனதுயிர் குடிக்கவே லொன்றுடைய தாகலா
னொருதர மழைத்தபொழு தே
யறுதமதலை யாகியா றாரன்முலை யுண்டவனொ
டம்புலீ யாட வாவே
யனகனகன் மேருநிகர் குமரமலை யாளியுட
னம்புலீ யாட வாவே.

**பதவுரை**

சிறுமதலை என எண்ணி = சிறுகுழந்தை என்று எண்ணி இகழ்ந்து, எக்கழுத்தம் கொடு = பெரிதும் இறுகிய மனம் கொண்டு, திரிந்து இவண் வாராமை நோக்கி = திரிந்து இங்கே இவனோடு விளையாட வாராமையைக் கண்டு, திகழும் நவவீரர்களில் ஒருவனை விடுத்து = விளங்கும் ஒன்பது வீரர்களில் ஒருவனை அனுப்பி, உனைச் சிக்கெனத் தனிக் கொணர்ந்தே = உன்னை உறுதியாகப் பிடித்துத் தனித்தே கொண்டு வந்து, நறுமதலை வேணியனாம் = மணங்கமழ மதலையின் தந்தை செஞ்சடைக் கடவுளும், வந்து பல நயமொழி நவிற்றினும் = வந்து நின்சார்வாய் நின்னை விடுமாறு இன்மொழி பலவும் கூறினாலும், வேண்டுகோடல் நயவாது = அவ்வேண்டுகோள் விரும்பாது, உனைச் சிறையிடுவன் = உன்னைச் சிறையில் இடுவான். அஃதன்றி = அதுவுமல்லாமல், மான் அரகேசரிப் படிவமாக = மான், பாம்பு, சிங்கம் வடிவமாக, உறும் = செய்யும். மதலை தன்னின் வந்தாடு = மதலை தன்னுடன் வந்து விளையாடுக. அகன்று உரங் நீண்டு = அகன்ற மார்பைப் பிளந்து, உயிர் பலியை வாங்கல் ஒப்ப = உயிர் பலியை வாங்குதலை ஒத்து,

உனது உயிர் குடிக்க வேலொன்று உடையதாகலான் = உன் உயிர் பருக வேலாயுதம் ஒன்றையுடையன் ஆதலால், ஒருதரம் அழைத்த பொழுதே = ஒருமுறை அழைத்ததுமே, யாறுமதலை யாகி = ஆறு குழந்தைகளாகி, ஆறன் முலையுண்டவனோடு = கார்த்திகைப் பெண்களின் முலைப்பால் உண்டவனோடு, அம்புலீயாடவாவே = அம்புலியே விளையாட வருவாயாக; அனகன் அகல் மேருநிகர் குமரமலை யாளியுடன் அம்புலீயாட வாலே = அழகானவன், அகன்ற மேருமலை ஒத்த குமரமலைக் கண் வீற்றிருந்தருளும் யாளிய னையானுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

## பொழிப்பு

சிறு குழந்தை என்று எண்ணி இகழ்ந்து பெரிதும் இறுகிய மனம் கொண்டு திரிந்து இங்கே இவனோடு விளையாட வாராமை கண்டு விளங்கும் ஒன்பது வீரர்களில் ஒருவனை அனுப்பி உன்னை உறுதியாகப் பிடித்துத் தனித்தே கொண்டு வந்து, மணங்கமழும் மதலையின் தந்தை செஞ்சடைக் கட்வுளும் வந்து நின்சார்வாய் நின்னை விடுமாறு இன்மொழிபலவும் கூறினாலும் அவ்வேண்டுகோளை விரும்பாது உன்னைச் சிறையில் இடுவான். அதுவுமல்லாமல் மான், பாம்பு, சிங்கம் வடிவமாகச் செய்யும் மதலை தன்னுடன் வந்து விளையாடு வாயாக. அகன்ற மார்பைப் பிளந்து உயிர்பலியை வாங்கு தலை ஒத்து உன் உயிர் பருக வேலாயுதம் ஒன்றையுடையன் ஆதலால் ஒருமுறை அழைத்ததுமே ஆறு குழந்தைகளாகிக் கார்த்திகைப் பெண்களின் முலைப்பால் உண்டவனோடு அம்புலியே விளையாட வருவாயாக; அழகானவன் அகன்ற மேருமலைக்கு ஒத்த குமரமலைக்கண் வீற்றிருந்தருளும் யாளியனையானுடன் அம்புலியே விளையாட வருவாயாக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

இப்பாடல் பாட்டுடைத் தலைவனுடன் விளையாட வாரா தொழிலின் ஒறுப்பன் வருக என்றழைத்தலின் ஒறுத்தலின் அச்சுறுத்தி அழைத்தலாகும்.

அம்புலிப் பருவம் முற்றிற்று

# சிற்றில் பருவம்

அஃதாவது சிற்றில் இழைக்கும் சிறுமியர் தம் சிற்றிலைச் சிதைக்க வேண்டாவென்று பாட்டுடைக் குழவியை வேண்டும் நிலை" என முன்னர் உரைக்கப்பட்டது.

இதுகாறும் ஆண்பெண் இருபாற் பிள்ளைத் தமிழுக்கும் பொதுவாய ஏழு பருவங்களும் உரைக்கப்பட்டன. இனி ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்கே சிறப்பாக முப்பருவங்களும் உரைப்பாராயிற்று. அவையாவன முறையே சிற்றில் சிதைத்தல், சிறுபறை, சிறுதேர்ப்பருவம் என்பனவாகும். இம்மூன்றனுள் முதலாவதாகச் சிற்றில் பருவம் கூறுவாராயிற்று. எட்டாம் பருவமாகிய இதனைப் பதினேழாம் திங்கள் தொடங்கி நிகழ்வதாகக் கூறுவர்.

## சிற்றில் 1

காவிற் பொலியு மலரரும்பின்
கட்டு நெகிழ்த்துந் தாதளைந்துங்
கானம் புரிந்துஞ் செழியநறாக்
களிகொண் டருந்து மதுகரஞ்சூழ்
பூவிற் பொலியும் படிசிறந்தும்
பொறிவண் டுச்சிட் டக்கலமாப்
புலரா விருளிற் புலர்ந்தலரிப்
போதின் மலர்செம் பதுமமொவ்வாக்
கோவிற் பொலிந்தெம் பிராட்டிதனக்
குவடு மெம்மான் புயத்தனித்திண்
குவடுஞ் சுவடு படவாடல்
குயிற்று மணித்தாண் மலர்நோவத்
தேவிற் பொலியுந் தேவெளியேஞ்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

பதவுரை

காவிற் பொலியும் மலர் அரும்பின் கட்டு நெகிழ்ந்து = சோலையில் விளங்கும் பொருட்டு அரும்பின் இதழ்க் கட்டுகளைத் தளர்வித்து, தாது அளைந்தும் கானம் புரிந்தும் செழிய நறாக்களி கொண்டு அருந்தும் = மகரந்தப் பொடிகளில்

துழாவியும் இசை எழுப்பியும் வளவிய தேன்களி கொண்டு பருகியும், மதுகரம் சூழ் பூவிற் பொலியும்படி சிறந்தும் = தேன் வண்டுகள் சூழ்ந்த பூக்களினால் பெருகிச் சிறந்தும், பொறி வண்டு உச்சிட்ட கலமாப் புவரா இருளில் புலர்ந்து = புள்ளிகளை யுடைய வண்டுகளை உச்சியில் கொண்டு விடியாத இருளில் மலர்ந்துள்ள அலரிப் போதின் மலர் செம்பதுமம் ஒவ்வா = அலரிப் பொகுட்டின் மலரும், செந்தாமரை மலரும் ஒப்பாகாத, கோவிற் பொலிந்து = இறைமையில் சிறந்து விளங்கும் எம்பிராட்டி தனக்குவரும் = எம்தலைவி தன் முலைக்குன்றமும், எம்மான்புயத் தனித்திண் குவடுஞ் சுவடுபட = எம்தலைவன் தோள்களாம் சிறந்த வலிய குன்றுகளும் தழும்புண்டாக, ஆடல் குயற்றும் மணித்தாள் மலர் நோவ = திருவிளையாடல் புரியும் அழகிய திருவடிகள் வருந்த, தேவிற் பொலியும் தேவு = தெய்வங்களில் சிறந்த தெய்வமே, எளியேம் சிறியேம் சிற்றில் சிதையேலே = நாங்கள் எளியவர்கள் சிறியவர்கள் செய்யும் சிற்றின்பச் சிற்றிலை (மணல் வீட்டினை) காலில் அழிக்காது நீங்கியருளுக (எ.று.).

## பொழிப்பு

சோலையில் விளங்கும் பொகுட்டரும்பின் இதழ்க் கட்டுக்களைத் தளர்வித்து மகரந்தப் பொடிகளில் துலாவியும் இசை எழுப்பியும் வளவிய தேன் களிகொண்டு பருகியும் தேன் வண்டுகள் சூழ்ந்த பூக்களினால்பெருகிச் சிறந்தும், புள்ளிகளை யுடைய வண்டுகளை உச்சியில் கொண்டு விடியாத இருளில் மலர்ந்துள்ள அலரிப் பொகுட்டின் மருலரும், செந்தாமரை மலரும் ஒப்பாகாத, இறைமையில் சிறந்து விளங்கும் எம்தலைவி தன் முலைக்குன்றமும், எம் தலைவன் தோள்களாம் சிறந்த வலிய குன்றுகளும் தழும்புண்டாகத் திருவிளையாடல் புரியும் அழகிய திருவடிகள் வருந்த தெய்வங்களில் சிறந்த தெய்வமே நாங்கள் எளியவர்கள் சிறியவர்கள் செய்யும் சிற்றின்பச் சிற்றிலை அழிக்காது. நீங்கி அருளுக. விளங்கும் குமரமலைக் கரசனே நாங்கள் சிறியவர் செய்யும் சிற்றிலை (மணல் வீட்டினை) காலால் அழிக்காது நீங்கி அருளுக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

கோவிற் பொலியும் என்பதனை எம்பிராட்டி என்பதனோடும் எம்மான் என்பதனோடும் இணைத்துப் பொருள் கொள்க. மேலும் பூவிற்பொலியும் படி சிறந்தும், அலரிப்

போதின் மலர், செம்பதுமம் ஒவ்வா என்பவற்றோடும் இயைத்தும் பொருள் காண்க; சிற்றில் = மணல் வீடு. சிதையேல் = ஏல் - முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி. ஏகாரம் - அசை நிலை.

## சிற்றில் 2

இந்தக் கடல்சூழ் புவனமெலா
மெமையே பேதைத் தனமுடையா
ரெனலும் பெண்க ளெனிற்பேயு
மிரங்கு மெனலுஞ் சரதமன்றோ
சந்தத் திருநான் மறைமுடிவே
சாற்றற் கரிய வருள்வடிவே
சாரன் படியர் செயுந்துதியே
தன்னை யுணர்ந்தா டயாநிதியே
யுந்தைக் குரிய சந்ததியே
யுயர்வொப் பிலாத பழம்பதியே
யுபயக் கரங்க ளிடையவனை
யுடையப் புரிந்தே மையவிஃதைச்
சிந்தச் செயினி னருட்கழகோ
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

பதவுரை

இந்தக் கடல்சூழ் புவனமெலாம் எமையே பேதைத்தன முடையார் எனலும் = இந்தக் கடல் சூழ்ந்த உலகம் முழுமையும் எங்களைப் பேதைமைக் குணம் உடையவர் என்று கூறுதலும், பெண்கள் எனிற் பேயும் இரங்குமெனலும் சாதமன்றோ = பெண்பாலார் என்றால் பேயும் இரக்கப்படும் என்று கூறுதலும், உண்மையல்லவா? சந்தத்திரு நான்மறை முடிவே = ஓலமிடும் நான்கு திருமறைகளின் முடிந்த பொருளே, சாற்றற்கரிய அருள் வடிவே = எடுத்து இயம்ப இயலா அரிய அருள் வடிவமே, சார் அன்பு அடியர் செயுந் துதியே = நின்னைச் சார்ந்த அன்புடைய அடியவர்கள் செய்யும் புகழ்ப்பொருளே, தன்னை யுணர்ந்து ஆள் தயாநிதி = நின்தன்னை யுணர்ந்திட எம்மை ஆட்கொளும் அருள் செல்வமே, உந்தைக்கு உரிய சந்ததியே = நின் தந்தைக்குரிய வழித் தோன்றலே, உயர் ஒப்பிலாத பழம் பதியே = மிக்காரும் ஒப்பாரும் இல்லாத முன்னர்த் தோன்றிய தலைவனே, உபய கரங்கள் இடையவனை = இருகைகளை எங்களிடை நீட்டியருள்பவனை,

உடையப் புரிந்தேம் = உடையவர்களாக ஆனானோம். ஐய = ஐயனே, இதைச் சிந்தச் செய்யின் இன்னருட்கு அழகோ = இந்த மணல் வீட்டினை அழியச் செய்யின் அது நினது இனிய அருள் குணத்திற்கு அழகாமோ? சிறியேஞ் சிற்றில் சிதையேலே = நாங்கள் சிறியவர்கள் செய்யும் மணல் வீட்டினைஅழிக்காது நீங்கி அருளுக. திகழும் குமரமலைக்கரசே சிறியேம் சிற்றில் சிதையேலே = விளங்கும் குமரமலைக்கு அரசனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் மணல் வீட்டினைக் காலால் அழிக்காது நீங்கி அருளுக (எ.று.).

## பொழிப்பு

இந்தக் கடல்சூழ்ந்த உலகம் முழுமையும் எங்களைப் பேதை குணம் உடையவர் என்று கூறுதலும், பெண்பாலார் என்றால் பேயும் இரக்கப்படும் என்று கூறுதலும் உண்மை யல்லவா? ஓலமிடும் நான்கு மறைகளின் முடிந்த பொருளே, எடுத்தியம்ப இயலா அரிய அருள் வடிவமே, நின்னைச் சார்ந்த அன்புடைய அடியவர்கள் செய்யும் புகழ்ப் பொருளே, நின் தன்னை யுணர்ந்திட எம்மை ஆட்கொள்ளும் அருட் செல்வமே, நின் தந்தைக்குரிய வழித்தோன்றலே, மிக்காரும் ஒப்பாரும் இல்லாத முன்னர்த் தோன்றிய தலைவனே, இருகைகளை எங்களிடை நீட்டி அருள்பவனை உடையவர்களாக ஆளானோம் ஐயனே; இந்த மணல் வீட்டினை அழியச் செய்யின் அது நினது இனிய அருள் குணத்திற்கு அழகாகுமா? நாங்கள் சிறியவர்கள் செய்யும் மணல் வீட்டினை அழிக்காது நீங்கி அருளுக; விளங்கும் குமரமலைக்கு அரசனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் மணல் வீட்டினைக் காலால் அழிக்காது நீங்கி அருள்வாயாக (எ.று.).

### சிற்றில் 3

பேய்த்தேர் நிலையின் பிரபஞ்சப்
பித்தைத் துடைத்துன் சரண்மலரே
பேணுந் தொண்டர் பழவினையாம்
பிணியைத் தணிக்கு மருமருந்தே
வேய்த்தோ ளுமைசீ ராட்டிநிதம்
விரும்புங் கரும்பே மகபதியான்
மிலைச்சும் பொற்பூந் தாரணிந்த
விறற்சிங் கேறே யமைக்கவொணா
வாய்த்தான் சமைந்த செழும்பாகே
வடிவேல் விடுத்துச் சூர்மாவின்

மறுவில் வாழ்வும் புயவலியு
மணித்தேர் வலியும் பின்வாங்கச்
சீய்த்தே ழகத்தா ரோகணித்தோய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில்சிதையேலே.

பதவுரை

பேய்த்தேர் நிலையின் = கானல்நீர் தன்மையினால், பிரபஞ்சப் பித்தைத் துடைத்து = இவ்வுலக மயக்கத்தை அழித்து, உன் சரணமலரே பேணும் தொண்டர் பழவினையாம் பிணியைத் தணிக்கும் அருமருந்தே = நினது திருவடி மலரைப் போற்றிடும் திருத் தொண்டர்களின் இருவினைப் பிணிகளையும் போக்கும் அரிய மருந்துப் பொருளே, வேய்த்தோள் உமை சீராட்டி = மூங்கில் போன்ற தோளையுடைய உமையம்மையால் சீராட்டப் பெற்று, நிதம் விரும்பும் கரும்பே = நாளும் விரும்பும் இனிய கரும்பானவனே மதிபதியான் மிலைச்சும் பொற்பூந் தாரணிந்த விறற்சிங்கேறே = இந்திரன் அணியும் பொன்னாலாகிய பூக்களாலாகிய மாலையணிந்த வெற்றிச் சிங்க ஏறே, அமைக்க வொணா வாய்த்தான் சமைத்த செழும்பாகே = சமைக்க முடியாத ஆனால் வாய்ப்புடையான் ஒருவன் சமைத்த செழும்பாகான வனே, வடிவேல் விடுத்துச் சூரபன்மாவின் மறுவில் வாழ்வும் = வடிவேல் செலுத்திச் சூரபன்மனின் குற்றமுடைய வாழ்வும், புயவலியும் மணித்தேர் வலியும் = தோள் வலியும் சிறந்த தேர்வலியும், பின் வாங்கச் சீய்த்து ஏழகத்து ஆரோகணித் தோய் = பின் வாங்குமாறு அழித்து திருவேரகத்து (சுவாமிமலை) எழுந்தருளியவனே! சிறியேஞ் சிற்றில் சிதையேலே = நாங்கள் சிறியவர்கள் செய்யும் மணல் வீட்டினை அழிக்காது நீங்கி யருளுக. திகழும் குமரமலைக்கரசே சிறியேம் சிற்றில் சிதையேலே = விளங்கும் குமரமலைக்கு அரசனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் மணல்வீட்டினைக் காலால் அழிக்காது நீங்கியருளுக.

பொழிப்பு

கானல் நீர் தன்மையினால் இவ்வுலக மயக்கத்தையழித்து நினது திருவடி மலரைப் போற்றிடும் திருத்தொண்டர்களின் இருவினைப் பிணிகளையும் போக்கும் அரிய மருந்துப் பொருளே, மூங்கில் போன்ற தோள்களையுடைய உமையம் மையால் சீராட்டப் பெற்று நாளும் விரும்பும் இனிய கரும்பான

வனே, இந்திரன் அணியும் பொன்னாலாகிய பூக்களால் ஆகிய மாலையணிந்த வெற்றிச் சிங்க ஏறே' சமைக்க முடியாத ஆனால் வாய்ப்புடையான் ஒருவன் சமைத்த செழும்பாகானவனே, வடிவேல் விடுத்துச் சூரபன் பின்வாங்குமாறு அழித்து திருவேரகத்து (சுவாமிமலை) எழுந்தருளியவனே, நாங்கள் சிறியவர்கள் செய்யும் மணல்வீட்டினை அழிக்காது நீங்கி அருளுக. விளங்கும் குமரமலைக்கு அரசனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் மணல்வீட்டினைக் காலால் அழிக்காது நீங்கி அருளுக (எ.று.).

## அருஞ்சொற்பொருள்

பேய்த்தேர் = கானல்நீர்

### சிற்றில் 4

முனந்தத் தைய தையவென
முரணிற் கெழுமு முயலகன்றன்
முதுகிற் புலியும் பதஞ்சலிமா
முனியுங் காணப் பொதுநடஞ்செய்
தனந்தப் பணியோ டிலகியவா
ளனந்தம் பணியும் புனைந்தடியா
ரனந்தம் பணிக்கே யருள்புரிய
மம்மான் மதலாய் பொய்மானா
வனந்தத் துறச்சென் மாரீசன்
மறுகத் தெறுமான் மருமானே
வணக்குஞ் சலதி சுவறிடவே
வடிவேல் விடுத்த பெருமானே
தினந்தத் தைகள்சூழ் பொழிற்புல்லைத்
தேவே சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

## பதவுரை

முனம் தத்தைய 'தையவென முரணிற் கெழுமும் முயலகன் தன் முதுகிற் புலியும் பதஞ்சலி மாமுனியும் காணப் பொது நடஞ்செய்து = முன்பு தத்தைய தைய என மாறுபாடுமிக்க முயலகன் எனும் அரக்கன் முதுகில் திருகோட்புலியும் பதஞ்சலி மாமுனியுங் காணுமாறு பொதுவில் நடனம் செய்தும், அணிந்தப் பணியோடு இலகியவாளன் நந்து அம்பு அணியும் புனைந்து

அடியார் அனந்தம் பணிக்கே அருள் புரியும் = நிறைந்த பாம்பு களோடு விளங்கிய புகழாளன் நந்தும் அம்பும் அணிகலன்களும் அணிந்து அடியார் பலர் பணிவிடைக்கே அருள் புரியும், அம்மான் மதலாய் = சிவனின் மகனே, பொய் மானா வனம் தத்துறச் செல் மாரீசன் மறுகத் தெறுமான் மருமானே = பொய் மான் வடிவில் காட்டகத்து தாவிச் செல்லும் மாரீசன் நெருங்க அவனோடு மாறு கொள்ளும் திருமால் மருமகனே, வணக்கும் சலதி சுவறிடவே வடிவேல் விடுத்த பெருமானே = பெருகும் கடல் வற்றிட வடிவேல் செலுத்திய உக்கிரப் பெருவழுதிப் பெருமானே, தினந்தத்தைகள் சூழ்பொழிற் புல்லைத் தேவே சிற்றில் சிதையேலே = நாளும் பச்சைக் கிளிகள் சூழும்படியான பசுஞ்சோலைகள் நிறைந்த திருப்புல்லை இறைவனே எங்கள் சிறிய மணல் வீட்டினைக் காலால் சிதைக்காது நீங்கி அருளுக.

## பொழிப்பு

முன்பு தத்தைய தைய என மாறுபாடு மிக்க முயலகன் எனும் அரக்கன் முதுகில் திருகோட்புலியும் பதஞ்சலி மாமுனியும் காணுமாறு பொதுவில் நடனம் செய்து, நிறைந்த பாம்புகளோடு விளங்கிய புகழாளன் நந்தும் அம்பும் அணிகலன்களும் அணிந்து அடியார் பலர் பணி விடைக்கே அருள் புரியும் சிவனின் மகனே, பொய்மான் வடிவில் காட்டகத்துத் தாவிச் செல்லும் மாரீசன் நெருங்க அவனோடு மாறு கொள்ளும் திருமால் மருமகனே, பெருகிடும் கடல் வற்றிட வடிவேல் செலுத்திய உக்கிரப் பெருவழுதிப் பெருமானே நாளும் பச்சைக் கிளிகள் சூழ்ந்த பசுஞ்சோலைகள் நிறைந்த திருப்புல்லை இறைவனே எங்கள் சிறிய மணல்வீட்டினைக் காலால் அழிக்காது நீங்கி அருளுக. திகழும் குமரமலைக்கரசனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் மணல் வீட்டினைக் காலால் அழிக்காது நீங்கி அருளுக (எ.று).

### சிற்றில் 5

முருகு பருகி யளிமுரன்று
மூசும் பசுந்தண் படலையைம்பான்
முடித்துப் பணிபற் பலதிருத்தி
முடங்கொண் மதியற் களங்கமெனக்
கருகுந் திலக வாணுதலுங்
கனிவாய் முறுவற் றளவரும்புங்
கவினப் பொற்பூந் துகின்மருங்குல்
கதுவப் புனைந்தா வணமருங்கி

னருகுற் றுகந்து மணற்சோறட்
டாடற் கமைத்தே மதிற்பொறிதெவ்
வனைத்துங் கடந்து செயசங்க
மார்த்தா லெனச்சங் கொலிகிடங்கிற்
றிருகு சினமா வுழக்குபுல்லைத்
தேவே சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

**பதவுரை**

முருகு பருகிஅளி முரன்று மூசும்பசும் தண்படலை ஐம்பால் முடித்து = தேன் பருகிய வண்டுகள் மொய்த்து ஒலி எழுப்பும் குளிர்ந்த தழையும் பூவும் கலந்த மாலைகளைக் கொண்டு ஐந்து வகையாகக் கூந்தலை முடிந்து, பணி பற்பல திருத்தி = அணிகலன் பற்பலவும் அணிந்து அழகூட்டி, முடங்கொள் மதியிற் களங்கமெனக் கருகுந்திலக வாண் நுதலும் = தேய் பிறையாம் மதியின்கண் களங்கம் எனக் கருகிய பொட்டிட்ட ஒளிபொருந்திய நெற்றியும், கனிவாய் முறுவல் தளவரும்பும் = கொவ்வைக் கனிபோன்ற வாயில் முல்லை அரும்பும், கவின = பொலிய, பொற்பூந்துகில் மருங்குல் கதுவ புனைந்து = பொன் போன்ற ஆடை இடையில் அணிந்து ஆவண மருங்கின் அருகுற்று உகந்து = தெருகளின் இடையில் அருகுற மகிழ்ந்து, மணற்சோறட்டு ஆடற்கு அமைந்தேம் = மணல் வீடுகட்டிச் சோறு சமைத்து விளையாடுதற்குப் பொருந்தினோம். அதில் பொறித் தெவ் அனைத்தும் கடந்து செயசங்கம் ஆர்த்தாலென = அதனால் ஐம்பொறிப் பகைகள்யாவும் நீங்கி வெற்றிச் சங்கொலி ஆரவாரம் பெருகினாலென, சங்கொலி கிடங்கில் திருகுசினமாவுழக்கும் புல்லைத் தேவே சிற்றில் சிதையேலே = சங்கொலி பண்டக சாலைகளில், மாறுபாடுடைய சினம் மிகுந்த யானைகள் நெருக்குற்று விளங்கும் திருபுல்லை நகரத் தெய்வமே எங்கள் மணல் வீட்டினைக் காலால் அழிக்காது நீங்கி அருளுக. திகழும் குமரமலைக்கரசே சிறியேஞ்சிற்றில் சிதையேலே = விளங்கும் குமரமலைக் கண் குடிகொண்ட அரசனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் மணல் வீட்டினை சிதையாது நீங்கி அருளுக (எ.று.).

**பொழிப்பு**

தேன் பருகிய வண்டுகள் மொய்த்து ஒலி எழுப்பும் குளிர்ந்த தழையும் பூவும் கலந்த மாலைகளைக் கொண்டு ஐந்து

முறையாகக் கூந்தலை முடிந்து, அணிகலன் பற்பலவும் ஒழுங்குபடுத்தித் தேய்பிறையாம் மதியின் கண் களங்கமெனக் கருகிய பொட்டிட்ட ஒளி பொருந்திய நெற்றியும், கொவ்வைக் கனிபோன்ற வாயில் முல்லை அரும்பும் பொலிய, பொன்போன்ற பூவாடை இடையில் அணிந்து, தெருக்களின் இடையில் அழகுற மகிழ்ந்து மணல் வீடுகட்டிச் சோறு சமைத்து விளையாடுதற்குப் பொருந்தினோம். அதனால் ஐம்பொறிப் பகைகள் யாவும் நீங்கி வெற்றிச் சங்கொலி ஆரவாரம் பெருகினாலெனச் சங்கொலி பண்டக சாலைகளின் மாறுபாடுடைய சினம் மிகுந்த யானைகள் நெருக்குற்று விளங்கும் திருப்புல்லை நரகத் தெய்வமே எங்கள் மணல் வீட்டினைக் காலால் அழிக்காது நீங்கி அருளுக. விளங்கும் குமரமலைக்கண் குடிகொண்ட அரசனே! நாங்கள் சிறியவர்கள் செய்யும் மணல்வீட்டினை சிதைக்காது நீங்கி அருளுக (எ.று.).

## சிற்றில் 6

அண்டத் துலவைந் தருநிழற்கீ
ழமர்வா னமுதா சனர்திளைக்கு
மரம்பைக் குழுவுக் கணிகலம்போ
லார்பொற் படிவச் சசிமுதலோர்
கண்டத் தொளிர்மங் கலநாணின்
காசில் யாப்புக் கழலாமே
காக்கும் வடிவேற் படைத்திறமுன்
கருணைத் திறமோ டெடுத்துரைப்பேம்
வண்டர்க் கொதுங்கு மாகரமா
வளர்தண் பொழிற்பூந் துணர்க்குவைகண்
மருத நிலப்பெண் மகட்குழுநர்
வதுவை யாற்றற் கமைத்தமலர்ச்
செண்டிற் பொதுளுஞ் சோணாடா
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழும் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

பதவுரை

அண்டத்து உலவைத் தரு நிழற்கீழ் அமர் வானமுதாசனர் = மேலுலகத்து உடைமர நிழலின் கீழாக அமரும் வானமுதம் உண்டவர் திளைக்கும் அரம்பைக் குழுவுக்கு அணிகலம் போல்

= மகிழும் தெய்வ மகளிர் குழுவுக்கு அணிகலம் போல, ஆர்பொற்படிவச் சசி முதலோர் கண்டத்து ஒளிர் மங்கல நாணின் = சிறந்த பொன்னால் ஆன சிலை வடிவத்து = இந்திராணி உள்ளிட்ட பெண்டிர் கண்டத் தொளிர் மங்கல நாணின் காசில் யாப்புக் கழலாமே கழுத்தில் விளங்கும் மங்கல நாணின், குற்றமற்ற பிணைப்பு நீங்காமல், காக்கும் வடிவேல் படைத்திறம் உன் கருணைத் திறமோடு எடுத்துரைப்பேம் = பாதுகாக்கும் வடிவேல் படையின் வன்மைத் திறத்தினை உனது அருளாற்றலோடு இணைத்து புகழ்ந்துரைப்போம். வண்டர்க்கு ஒதுங்கும் ஆகரமாம் வளர்தண் பொழிற் பூந்துணர்குவைகள் = வீரர்களுக்கு ஒதுங்கும் படைவீடுகளாமே வளர்ந்த குளிர்ந்த பூம்பொழில் பூங்கொத்துக்களின் குவியலில், மருதநிலப் பெண்மகள் குழுநர் வதுவையாற்றற்கு அமைந்த மலர்ச் செண்டில் பொதுளும் சோணாடா = மருத நில மணப்பெண் மகளுக்கு வேண்டிய குழுவினர் உழவர்கள் மணமுடித்து வைத்தற்கு செய்தமைத்த மலர் செண்டினும் தழைத்த சோழநாட்டுத் தலைவனே, சிறியேஞ் சிற்றில் சிதையேலே = நாங்கள் சிறியவர்கள் செய்யும் மணல்வீட்டினை நின் திருவடிகளால் சிதையாமல் அருளுக. திகழும் குமரமலைக்கரசே சிறியேஞ் சிற்றில் சிதையேலே = விளங்கும் திருக்குமரமலைக் கண் குடிகொண்ட அரசனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் மணல் வீட்டினை நின் திருவடிகளால் சிதைக்காமல் காத்து அருளுவாயாக (எ.று.).

## பொழிப்பு

மேலுலகத்து உடைமர நிழலின் கீழாக அம்ரும் வானமுதம் உண்டவர் மகிழும் தெய்வமகளிர் குழுவுக்கு அணிகலம் போலச் சிறந்த பொன்னாலான நிலைவடிவத்து இந்திராணி உள்ளிட்ட பெண்டிர் கழுத்தில் விளங்கும் மங்கல நாணின் குற்றமற்ற பிணைப்பு நீங்காமல் பாதுகாக்கும் வடிவேல் படையின் வண்மைத் திறத்தினை உனது அருளாற்றலோடு இணைத்துப் புகழ்ந்துரைப்போம். வீரர்களுக்கு ஒதுங்கும் படை வீடுகளாக வளர்ந்த குளிர்ந்த பூம்பொழில் பூங் கொத்துக்களின் குவியலில் மருத நிலமணப் பெண்மகளுக்கு வேண்டிய குழுவினர் உழவர்கள். மணமுடித்து வைத்தற்குச் செய்தமைத்த மலர்ச் செண்டினும் தழைத்த சோழநாட்டுத் தலைவனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் மணல் வீட்டினை நின் திருவடிகளால் சிதையாமல் அருளுக. விளங்கும் திருக்குமர மலைக்கண்

குடிகொண்ட அரசனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் மணல் வீட்டினை நின் திருவடிகளால் சிதைக்காமல் காத்து அருளு வாயாக (எ.று.).

### அருஞ்சொற்பொருள்

சகி = இந்திராணி. ஆகரம் = ஈண்டு படை வீடு மகட்குழுநர் என்பதனை மகன் + குழுநர் எனவும், மகட்கு + உழுநர் எனவும் பிரித்து பொருள் நயம் உணர்க.

## சிற்றில் 7

தாட்டா மரையிற் சுருளருந்தித்
தழையுஞ் சிறக ரொடுக்கிநறுந்
தண்பூஞ் சேக்கை மிசைத்துஞ்சுந்
தவள வனமே னறைமிசையும்
பாட்டா ரளிகண் மூழ்க்கவதைப்
பாய்வெஞ் சுறவு தாக்கவஞ்சிப்
பரவச் சுரும்பர் தணந்தேகப்
படரு மெகின்வான் மீப்போதல்
வீட்டா வளவில் பலந்தவத்தான்
விட்டிக் கதிமேற் செல்வாரின்
விளங்கத் தோன்றும் படிசிறந்து
மேவுந் தடஞ்சூழ் சோணாடா
தீட்டா மறைக்கு மரிவரியோய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

### பதவுரை

தாள் தாமரையில் சுருள் அருந்தி = காம்பினையுடைய சிறந்த தாமரை மலர்களில் சுருள் வண்டுகள் தேன் அருந்தி, தழையும் சிறகரொடுக்கி நறுந்தண் பூஞ்சேர்க்கை மிசைத் துஞ்சும் = தாழ்ந்த சிறகுகள் சுருக்கிக் கொண்டு நறுமணமும் குளிர்ச்சியும் மிகுந்த பூம்படுக்கை மீது உறங்கும், தவளவனமேல் நறைமிசையும் பாட்டாரளிகள் மூழ்க்க = தும்பைக் காட்டின்கண் தேன் உண்ணும் ஒலி வண்டுகள் மொய்க்க, அதைப் பாய் வெஞ்சுறவு தாக்க அஞ்சிப் பரவ = அவற்றின் மீது பாயும் கொடிய சுறாமீன் தாக்கப் பயந்து வாழ்த்த, சுரும்பர் தணந்து ஏக = சுரும்பு வண்டுகள் பிரிந்து செல்ல, படரும் எகின் வான் மீப்போதல் =

பரந்துள்ள அன்னப்பறவைகள் விண்மீது போகுதல், வீட்டாளவில் பவந்தவத்தான் வீட்டிக் கதிமேல் செவ்வாரின் = வீடுபேறு அளவில் வினைப்பயனைத் தாம் செய்தவத்தினால் வீழ்த்தி நற்பேறு பெற்றுத் செல்வார்ப் போல விளங்கத் தோன்றும்படி சிறந்துமேவும் தடஞ்சூழ் சோணாடா = விளக்கமுறத் தோன்றுமாறு சிறந்திருக்கும் இடங்கள் சூழ்ந்த சோழ நாடனே, தீட்டா மறைக்கும் அரிவரியோய் = தூய மறைப் பொருளுக்கும் காண்பதற்கரியவனே, சிறியேம் சிற்றில் சிதையேலே = நாங்கள் சிறியவர்கள் செய்யும் சிறிய மணல் வீட்டினை நினது திருவடிகளால் அழிக்காமல் அருளுக. திகழும் குமரமலைக் கரசே சிறியேம் சிற்றில் சிதையேலே = விளங்கும் திருக்குமரமலைகள் குடிகொண்டிருக்கும் அரசனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் சிறிய மணல்வீட்டினை நினது திருவடிகளால் சிதைக்காமல் நீங்குவாயாக (எ.று).

## பொழிப்பு

காம்பினையுடைய சிறந்த தாமரை மலர்களில் சுருள் வண்டுகள் தேன் அருந்தித் தாழ்ந்த சிறகுகள் சுருங்கிக் கொண்டு நறுமணமும் குளிர்ச்சியும் மிகுந்த பூம்படுக்கைமீது உறங்கும், தும்பைக் காட்டின் கண்தேன் உண்ணும் ஒலி வண்டுகள் மொய்க்க, அவற்றின் மீது பாயும் கொடிய சுறாமீன்கள் தாக்கப் பயந்து செல்ல பரந்துள்ள அன்னப் பறவைகள் விண்மீது போகுதல் வீடுபேறளவில் வினைப்பயனைத் தாம் செய் தவத்தினால் வீழ்த்தி நற்பேறு பெற்றுச்செல்வார் போல விங்கமுறத் தோன்றுமாறு சிறந்திருக்கும் இடங்கள் சூழ்ந்த சோழ நாடனே, தூய மறைப்பொருளுக்கும் காண்பதற்கரியவனே, நாங்கள் சிறியவர்கள் செய்யும் சிதறிய மணல் வீட்டினை நினது திருவடிகளால் அழிக்காமல் பாதுகாத்தருளுக. விளங்கும் திருக்குமர மலைக்கண் குடிகொண்டிருக்கும் அரசனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் சிறிய மணல் வீட்டினை நினது திருவடி களால் சிதைக்காமல் நீங்குவாயாக (எ.று).

## அருஞ்சொற்பொருள்

தும்பைச் செடிகள் நிலத்துவளர் சிறுசெடிகளாகும். சுறாமீன் பெரிய நீர் நிலையின் அடியில் வாழும் உயிர். இவை இரண்டையும் இணைத்துச் செய்த இவர் கற்பனை உயர்வு நவிற்சி அணியின் பாற்பட்டதாகும்.

## சிற்றில் 8

பணிகைக் கொளிர்கங் கணமெனக்கொள்
　　பரம யோகிக் கருமறையின்
பயனைத் திருவாய் மலர்ந்தருளெம்
　　பகவ நினக்கெப் பொருளரிதாங்
கணிநற் றருவெங் கிராதனுமாய்க்
　　காமர் வடிவந் திரிந்துகிழக்
காய்ந் தரித்துக் குறமினையற்
　　களவிற் கற்பி னியலழித்த
துணிவிற் புரிசிற் றிலுமழிக்கத்
　　துணிந்தாய் கொல்லீ தழகோநீர்ச்
சுழிவெற் பொடுகை வரையுருட்டுஞ்
　　சுவேத நதிசூழ் சோணாடா
திணிகற் புயமீ ராறுடை யோய்
　　சிறியேஞ் சிற்றில்சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
　　சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

**பதவுரை**

பணி கைக்கு ஒளிர் கங்கணமெனக் கொள் பரம யோகிக்கு = பாம்பினைக் கையில் ஒளிவிடும் காப்புநாணாக அணிந்த மேலான சிவனுக்கு, அருமறையின் பயனைத் திருவாய் மலர்ந்தருள் எம்பகவன் = அரிய மறைகளின் பயனைத் தன் திருவாயால் கூறியருளிய எங்கள் இறைவன், நினக்கு எப்பொருள் அரிதாம் = ஆளாகி நினக்கு அறிதற்கு அரிய பொருள்யாது? யாவும் எளிதாம். கணி நற்றரு வெங்கிராதனுமாய் காமர் வடிவம் திரித்து = வேங்கை நன்மரமாகவும், கொடிய வேடனுமாய் விரும்பத்தகுந்த வடிவம்பூண்டு, வயோதிக வேடம் தரித்து குறம் இணையற்கு அளவில் கற்பின் இயலழித்த துணிவில் கிழ வடிவம் பூண்டு குறவள்ளி வருந்தும் அளவில் கற்பின் இயல்பு கொன்ற நெஞ்சுரத்தில், புரிசிற்றிலும் அழிக்கத் துணிந்தாய் கொல் = யாங்கள் கட்டும் சிறிய மணல் வீட்டினை நின் திருவடிகளால் அழிக்க உறுதி கொண்டாயா? ஈது அழகோ = இச்செயல் நினக்கு அழகாகுமோ? நீர்ச்சுழி வெற்பொடு கைவரை யுருட்டுஞ் சுவேத நதி சூழ் சோணாடா = நீர்ச்சுழிகள் பக்க மலைகளையும் சிறுமலைகளையும் உருட்டிச் செல்லப் பாயும் வெண்ணாறு சூழ்ந்த சோழநாட்டரசே, திணி நற்புயம் ஈராறு உடையோய் = திண்ணிய சிறந்த தோள்கள் பன்னிரண்டு உடையவனே, சிறியேம்

சிற்றில் சிதையேலே = நாளும் விளங்கும் திருகுமர மலைக்கண் குடிகொண்ட அரசனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் சிறிய மணல் வீட்டினை நின்து திருவடிகளால் அழிக்காமல் நீங்கி அருளுக.

## பொழிப்பு

பாம்பினைக் கையில் ஒளிவிடும் காப்பு நாணாக அணிந்த மேலான சிவனுக்கு அரிய மறைகளின் பயனைத் தன் திருவாயால் கூறியருளிய எங்கள் இறைவன் ஆகிய நினக்கு அரிய பொருள் யாது? யாவும் எளிதாம். வேங்கை மரமாகவும் கொடிய வேடனுமாய் விரும்பத் தகுந்த வடிவம் பூண்டு கிழ வடிவம் பூண்டு குறவள்ளி வருந்தும் அளவில் கற்பின் இயல்பு கொன்ற நெஞ்சுரத்தில் யாங்கள் கட்டும் சிறிய மணல் வீட்டினை நின் திருவடிகளால் அழிக்க உறுதி கொண்டாயா? இச்செயல் நினக்கு அழகாகுமோ? நீர்ச்சுழிகள் பக்க மலைகளையும் சிறுமலை களையும் உருட்டிச் செல்லப் பாயும் வெண்ணாறு சூழ்ந்த சோழ நாட்டரசே, திண்ணிய சிறந்த தோள்கள் பன்னிரண்டு உடை யவனே, நாங்கள் சிறியவர்கள் செய்யும் சிறிய மணல்வீட்டினை நினது திருவடிகளால் அழிக்காமல் நீங்கி அருளுக. நாளும் விளங்கும் குமரமலைக்கண் குடிகொண்ட அரசனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் சிறிய மணல் வீட்டினை நினது திருவடிகளால் சிதைக்காமல் நீங்கி அருளுக.

## அருஞ்சொற்பொருள்

கணி = வேங்கை மரம். கிராதன் = வேடன்; சுவேத நதி = வெண்ணாறு.

### சிற்றில் 9

வண்டா னஞ்சூழ் வலிகடக்க
மாட்டா வெனில்யார் வல்லரந்தோ
மதியும் விதியின் வழியன்றி
மருவா வெனுநூல் கற்றுணர்ந்து
கொண்டார் தமக்கு மல்லவர்க்குங்
கூறற் கரிய பேரின்பங்
குலவற் குனதின் னருளிலையேற்
கூடா வெனலும் பொய்யாமோ
கண்டா யைய நின்மாட்சி
கழறற் பாற்றோ நான்முகனுங்

கருதற் கரிய புகழ்ப்புல்லைக்
கருணைக் கடலே வெற்புடைத்த
செண்டா யுதக்கைத் தலமுடையோய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

பதவுரை

வண்டானம் சூழ் வலிகடக்க மாட்டான் எனில் = நரைதிரை மூப்பு சூழ்ந்த இருவினை வலியைக் கடந்து செல்ல முடியாது என்றால், யார் வல்லர் = அதில் வல்லவர் யார்? அந்தோ மதியும் விதியின் வழியன்றி மருவா எனும் = ஐயகோ! மதியும் விதியின் வழியே அல்லாமல் வேறுவழியில் வந்தடையாதெனும், நூல் கற்றுணர்ந்து கொண்டார் தமக்கும் அல்லவர்க்கும் = நூலைக் கற்று அறிந்து கொண்டவர்களுக்கும் அவ்வாறு அறியாதவர்களுக்கும், கூறற்கரிய பேரின்பம் குலவற் குனது இன்னருள் இலையேல் கூடா எனலும் பொய்யாமோ = சொல்லுதற்கு அரிவரிய பெரும்பேரின்பம் பெறுவதற்கு நினது இனிய அருளுடைமை இல்லாவிட்டால் பெறமுடியாது என்று சொல்வது பொய்யாகுமா? கண்டாம் ஐய நின்மாட்சி கழறற் பாற்றோ = அது பொய்யன்று என்பதனை அறிந்தோம். எங்கள் தலைவனே நின் பெருமை கூறும் தரத்ததோ! நான்முகனும் கருதற்கரிய புகழ்புல்லைக் கருணைக் கடலே = நான்முகன்தன் எண்ணத்திற்கும் எட்டாத அரிய புகழ்மிக்க திருப்புல்லைப் புரிக்கண் குடிகொண்ட அருட்கடலே, வெற்புடைத்த செண்டாயுதக் கைதலம் உடையோய் = கிரௌஞ்ச மலையைப் பிளந்த செண்டாயுதத்தினைக் கையின்கண் உடையவனே, சிறியேம் சிற்றில் சிதையேலே = நாங்கள் சிறியவர்கள் செய்யும் சிறிய மணல் வீட்டினை நின் திருவடிகளால் அழிக்காமல் நீங்கி அருளுக. திகழும் குமரமலைக் கரசே சிறியேம் சிற்றில் சிதையேலே = நாளும் விளங்கும் திருக்குமர மலைக்கண் குடிகொண்ட அரசனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் சிறிய மணல் வீட்டினை நினது திருவடிகளால் அழிக்காமல் நீங்கி அருளுக (எ.று.).

பொழிப்பு

நரை திரை மூப்பு சூழ்ந்த இருவினை வலியைக் கடந்து செல்ல முடியாது என்றால் அதில் வல்வர் யார்? ஐயகோ மதியும்

விதியின் வழியே அல்லாமல் வேறு வழியில் வந்தடையாதெனும் நூலைக் கற்று அறிந்து கொண்டவர்களுக்கு அவ்வாறு அறியாதவர்களுக்கும் சொல்லுதற்கு அரிவரிய பெரும்பேரின்பம் பெறுவதற்கு நினது இனிய அருளுடைமை இல்லாவிட்டால் பெற முடியாது என்று சொல்லுவது பொய்யாகுமா? அது பொய்யன்று என்பதனை அறிந்தோம். எங்கள் தலைவனே நின் பெருமை கூறும் தரத்ததோ! நான்முகன்தன் எண்ணத்திற்கும் எட்டாத அரிய புகழ்மிக்க திருப்புல்லைப் புரிக்கண் குடி கொண்ட அருட்கடலே, கிரௌஞ்ச மலையைப் பிளந்த செண்டாயுதத்தினைக் கையின்கண் உடையவனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் சிறிய மணல் வீட்டினை நின் திருவடிகளால் அழிக்காமல் நீங்கி அருளுக. நாளும் விளங்கும் திருக்குமரமலைக்கண் குடிகொண்ட அரசனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் சிறிய மணல் வீட்டினை நின் திருவடிகளால் அழிக்காமல் நீங்கி அருளுக (எ.று.).

### அருஞ்சொற்பொருள்

வண்டானம் = நாரை. வெண்மையானது அது மனிதர்களின் நரை முடியைச் சுட்டியது உவமை; ஆகு பெயராகும். வண்டானம் என்பது உவமை ஆகுபெயரால் நாரையைச் சுட்டியது எனுங்கால் நரைதிரை மூப்பு என்றது என்னை எனின் இருவினை வயத்தான், வரும் நரை என்றமையின் இனஞ்சுட்டல் என்னும் முறைமையின் நரைதிரை மூப்பு என உரைக்கப்பட்டது.

### சிற்றில் 10

எழுநா விழியற் குனையீன்ற
வெந்தா யிமையா சலக்கொடியும்
இன்னா மொழியு முருகுநின்னா
வின்சொற் குதலை செவிமாந்தி
வழுவா தியம்பக் கேட்டுவகை
மனங்கூர்ந் துனது முகநோக்கி
வாவா விருகண் மணியெனக்கூஉய்
வாரி யெடுத்து மார்பிறுகத்
தழுவா நின்ற நின்றிருமெய்
தனிவித் துருமா சலத்தொருசார்
தயங்கு மிளம்பா னுவினுதயந்
தனையே சிவணப் பிறங்கிடுமாற்

செழுமா நீபந் தடந்தோளாய்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திகழுங் குமர மலைக்கரசே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே.

**பதவுரை**

எழுநா விழியற்கு = நெற்றிக் கண்ணையுடைய சிவனுக்கு, உனையீன்ற எந்தாய் இமையாசலக் கொடியும் = நின்னைப் பெற்ற எமக்குத் தாயாகிய இமவான் பெற்ற கொடியன்னாள் பார்வதியும், இன்நாமொழியும், முருகும் = இன்சொற்கிளவியும் தேனும் அழகிய நின் நாவின் சொற் குதலை = நினது நாவின் இன்சொற்குதலை மொழியை, செவிமாந்தி வழுவாது இயம்பக் கேட்டு = செவிவழி யறிந்து குற்றமறச் சொல்லக்கேட்டு, உவகை மனம் கூர்ந்து உனது முகம்நோக்கி = மகிழ்வு மனதில் மிகுந்து உனது திருமுகம் பார்த்து, வாவா இரு கண்மணி எனக் கூ உய் = வருக வருக என்னிரு கண்மணி யனையாய் என்று கூவி அழைத்து, வாரி எடுத்து மார்பு இறுக = தன் இரு கைகளினால் வாரி எடுத்து மார்பு இறுக, தழுவா நின்ற நின் திருமெய் தனிவித்துரு = தழுவி இருந்து நினது ஆறு திருஉருவை ஒருவாய் தோற்றம் மாசலத்து ஒரு சார் தயங்கும் இளம் பானுவின் உதயந்தனையே சிவண = மமேரு மலையின் ஒரு பக்கமாக விளங்கும் இளங்கதிர்த் தோற்றம் போல, பிறங்கிடுமாற் = விளங்கிற்று. செழுமா நீபத் தடந்தோளாய் = வளப்பம் மிகுந்த கடம்புமாலை அணிந்த தோள்களையுடையனே, சிறியமே் சிற்றில் சிதையேலே = நாங்கள் சிறியவர்கள் செய்யும் சிறிய மணல் வீட்டினை நினது திருவடிகளால் அழிக்காமல் நீங்கி அருளுக. திகழும் குமரமலைக்கரசே சிறியேம் சிற்றில் சிதையேலே = நாளும் விளங்கும் குமரமலைக்கண் குடிகொண்ட அரசனே, நாங்கள் சிறியவர்கள் செய்யும் சிறிய மணல் வீட்டினை அழிக்காமல் நீங்கி அருளுக (எ.று.).

**பொழிப்பு**

நெற்றிக் கண்ணையுடைய சிவனுக்கு நின்னைப் பெற்ற எமக்குத் தாயாகிய இமவான் பெற்ற கொடியன்னாள் பார்வதியும் இன்சொற்கிளவியும் தேனும் ஆகிய நினது நாவின் இன்சொற் குதலை மொழியை செவிவழியறிந்து குற்றமறச் சொல்லக் கேட்டு, மகிழ்வு மனதில் மிகுந்து உனது திருமுகம் பார்த்து, வருக வருக

என்னிரு கண்மணி யனையாய் என்று கூவி யழைத்து தன் இருகைகளால் வாரி எடுத்து மாற்புற இறுகத் தழுவி இருந்து நினது ஆறு திரு உருவை ஒருவாய்த் தோற்றம், மாமேருமலையின் ஒருபக்கமாக விளங்கும் இளங்கதிர்த் தோற்றம், போல விளங்கிடும். வளப்பம் மிகுந்த கடம்புமாலை அணிந்த தோள்களையுடையவனே நாங்கள் சிறியவர்கள் செய்யும் சிறிய மணல் வீட்டினை நினது திருவடிகளால் அழிக்காமல் நீங்கி அருளுக. நாளும் விளங்கும் குமரமலைக்கண் குடிகொண்ட அரசனே, நாங்கள் சிறியவர்கள் செய்யும் சிறிய மணல் வீட்டினை நினது திருவடிகளால் அழிக்காமல் நீங்கியருளுக (எ.று.).

### அருஞ்சொற்பொருள்

எழுநா விழியன் = சிவன். இன்னா மொழி = இன் + நா + மொழி எனப் பிரிக்கவும். கூஉய் = சொல்லிசை யளபெடை உதயபானு = எழுகதிர். இளஞ்சூரியன்.

*சிற்றிற்பருவம் முற்றிற்று*

## சிறுபறைப் பருவம்

### சிறுபறை 1

மகிதலம திக்குமர வமணிகள்கு யிற்றியொளிர்
மணிமகுட வர்த்தனர் குழாம்
மகரதர் நெருக்கமுய ரதிரதர் வருக்கமொடு
வருசம ரதத்தரு டனே
நகுகுருகு லத்தரசர் பகையதிக ரித்துவர
நவிலிருதி றத்தரு முனா
ணரபலிகொ டுத்தளவில் பலபடையெ டுத்துமமர்
நடைபெறுக ளத்தளவ ளாய்
முகின்மழையெ னக்கணைகள் விடவிழியி லிக்குரிய
முதன்மகன்மு தற்படை யெலா
முடியவிச யத்தொடைய லணியவைவ ருக்குதவு
முசலியிள வற்கும ருகா
சிகிமுதுகி னிற்பவனி வருசரவ ணப்பெரும
சிறுபறைமு ழக்கி யருளே
திசைதிசைமு கத்தளவு குமரமலை யிற்குமர
சிறுபறைமு ழக்கி யருளே.

**பதவுரை**

மகிதலம் மதிக்கு அரவமணிகள் குயிற்றி - பூதலம் அழகுற வாண்மதி சிறப்புற்று விளங்குவது போல, ஒளிர் மணிமகுட வர்த்தனர் குழாம் - இரத்தன ஒளி பொருந்திய கிரீடத்தைத் தலையிற் சூடி விளங்கும் கூட்டத்தினர், மகரதர் நெருக்க - பத்தாயிரம் வீரரை ஒருவராக நின்று எதிர்க்கும் வல்லமையுள்ள தேர் வீரர்கள் நெருக்க, உயர் அதிரதர் வருக்கமொடு வரு சமரதத் தருடனே - உயர்வான வீரத்தால் எண்ணிலாத தேர் வீரரை எதிர்த்துப் போர் செய்யவல்ல வீரர்கள் சூழவேறு தேர்வீரனோடு தோலாமற் போர் செய்ய வல்ல ஆற்றலைப் பெற்ற சமரதர் என்னும் அதிவீரர் சூழ, நகு குரு குலத்தரசர் பகை அதிகரித்து வர - சிறப்பிற்குரிய குரு குலத்து வேந்தர்கள் பகையின் காரணமாக, நவில் இரு திறத்தரும் உரை நரபலி கொடுத்தளவில் - இரு திறத்து மன்னர்களும் வெற்றி பெற வேண்டும் என்ற நோக்கில் வாகைத் தெய்வத்திற்கு உயிர்பலி தரவும், பல படையெடுத்தும் அமர் நடைபெறு **களத்து அளவளாய்** - இரு பெரு மன்னரும் காலாட்படை, தேர்ப்படை, குதிரைப்படை, யானைப்படை போன்ற பல்வேறு படைகளைப் போர் நடைபெறும் போர்களத்தில் நிரப்ப, முகின் மழை எனக் கணைகள் விட - வான்மழை பெய்யும் காலத்து மேகத்தில் இருந்து நீர் விரைந்து இறங்குவது போல இருபக்கமும் அம்புகள் சீறிப்பாய, விழி இலிக்குரிய முதன்மகன் - விழியற்ற திருதராட்டினனின் அருந்தவப் புதல்வன் துரியோதனன் படைகள் அழியும்படியாக வீரம் காட்டிய பலராமனின் தம்பியாகிய கண்ணனின் மருகா, சிகி முதுகினில் பவனி வரு சரவணப் பெரும - அழகு மிகு மயிலின் மேல் இவர்ந்து வரும் சரவணப் பொய்கையிற் றோன்றிய முருகப் பெருமானே, சிறுபறை முழக்கியருளே - பறை முழக்கு வாயாக, திசை திசை முகத்தளவு குமர மலையிற் குமர - திசையெல்லாம் போற்றும் சீர்மிகு பொழிவினைப் பெற்ற முகத்தையுடைய, குமரமலையில் எழுந்தருளியிருக்கும் குமரப் பெருமானே, சிறுபறை முழக்கியருளே - நின் வீரம் விளங்க இப்புவியெலாம் உணர இப்போது பறை முழக்கி அருள்வாயாக.

**அருஞ்சொற்பொருள்**

மகிதலம் - பூதலம்; மதி - சந்திரன்; மணி மகுட வர்த்தனர் குழாம் - தலையிற் அணியாக விளங்கும் மகுடம் தரித்த மன்னர்

குலத்தினர்; மகரதர் - சிறந்த தேர்ப்படை வீரர்; சமரதர் - தனக்கு இணையாக உள்ள தேர்ப்படையாளனுடன் பொருதும் வீரன். நகு குரு குலத்தரசர் = பாண்டவர் மற்றும் கௌரவர்; நரபலி - வெற்றி வேண்டி வெற்றித் திருமகளுக்குத் தரப்படும் உயிர்ப்பலி; அமர் - போர்; விழியிலி விழியற்ற திருதராட்டினன்; முதன்மகன் - துரியோதனன்; முசலியிளவில் - பலராமனின் தம்பியாகிய கண்ணபிரான்; சிகி - மயில்; சரவணப் பெரும - சரவணப் பொய்கையில் தோன்றிய முருகக் கடவுள்.

## பொழிப்பு

மகரதர், அதிரதர், சமரதர் போன்ற படைவீரர்கள் வெற்றி பெற வேண்டி பாண்டவரும், கௌரவரும் களப்பலி தந்து கொற்றவையை வணங்கவும், பெரு மழையென அம்புகளைச் செலுத்த அதன் காரணமாக துரியோதனன் படைகள் அழியும் படியாகவும், யுத்தத்தைச் செய்த பாண்டவர்க்குச் சாரதியாய் விளங்கிய பலராமனின் தம்பியாகிய பரந்தாமனுக்கு மருகனே! குமரமலையில் எழுந்தருளியிருக்கும் முருகப் பிரானே! அருள்கூர்ந்து இப்போது இப்பறையை முழக்கி அருள்வாயாக!

### சிறுபறை 2

அருணகம லக்குலமொர்சிறிதுமுற ழற்கரிய
வணியதுப டைத்த சுரநீ
டதிமதுர முத்தமிழி னிடையிடைத மிழ்ப்புலவ
ரகநெகவர் னித்தகர மேன்
மருமருவு கற்பகமென் மரநிழலி னிற்குலவி
மகபதிமு தற்சொல்புல வோர்
வதியவசு ரக்குழுவின் வழிமுதல றச்செருவின்
வருமயிலெடுத்தகரம் வான்
றரைசொல்கர டத்தறுகண் வெளிறுமெயு டற்றும்விழி
சதுர்நெடும ருப்பரசு வா
தருசுதைம ணத்தினுயர் விதிவழிபி டித்திடுகை
தகவினொடு குற்றடிமை சேர்
திருவடிய ருக்கருளு மபயவர தக்கைகொடு
சிறுபறை முழக்கி யருளே
திசைதிசைமு கத்தளவு குமரமலை யிற்குமர
சிறுபறைமு ழக்கி யருளே.

**பதவுரை**

அருண் அக மலக்குலம் ஓர் சிறிதும் உறழற்கு அரிய அணியிது படைத்த கரநீடு - தேவர் குலம் வாழ, எவ்விதமான இடையூறும் ஏற்படாது அணியது படைத்துக் காத்த; அதிமதுர முத்தமிழ் இடை இடை தமிழ்ப்புலவர் அக நெக வர்னித் தகர மேல் - இனிதாய முத்தமிழ்தனை உள்ளம் குளிரும் படியாகத் தரவல்ல தமிழ்ப் புலவர்; மருமருவு கற்பகமென் மரநிழலினிற் குலவி மகபதி முதற் சொல் புலவோர் - இந்திர தேசத்துக் கற்பகமர நிழனிற் குலவிமகிழும் இந்திரன் ஆட்சி புரியும் இந்திரலோகத்தில் சிறப்புறு புலவர்களாய் விளங்குபடியான; வதிய அசுரக்குழுவின் வழிமுதல் அறச்செருவின் வருமயில் எடுத்து அசுரம் வான் - அசுரக்குலம் நடத்திய போரில் அறம் தழைக்க விரைந்து வரும் மயில்மேல் ஏறி; தரைசொல் கரடத்து அறுகள் வெளிறு மெய் உடற்றும் விழி சதுர் நெடும் அருப்பு அரசு - கனத்த கோட்பாட்டை அமைத்துக் கொண்டு ஆட்சி நடத்திய அசுரர் தம் விழி கொண்ட கொடும் பகைதனை மனதிற் கொள்ள; வாதரு சிதை மனத்தின் உயர் விதி வழிபிடித்திடுகை தகவி னொடு குற்றடிமை சேர் - அத்தகைய மனநிலையை அழித்து அவர்களை ஒருத்த முருகப் பிரானே; திருஅடியருக்கு அருளும் அபயகர வரதக்கை கொரு சிறுபறை முழக்கி யருளே - உன்னைச் சரணம் எனக் கருதியவர்க்கு அருள்பாலிக்கும் அருட்கடவுளே உன்புகழ் விளங்க இப்பறையை முழக்கி அருள் வாயாக; திசை திசை முகத்தளவு குமரமலை யிற்குமர சிறுபறை முழக்கி யருளே! - திசையெல்லாம் போற்றும் குமரமலை ஏந்தலே இப்பறை முழக்கி அருள் வாயாக.

**அருஞ்சொற்பொருள்**

அருள்அகம் - இந்திரவுலகம்; மலக்குலம் - தேவர்குலம்; உறழற்கு - விகற்பத்திற்கு; நர - மறைத்து அல்லது பாதாளத்து; மாபதி - இந்திரன்.

### சிறுபறை 3

கமகமவெ னக்கமழும் வனசமல ருற்பலநி
கழுநறைநி றைந்தொழு கவே
கழனியின்வி டுப்பவரு பயனையுற நட்டபயிர்
களைவளரு வித்துத வியே

யமைதரவி யற்றுமென வதுபுகலி னற்பர்பெற
லருமுதவி யைச்செ யினுமே
யவருறவு மிக்கமிகை யெனவிடுவர் கற்றறியு
மறிஞரென வுட்கரு தியே
தமனியவ ரைக்கனைய தகைடவு ழத்தியர்க
டகுகளையெ னக்களைகு லார்
தழுவும்வள வப்பைதிர மதிலுயர்வ ளப்பநனி
தழைதருதி ருப்புல்வய லாய்
திமிதிமிதிமிதி மித்ததிமி தணதணத ணத்தவென
சிறுபறைமு ழக்கி யருளே
திசைதிசைமு கத்தளவு குமரமலை யிற்குமர
சிறுபறைமு ழக்கி யருளே.

**பதவுரை**

கமகம எனக் கமழும் வனச மலர் - உயர்ந்த மணத்தினை யுடைய தாமரை மலர், உற்பல நிகழுநறை நிறைத்து ஒழுகவே - நீலோர்ப் பல மலர்க் கொடிகள் தடாகத்தில் நிறைந்து காணவே, கழனியின் விடுப்ப வருபயனை உற நட்ட பயிர்களை வளருவித்து உதவியே - நஞ்செய் வயலில் பயிர்கள் செழித்து வளர உறுதுணையாக விளங்கும் தன்மையதாகிய, யமைரத வியற்று மென அது புகலின் அற்பர் பெறலரும் உதவியைச் செயினும் - சிறப்பு கூட வல்லது என்று கூறினாலும் புன்மை அறிவு பெற்றவர் ஒரு உதவியை எந்த அளவிற்கு மதிப்பார்களோ அதுபோல, அவர் உறவு மிக்க மிகை என விடுவர் - புல்லர்கள் பெரியோர்தம் உறவு அவர்கள் தகைமைக்கு உயர்வானது கூடுதலானது என எண்ணி விட்டுவிடுவர்; கற்றறியும் அறிஞர் என உள் கருதியே - அவர்கள் கல்வி கேள்விகளில் சிறந்தவர்கள் என எண்ணியே, தமனிய வரைக்கு அனைய தளம் - பொன்னால் வேயப் பெற்ற மலை போன்ற பெருத்த முலைகள், தடவு உழத்தியர் அதத்தகு கொங்கைகளை அவ்வப்போது ஆடையால் மறைத்துக் கொள்ளும் உழவுத் தொழில் செய்யும் பெண்கள், கட்டுகளை யெனக் களைகுவார் - கழனியிற் காணும் களைகளைக் களைவது போல அழகுடைய ஆபரணங்களைக் களையும் உழத்தியர் தழுவும் வளவப் பைதிரம் அதில் உயர் வளப்ப நனிதழை தருதிருப் புல்வயலாய் - உயர்ந்த நாட்டில் ஓங்கி வளர்ந்து காணும் செழிப்புறு தழைகள் புல்வயல்போற் காட்சியளிக்க, திமிதிமிதி மித்திதிமி தணதணதணத்த வென சிறுபறை முழக்கி யருளே -

இத்தகை பெருமைகள் சிறந்து விளங்கும் படியாக திமிதிமா திமித்திமியென பறையை முழக்கி அருள்க.

**அருஞ்சொற்பொருள்**

கமகமவென - நறுமணம் வீசும்படியாக, வனசமலர் - சுகந்தம் மிகுந்த மலர். உற்பலம் - நீலோர்ப்பலம், கழனி -வயல், அற்பர் - புன்மை குணம் படைத்தவர். திசைதிசை - அடுக்குத் தொடர்.

## சிறுபறை 4

மறைபயின்ம றைச்சிறுவர் சுருதிகளி சைக்குமொலி
மருவுமில றத்தர்ம றுகே
வருமதிதி யர்க்கமுது தரவுபச ரித்தவரை
மனைவரவ ழைக்குமொலி நீள்
கறையடிம தக்களிறு நிழலொடுபொ ரப்பிளிறு
கனவொலியு ளைத்திண்வய மாக்
கடவொலியி யக்கிரத மணிநிரைக லிக்குமொலி
கவிஞர்கள்ப டிக்குமொ லிசேர்
குறையறுத வத்தடிய ரரகரவெ னச்சொலொலி
குகுதர்மக தர்க்கதி பர்வாழ்
குடகர்வடு கர்க்கிறைவ ரெவரும்வள வர்க்கரசு
குலவுமணி முற்றமிசையே
திறையினைய ளக்குமொலி விரவுபுல்வ யற்கிறைவ
சிறுபறைமு ழக்கி யருளே
திசைதிசைமு கத்தளவு குமரமலை யிற்குமர
சிறுபறை முழக்கி யருளே.

பதவுரை

மறை பயில் மறைச் சிறுவர் சுருதிகள் இசைக்கும் ஒலி - நால்மறை பயிலும் அந்தணச் சிறுவர்கள் எழுப்பும் சுருதியுடன் கூடிய மந்திர ஒலி, மருவும் இல்லறத்தர் மறுகே வரு அத்தியர்க்கு- இல்லறத்தார் வாழும் குடியிறுப்புக்கருகே வந்து நிற்கும் விருந்தினர்க்கு, அமுதுதர உபசரித்து அவரை மனை வர வழைக்கும் இல்லத்தார் ஒலி - வாயில் வந்திருக்கும் விருந்தினர்க்கு உணவு அளித்து உள்ளே வரவேற்கும் இல்லாதார் ஒலியும், நீர் கறையபு மதகக்களிறு நிழலொடு பொரப் பிளறு கன ஒலி -

உரல் போன்ற காலடிகளைப் பெற்ற மதம் கொண்ட ஆண் யானை தனது நிழலைக் கண்டு அந்நிழலுடன் பொருது கொள்ள, அதனால் மிகுந்த ஒலி கொண்டு பிளிற்ற, உளைத் திண்வயமா கடலொலி இயக்கி ரதமணி நிரை கலக்கும் ஒலி - பிடர் சிலிர்த்து உறக்கக் கடலோசை யென பரிமா எழுப்பும் ஒலி ரதத்திடை இலங்கும் மணிகளோடு இயைந்து ஒலிக்க, கவிஞர்கள் படிக்கும் ஒலி சேர் - நல்லன செய்யும் இசைக்கவிஞர் தம் பாடல்கள் வாயிலாக ஒலி எழுப்ப, குறை அறு தவத்து அடியர் அரகர எனச் சொல்லொலி குகு தர்மகதர்க்கதிபர் - குறைவில்லாத தவத்தினால் இறைவர்க்கு அடியவராய் விளங்குபவர் எழுப்பும் அரகர என்ற ஒலியும், குடகர் வடுகர்க்கு இறைவர் எவரும் வளவர்க்கு அரசு குலவு மணி முற்ற மிசையே திரையினை அளக்கும் ஒலி, குடகர் வடுகர் என எல்லார்க்கும் இறைவனாக விளங்கும் முழுமுதற் கடவுளாகிய இறைவர்க்கு வடுகர், குடகர் போன்றோர் வழங்கும் திரைப்பணத்தின் ஒலியும், விரவு புல்வயல் இறைவ சிறுபறை முழக்கியருளே - புகழ்மிக்க புல்வயல் மேவிடும் இறைவனாகிய முருகப் பெருமானே ஒலிகளில் எல்லாம் பெரு ஒலியாக இச்சிறுபறையை முழக்கி அருள்வாயாக!

### அருஞ்சொற்பொருள்

மறைபயின் மறை சிறுவர் - வேத பாடசாலையில் பாடம் பயிலும் அந்தணச் சிறுவர். அதிதியார் - விருந்தினராக ஏற்றுக் கொள்ளப்பட்ட அறிமுகமில்லா மாந்தர். அமுது - சிறப்புறு உணவு. மதக்களிறு - திணவெடுத்த ஆண் யானை. வயமா - சிங்கம். குறையறுதவத்து அடியர் - குற்றமற்ற ஒழுக்க சீலராய் விளங்கும் அடியவர். அரகரா - முருகனை எண்ணி எழுப்பும் இறை முழக்கம்.

### பொழிப்பு

மறைபயில் அந்தணச் சிறுவர் எழுப்பும் மந்திர ஒலியும், விருந்தினர் வருகை அறிந்து அவரை உபசரிக்க இல்லத்தார் செய்யும் ஒலியும், கட்டுத் தறியில் உள்ள யானையின் பிலிற்று ஒலியும், அரசர்க்குத் திரை செலுத்த வரும் அயலக மன்னர்தம் மகிழ் ஒலியும், இறைநேயர் எழுப்பும் அரகர ஒலியும், எனப் பல்வேறு ஒலிகள் நிறைந்து விளங்கும் புகழ்மிகு புல்வயலில் உனது பறைஒலி அனைத்தையும் விஞ்சிடும் படியாக அதிர அடித்து முழக்கு வாயாக.

## சிறுபறை 5

கரையறு தரங்கக் கருங்கடற் கலையுடைய
காசினிக் கிருகண் மணியாக்
கதிக்குமுயர் குன்றைப்ப திக்குளோ ரன்பன்
களேபரத் துற்றகுடர் நோய்
பிரிவறவ ரந்தையுற் றஃதகல நினதருட்
பிரசாதம் வேண்டி யுனதான்
பேணத் தெரிந்துநந் திருமுனர் மணிக் காப்
பிரார்த்தனை செலுத்தென் னவே
யுரியபே ரன்பொடு மியற்றப் பெருங்கருணை
யுகளக் கடைக்க ணமுதா
மோவா மருந்தருளி யொருவாத வன்பிணியை
யொருவித்த பரம குருவே
திரிவித குணாதீத சுத்தநிட் களரூப
சிறுபறைமு ழக்கி யருளே
திசைதிசை முகத்தளவு குமரமலை யிற்குமர
சிறுபறை முழக்கி யருளே.

### பதவுரை

கரையறு தரங்கக் கருங்கடல் கலை உடைய காசினிக்கு கண்மணி - இப்பெரு உலகிற்குக் கண்மணியாய் விளங்கும் கரையையும் விஞ்சும்படியாகப் பெருங்கடல் விளங்குவது போன்று, கதிக்கும் உயர் குன்றைப் பதிக்குளோர் அன்பன் களேபரத்து உற்ற குடர்நோய் - மேன்மை நல்கும் குன்றைப் பதியில் வாழும் அடியவனின் குடற் நோயால் ஏற்பட்டதுன்பம், பிரிவற அரந்தையுற் அஃது அகல நினிது அருள் பிரசாதம் வேண்டி உன் தாள் - உற்ற நோயின் துயரம் அகல உனது பிரசாதம் வேண்டிப் பாதம் தொழ, பேணத் தெரிந்து நம் திருமுனர் மணிக் காப்(பு) பிரார்த்தனை செலுத்து எனவே (அதற்காக) காவடி பிரார்த்தனை செய்து கொண்டு அதனை உடன்வந்து செலுத்துவதாக பிரார்த்தித்துக் கொண்டு, உரிய பேரன்பொடும் இயற்றப் பெருங்கருணை உகளக்கடைக்கண் அமுதம் - எண்ணியது நிறைவேற அருட்கண்களால் பேரன்போடு அமுதமெனும் பெருங்கருணை காட்ட, ஓவா மருந்தருளி ஒரு வாத வன்பிணியையொருவித்த பரம குருவே - இத்தகைய சிறந்த மருந்தை நல்கி வன்பிணியை அகற்றிய பரமகுருவே, திரிவித குணாதீத சுத்த நிங்களரூப - முக்குணம் அகற்றி சச்சிதானந்தம்

நல்கும் சுத்த அரூபமாய் விளங்கும் ஐயனே, சிறுபறை முழக்கியருளே - இறைவ சிறுபறைதனை முழக்கி அருளுக, திசை திசை முகத்தளவு குமரமலையிற் குமரசிறுபறை முழக்கி யருளே- குமரமலையில் எழுந்தருளியிருக்கும் குமரா சிறுபறை முழக்கி அருள்க.

## அருஞ்சொற்பொருள்

தரங்கம் - கடல்; காசினி - உலகம்; குன்றைப்பதி = குன்றாக் குடி என்னும் குன்றக்குடி; அருள்பிரசாதம் - இறைவனுக்குப் படைக்கப்பட்டுப் பின்னர் யாவர்க்கும் தரப்படும் இறைதளி; காவடி பிரார்த்தனை - முருகனுக்கே உரிய சிறப்புறு நேர்த்திக் கடன்; ஓவாமருந்து - உயர்ந்த மருந்து; குரு - ஆசான்; திரிவித குணம் - முக்குணம்; நிட்களம் - அரூபம்; சச்சிதானந்தம்- பேரின்பம்.

## பொழிப்பு

உடலில் ஏற்பட்ட நோய் நீங்க அடியவர் அழைத்தபோது சிறந்த மருந்தை நல்கி உதவிய குன்றை நகர் அதிபதியே நீ மனிதனைப் பிடித்து ஆட்டும் மதம் என்னும் அகங்காரத்தை அழித்து அருள்பாலிக்கும் வண்ணம் உனது சிறப்புறு பறையை முழக்கி அருள்வாயாக.

### சிறுபறை 6

கண்டலின் வண்டலெ னும்படி சிந்திய
கம்புளின் முத்தமு நீள்
கந்தடு குஞ்சர மொன்றிய கொம்பு
கழன் றுகு நித்தில மும்
ஞெண்டுல கந்தொடு விண்டுவும் விண்டு
நெகிழ்ந்த மணித்தொ கையும்
நின்று கலந்து கிடந்தொளிர் கின்றது
நீணில வுதயமெ னத்
தெண்டிரை கொண்ட கருங்கடன் மண்டு
செழும்புள லுண்டுநபஞ்
சென்றுப டர்ந்துதி ரண்டுதி ரண்டு
செறிந்து பொழிந்து மழைக்

கொண்டன் முழங்கிடு புல்லவ ரும்பதி
கொட்டுச் சிறுபறை யே
கொற்றவ யிற்கும ரச்சிலை யுற்றவ
கொட்டுக சிறுபறை யே.

## பதவுரை

கண்டலின் வண்டல் எனும்படி சிந்திய கம்புகளின் முத்தமும் - தாழை மரங்கள் நிறைந்த வண்டல் பகுதியிற் சிதறிக் கிடக்கும் சிறுகடற் சங்குகள், நீள் கந்து அடு குஞ்சரம் ஒன்றிய கொம்பு கழன்று உகு நித்திலமும் - நீண்ட கட்டுத் தறியில் உள்ள யானையின் ஒத்த அளவினையுடைய முதிர்ந்த தந்தததில் விளைந்து உதிர்ந்து கிடக்கும் முத்துக்கள்.

ஞெண்டு அலகம் தொடு விண்டுவும் விண்டு நெகிழ்ந்த மணித் தொகையும் - நீண்ட கூரிய மூக்கினையுடைய நண்டு தொடும்படியான உயர்ந்த முற்றிய மூங்கில் உதிர்க்கும் மணியாகிய முத்தும், நின்று கலந்து கிடந்து ஒளிக்கின்றது. நீணில வுதயமென - பூமியிற் தோன்றும் காலைப் பொழுதின் நற்கிணங்கள் போன்று ஒளிதருவதாய், தெண்டிரை கொண்ட கருங்கடல் மண்டு செழும்புனல் உண்டு - அகன்ற ஆழ்கடலில் நிறைந்த நீரைச்சூரியக் கதிர்கள் உண்டு, நபம் சென்று படர்ந்து திரண்டு திரண்டு செறிந்து பொழிந்து - ஆகாயத்தின்கண் கார்மேகக் கூட்டங்களாக விரிந்து மழையாய்ப் பொழியும் படியான தன்மையுடைய, புல்லை அரும்பதி கொட்டுக சிறுபறையே - பெருமைக்குரிய குமரமலையில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானே சிறுபறை கொட்டி அருள வேண்டும், கொற்றவர் அயிற்கும் குமர சிலை உற்றவ கொட்டுக சிறுபறையே - வெற்றியைப் பெற்றுத் தரும் சிறப்புடைய வேலைக் கையிற் தாங்கி சிறப்புறு குமரமலையில் எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமானே நீ கருணை கூர்ந்து, சிறுபறை முழக்கி யருள்வாயாக.

## அருஞ்சொற்பொருள்

கண்டல் - தாழை; வண்டல் - ஆற்றுப் பெருக்கில் அடித்து வரப்பட்ட உரமாகிய மண்; கம்புள் - சங்கு; கந்து - ; குஞ்சரம் - யானை; நித்திலம் - முத்து; ஞெண்டு - நண்டு; விண்டு- மூங்கில்; தெண்டிரை - கடல்; மண்டு - மிகுதி; செழும்புனல் - பெருகிவரும் வெள்ளம்; நபம் - ஆகாயம்; திரண்டு திரண்டு - அடுக்குத் தொடர்; கொண்டல் - மலை.

## பொழிப்பு

தாழை மரங்கள் நிறைந்த வண்டற் பகுதியில் காணும் சங்குகளும் கிளிஞ்சல்களும், சிறந்த யானையின் தந்தத்தில் விளைந்த முத்தும், கூர்மையான மூக்கினைப் பெற்ற நண்டுகள் உரசும் படியான நெடிய மூங்கில் வழங்கும் முத்தும், கதிரவன் உதிக்கும் கடலில் விளையும் முத்தும் எனப் பல விதமான முத்துக்கள் நிறைந்த புல்லையம் பதியில் எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமானே, உன் புகழ் மேலும் விளங்க இப்பறையை முழக்கியருள் வாயாக.

### சிறுபறை 7

முச்சுடர் முக்கண் முதற்கட வுட்கொர்
முதற்படு பிரணவ மா
முற்பொரு ளைத்தெரி வித்தகு ருக்கண்
முகத்தருள் விழியுடை யாய்
இச்சக மற்றுள வெச்சக முற்றினு
மிச்சக மொடுபுகழ் வோய்
இக்குவி விக்குயர் வைத்துன செச்சை
யியக்குறு மழகளி றே
கச்சப மொத்த புறத்தடி மைக்குழல்
கட்கய லகலிகை யாய்க்
கற்சிலை யைச்செய் பதத்தர் மகிழ்ச்சி
கருத்தெழு வருசுதை யாங்
கொச்சை மொழிக்குயி லைப்புண ருத்தம
கொட்டுக சிறுபறை யே
கொற்றவ யிற்கும ரச்சிலை யுற்றவ
கொட்டுக சிறுபறை யே.

## பதவுரை

முச்சுடர் முக்கன் முதற்கடவுளுக்கு - சூரியன், சந்திரன் அக்கினி என்று சொல்லப்பட்ட மூன்றுவிதமான தீப்பொறிகளைத் தன்னகத்தே நெற்றில் பெற்ற மூலமுதல்வனான சிவபிரானுக்கு.

ஓர் முதற்படு பிரணவமாம் உற்பொருளைத் தெரிவித்த - அரிய ஆழ்பொருளாகக் கருதப்படும் சிறப்புறு ஓம் எனும் தத்துவத்தினை எடுத்துரைத்த; குருகண் முகத்தருள் விழியுடையாய்

- ஆன்ற குருவாக விளங்குவதற்கான அருள் நோக்கைப் பெற்றுத் திகழும் விழிகளையுடையவனே; இச்சகம் மற்றுள எச்சகம் உற்றினும் - இவ்வுலகு மட்டும் அன்று வேறு ஈரேழு பதினான்கு உலகு என்றபோதிலும் இப்புவியில் மாபெரும் புகழைப் பெற்றவனே;

இக்குவிலிக்கு உயர் மைத்துனன் செச்சையி யயக்குறு மழக்களிறே - காமன் எனப் பாராட்டப்படும் மன்மதனின் மைத்துனனாக விளங்கும் ஆண் களிரை ஒத்தவனே; கச்சப மொத்த புறத்தடி மைக்குழல் கட்கயல் அகலிகையாய்க் ஆமையினை ஒத்த குவிந்த பாதங்களையும், அழகிய கார் குழலையும் மீனை ஒத்த கண்களையுடைய அகலிகை; கற்சிலையைச் செய் பதத்தர் மகிழ்ச்சி கருத்தெழ - கல்லாய்ச் சமைந்த அகலிகையை மீண்டும் அகலிகையாய் ஆக்கவல்ல பாதங்களைப் பெற்ற விட்ணு அவதாரமானவனுக்கு உறவானவனும்; கொச்சை மொழிக் குயிலைப் புணருத்தம கொட்டுக சிறுபறையே. கொஞ்சு மொழியைக் குழைந்து குழைந்து பேசும் குயிலின் குரலினை ஒத்த வனத்திடை தோன்றிய வள்ளியை மணந்து மகிழும்படியான வள்ளி மணாளனே! அருள்மிகு இப்பறையைக் கொட்டி யருள்வாயாக; கொற்றவயிற் குமரச்சிலை உற்றவ கொட்டுக சிறுபறையே - வெற்றிச் செல்வியின் உற்ற புதல்வனாய விளங்கும் குமரமலைக் குமர, ஒலி பொருந்திய இப்பறையை முழக்கி அருள்வாயாக!

### அருஞ்சொற்பொருள்

முச்சுடர் - சூரியன், சந்திரன், நெருப்பு என்ற மூன்று; முக்கண் - நெற்றிக்கண்ணைச் சிறப்பாகப் பெற்ற சிவபிரான்; பிரணவம் - ஓங்காரமந்திரம்; குருகண் - ஒலிபொருந்திய கண்; இக்குவிலி - ; செச்சை- சிவந்த; கச்சபம் - ஆமை; கொச்சை மொழி - வழக்குப் பேச்சு; புணருத்தம் - புனிதம்.

### பொழிப்பு

சிவபெருமானின் அருமைப்புதல்வனே; பிரணவத்தினைப் படைப்புக் கடவுளுக்கு உரைத்தவனே; குருவாய் விளங்கி தகப்பன்சாமி ஆனவனே; மூவேழ் உலகிற்கும் முதற்கடவுளாய் - திகழ்பவனே; காமனுக்கு மைத்துனன் உறவாய் விளங்குபவனே மாயோனின் மருகனாய்ப் புகழ்பெற்றவனே, வள்ளியை விரும்பி மகிழ்ந்தவனே! உன் மனம் குளிர, அடியவர் துயர் அகல இப்பறையை முழக்கி அருள்வாயாக!

## சிறுபறை 8

நவமணி யருள்சிறு மியர்சுத ரொடுமிள
நடைபயில் பொற்ப தனே
நளினசு முகசசி மகபதி சுதையிரு
நகில்புணர் கற்பு யனே
தவரிணை நுதலுமை விழிமணி யெனநினை
தவம்வரு புத்தி ரனே
தகுவர்கள் குலமுழு வதுமற வமர்புரி
தருமொரு சத்திர ரனே
அவிருமி ரவிகளி ரறுவரை நிகர்குழை
யணிகொள் செவித்த லனே
அனவர தமுமன லிடுமெழு கெனவுரு
கடியர கத்த லனே
சிவகுரு பரசுக மருள்பவ னெனவொலி
சிறுபறை கொட்டு கவே
திருவ மிகுத்திடு குமரம லைக்கிறை
சிறுபறை கொட்டு கவே.

**பதவுரை**

நவமணி அருள் சிறுமியர் சுதரொடு இளநடை பயில் பொற்பதனே - ஒன்பது வகையான மணிகளை நல்க வல்ல அன்னைக்கு மகனாக விளங்கும் இளமை ததும்பிய நடையை யுடைய பொற்பாதங்களைப் பெற்ற திருவாய் விளங்குபவனே.

நளின சுமுக சசி மகபதி சுதையிரு நகில்புணர்

கற்புயனே - நேர்த்தியான வனப்புடைய கொங்கைகளைப் பெற்ற வானரசன் புதல்வியாகிய தேவ யானையைப் புணரும் திடந்தோள் பெற்ற குமரப் பெருமானே

ஏதலர்கிணை நுதல் உமை விழிமணி என நினை தவம் வரு புத்திரனே - மயில் இறகு என அழகிய புருவம் மற்றும் கண்களைப் பெற்ற பார்வதிக்கு அமைந்த பகைவர்க்கு இணையான வீரத்தைப் பெற்ற உயர்குணம் கொண்ட முருகப் பெருமானே.

தகுவர் குலம் முழுவதும் மற அமர்புரி தரும் ஒரு சந்திரனே - அசுரர் கூட்டம் எல்லாம் மறப்போர் ஆற்றுகையில் அறவழி நின்ற அறவோனான குமரவேளே!

அவிரும் இரவிகளில் அறுவரை நிகர் குழையணி கொள் செவித்தலனே - ஆறு சூரியர்க்கு ஒப்பான ஒலிபொருந்திய காதணியையுடைய கந்தவேளே!

அனவரதமும் அனலிடு மெழுகு எனவுருக அடியர் அகத்தலனே - நாளும் அனலில் இட்ட மெழுகு என உள்ளம் கரைந்து உருகும் அடியவர் மனத்தலத்தில் உறையும் முருகப் பெருமானே!

சிவகுரு பரசுகம் அருள்பவன் என ஒலி சிறுபறை கொட்டுகவே - பேரின்பம் எனப் போற்றப்படும் சிவஞானத்தைத் தரக்கூடியவன் என்ற நிலையில் இவ்அருட்பறையைக் கொட்டியருளே; திருவமிகுத்திடு குமரமலைக்கு இறைசிறுபறை கொட்டுகவே - திருவும் செல்வமும் நிறைந்த குமரமலைத் தலத்திற்கு இறைவனாய் விளங்கும் இறைவா இச்சிறுபறையை முழக்கி அருள்வாயாக!

## அருஞ்சொற்பொருள்

நவமணி - கோமேதகம், நீலம், பவளம், மரகதம், மாணிக்கம், முத்து புருடராகம் வைடூரியம், வயிரம்; சுதர் ஆண்மக்கள்; பொற்பதன் - பொன்போன்ற பாதம் கொண்டவன்; நளினம் -அழகு; சுமுகம் - இயல்பான; சசி - இந்திரன் மனைவி இந்திராணி; மகபதி - இந்திரன்; சுதை - தேவாமிர்தம்; நகில் - முலை; ஏதலர் - பகைவர்; தகுவர் - ஒப்பானவர்; இரவி - சூரியன்; அனவரதம் - எப்போதும்; பரசுகம் - வீட்டின்பம்.

## பொழிப்பு

ஒன்பது வகையான நல்ல மணி அணிகளைப் பூண்டு, பொன்பாதங்களைப் பெற்ற இறைவ! மயில் சிறகு போன்ற அழகிய அணிகளைப் பெற்ற குமர! பகைவர்க்கு இணையான வீரத்தைப் பெற்ற வேலவ! சூரியன், சந்திரன், அக்கினி போன்ற ஆறு நெருப்புகளைத் தன்னகத்தே பெற்ற சேயோனே! நாளும் நின்னை நினைந்து உருகும் அடியார்க்கு நலம் சேர்க்கும் நாயகனே! பேரின்பம் எனப் போற்றப்படும் பெறு நிலையைத் தரவல்ல குமரமலைக் குமரனே! இத்தனை செல்வமும் நிறைந்த நீ அவை அத்தனையும் அன்பராகிய அடியவர்க்குத் தரவல்லவன் என்று சொல்லும்படியாக கச்சிறுபறையை முழக்கி அருள் பாலிப்பாயாக.

### சிறுபறை 9

கானின் வாழைக் கனியொடு மாவின்
கனியும்வி ருப்பமு றுங்
காமரு மேனிக் கோமள செல்வக்
கடவுளர் நாய கமே
மானின் மானக் கயல்விழி கூறும்
மடவியர் நட்புற மெய்
வாடியு நேடித் தீநர செய்தும்
வகையற வேநினை யே
கோனென் பாரைப் பரகதி சேர்மின்
குறைக டவிர்ப்பி ரெனக்
கூரிய ஞானப் பேரருள் சைவக்
குலமொளிர் தீப கமே
தேனின் னீபப் புயசயி லேச
சிறுபறை கொட்டு கவே
திருவ மிகுத்திடு குமரம லைக்கிறை
சிறுபறை கொட்டு கவே.

**பதவுரை**

கானின் வாழ் ஐ கன்னி யொடு மாஇன் கன்னியும் விருப்பமுறுங் காமருமேனிக் கோமள செல்வக் கடவுளர் நாயகமே - பார்ப்போர்க்கு ஆர்வத்தைத் தூண்டும் படியான மேனியைப் பெற்ற இறை நாயகமே.

மானின் மானக் கயல்விழிகளும் மடவியர் நட்பு உற மெய் வாடியும் நேடித் தீநர செய்தும் வகையற வேநினையே - மானும் நாணுறும் படியாக அமையப் பெற்ற கயல் போன்ற விழிகளைப் பெற்ற கன்னியர் நட்புக் கொள்ள விரும்பும் படியான மும்மலத்தால் துயரு வோர் முருகப் பெருமானாகிய உன்னை நினைக்க.

கோன் என்பாரைப் பரகதி சேர்மின் குறை கடவிர்ப்பீர் எனக் கூரிய ஞானப் பேரருள் சைவக் குலமொளிர் தீபகமே - இறையே! தலைவனே என எண்ணிட அவர்களின் துன்பம் அறுத்துப் பரகதி சேர்க்க வல்ல இறைவனே.

தேனின் நீபப் புய சயிலேச சிறுபறை கொட்டுகவே - சிறப்புறு சிவஞானத்தைத் தரவல்ல சைவக்குலம் சிறக்கத் தோன்றிய சிவஞான தீபமே.

திருவமிருத்திடு குமரமலை இறைவ சிறுபறை கொட்டுகவே கானகப் பெண்ணான வள்ளியையும் - இனிமையான தோளினையுடைய குமரமலைத் தலைவனாகிய முருகப் பெருமானே இப்பறையைக் கொட்டியருள்வாயாக.

வானரசன் புதல்வியாகிய தேவயானையையும் விரும்பும் - அறம் விளையும் பெருமலை நகராம் குமரமலைக்கு இறைவனாகிய குமரவேளாகிய நீ இப்பறையை அறைந்து அருள்வாயாக.

### அருஞ்சொற்பொருள்

கானின் வாழ்ஐ கன்னி - கானகத்து வாழ்கின்ற அழகிய வள்ளி; மானின் மானக் கயல்விழி - மானும் நாணும்படியான கண்களைப் பெற்றவள்; கோமளம் - தாமரை; கோன் - அரசன்; பரகதி - வானுலகம்; சைவக் குலமொளிர் தீபம் - சைவ சமயம் விளங்க எழுந்த ஞானசம்பந்தர்.

### பொழிப்பு

விண்ணக வேந்தன் இந்திரன் புதல்வி தேவானையையும். கானகத்துப் பைங்கிளி வள்ளியையும் ஒருசேர தோள் சேர்த்த இறைவா! கண்டவர் கண்கொட்டாது காணும்படியான அழகைப் பெற்ற சேயோனே! மானும், மயிலும், நாணுறும் படியாக அமைந்த நங்கையர்க்கு நாயகனாய் விளங்குபவனே, மும்மலத் துயர் அறுத்து பேரின்பம் நல்கும் பெரியோனே! சைவக் குலம் தழைக்க ஞானசம்பந்தனாய் வந்த அருட்கடலே அருட் சுடர் மிளிரும் படியான தன்மையைப் பெற்ற குமரமலைக்கு அதிபதியான முருகப் பெருமானே எங்கள் மனம்மகிழ இப்பறையை முழக்கி அருள்வாயாக.

### சிறுபறை 10

தனுர்விஞ் சையினொரு விசையன் பொருவிய
தனுர்விஞ் சையின்வல ரும்
தனதன் றனைநிகர் தனவந் தருமகி
தலையொன் றரவினின் விற்
பனமிஞ் சறிவினர் களுமொன் றலினொளிர்
பகலென் றுறழ்பிர தா

பழுமொண் கலைமுழு மதியந் தனையிணை
பரவும் படிபுக ழும்
நனிதுன் றிடுதவ முனிபுங் கவனென
நவிலுஞ் சனகனின் ஞா
னமுமன் றியுநில வளமும் புனல்வள
நலமுஞ் செறிவள முந்
தினமொன் றுபுல்வயல் வருசுந் தரகுக
சிறுபறை கொட்டு கவே
திருவ மிகுத்திடு குமரம லைக்கிறை
சிறுபறை கொட்டு கவே.

**பதவுரை**

தனுர்விஞ்சையின் ஒரு விசையன் பொருவிய தனுர் விஞ்சையின் வலரும் - விற்கலையில் சிறப்புற்று விளங்கும் அருச்சுனின் கையில் தவழும் காண்டீபத்தை அளிந்தசிவபிரானின் வில்லுக்கு ஒப்பான இந்திர தனுவைப் பெற்ற முருகப் பெருமானே; தனதன் தனைநிகர் தனவந்தரும் மகிதலை ஒன்ற அரவு நின் - குபேரனையும் விஞ்சும் படியான செல்வத்தினைப் பெற்றுத் திகழும் படியாகவும்; விற்பனம் மிஞ்ச அறிவினர்களும் ஒன்றலின் ஒளிர் பகல் என்று உறழ் பிரதாபமும் - இவ்வுலகு போற்றும் அறிவையும் மிஞ்சும் படியான ஒளி நிறைந்த அறிவைப் பெற்றுத திகழும் சிறப்பினை உடைய உனது திருவும்; ஒண்கலை முழு மதியம் தனை இணை பரவும் படி புகழும் - சிறப்புறு கலையைக் கற்றுப் பரிபூரணமாக விளங்கும் உனது திறமும்; நனி துன்றிடு தவமுனி புங்கவன் என நவிலுஞ் சனகனின் ஞானமும் - தவத்தாற் சிறந்து விளங்கும் சனக மகராசனின் கூர்த்த ஞானமும்; அன்றியும் நிலவளமும் புனல்வள நலமுஞ் செறி வளமும் - நிலவளமும் நீர்வளமும் பெற்றுத் திகழும்; தினம் ஒன்று புல்வயல் வரு சுந்தர குக சிறுபறை கொட்டுகவே - நானும் புதிய புதிய பறவைகள் வந்து அழகூட்டும் புல்வயல் நகருக்கு அதிபதியான முருகப் பெருமானேஇச் சிறுபறையைக் கொட்டி அருள்பாலிப்பாயாக; திருவ மிகுத்திடு குமரமலைக்கு இறை சிறுபறை கொட்டுகவே - திருவும் அருளும் மிகுந்து விளங்கும் குமரமலைக் கடவுளாகிய குமரக் கடவுளே இச்சிறுபறையை முழக்கி அருள்வாயாக.

### அருஞ்சொற்பொருள்

தனுர் - வில்; விஞ்சை - கலை; விசையன் - அர்ச்சுனன்; தனதன் - குபேரன்; மகிதலம் - பூதலம்; பிரதாபம் - வீரம்; தவமுனி - முனிவர்; புங்கவன் - முனிவர்; சுந்தரம் - அழகு.

### பொழிப்பு

அர்ச்சுனனுக்குத் தரப்பட்ட காண்டீபத்திற்கு ஒப்பான இந்திர தனுவைப் பெற்ற முருகப் பெருமானே, குபேரனைவிட அளவிட முடியாத செல்வத்தைப் பெற்றவனே, கலைகள் அனைத்தும் கற்றுத் திகழும் செவ்வேளே! இத்தனைச் சிறப்பு மிக்க குமரக் கடவுளே! திருவும் அருளும் மிகுத்து விளங்கும் குமரமலை இறைவ! இச்சிறுபறை முழக்கி எங்களை மகிழ்விப் பாயாக.

*சிறுபறைப்பருவம் முற்றிற்று*

## சிறுதேர்ப் பருவம்

### சிறுதேர் 1

கருணைப் பெருந்தே ருகைத்துநீ வந்தஞ்சு
கனலெனுந் தூண் நட்டுக்
கவினிருந் தட்டுவிண் மண் கூவி ரம்யோ
கமாமுறுதி யச்சி ணைத்துப்
பொருவிலைம் பொறிகறங் குருளூசி நடுவெனும்
பொற்பீட மேலமைத் துப்
புந்தியென் கின்றபா சம்பிணித் திடுமனப்
புரவியாத் திட்டொர்நெறி யிற்
பரிபக்கு வப்பாகன் விடுதவத் தேருரு
பவர்சீவன் முத்தரா கப்
பகர்சோ தனைப்போர் புரிந்துஞா னாக்கினிப்
பகழியை விடுத்து மனையார்
திரிபுரத் தைத்தகித் தருள்பரம யோகியே
சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமராசலத் திறைவ
சிறுதே ருருட்டி யருளே.

பதவுரை.

கருணைப் பெருந்தேர் உகைத்து நீ வந்து அஞ்சு கனல் எனும் தூண்நட்டு - கருணை எனும் பெருந்தேர் செலுத்துதற்கு

ஏற்றார் போல, ஐந்து பொறிகள் என்னும் தூண்தனை நட்டு. கவின் இருந் தட்டு விண்மண் கூவிரம் யோகமாம் உறுதி அச்சி இணைத்து - விண், மண் என்னும் பஞ்சபூதத்திடையே உழன்று வீணாகர்து பேரின்பத்தை அடைய அத்தேருக்கு அச்சாணியாக 'யோகம்' என்பதை அமைத்து. பொருவில் ஐம்பொறி கறங்கு உருளூசி நடுவெனும் பொற்பீடம் மேலமைத்து - ஐம்பொறி களுக்கும் மனத்திற்கும் இடையே நடைபெறும் யுத்தத்தின் நடுவே இறைவனாகிய நீ அமர பொற்பீடம் அமைத்து, புத்தியென் கின்ற பாசம் பிணித் திடும் மனப்புரவி யாத் திட்டோர் நெறியிற் - புத்தி என்கிற பாசக் கயிற்றைக் கொண்டு மனம் எனும் புரவியை நன் நெறியில்.

பரிபக்குவப் பாகன் விடு தவத்து தேர் ஊருபவர் சீவன் முத்தராக - செல்லுவதற்கு பரிபக்குவப் பாகனாக விளங்கிடும் சீவன் முத்தராக இருந்து அத்தேரினை நீ செலுத்த; பகர் சோதனைப் போர் புரிந்து ஞானாக் கினிப் பகழியை விடுத்தும் அனையார் - மனதிற்கும் ஐம்பொறிகளுக்கும் நடைபெறும் விவாதப் போரில் தீயவற்றைச் சுட்டெறிக்கும் ஞானாக்கினி எனும் அம்பைப் பாய்ச்சி. திரிபுரத்தை தகித்து அருள் பரமயோகியே சிறுதேர் உருட்டி மருளே - திரிபுரத்தை எரித்த சிவனாரின் மைந்தனாகிய குமரவேளே இச்சிறுதேரை உருட்டி அருள்வாயாக. சிமயா சலத்தின் உயர் குமரா சலத்து இறைவ சிறுதேர் உருட்டி யருளே - இமயத்தையும் விஞ்சும் படியாக இமிர்ந்து நிற்கும் குமரமலைக்கு இறைவ! இச்சிறு தேர் உருட்டி அருள்வாயாக.

### அருஞ்சொற்பொருள்

கருணைப் பெருந்தேர் - அருட்பெருந்தேர்; உகைத்து - செலுத்து; அஞ்சுகனல் - ஐம்பொறி; கூவிரம் - தேருக்குச் செய்யப்படும் தலை அலங்காரம்; பரிபக்குவ பாகன் - ஊர்தியை நல்லபடியாகச் செலுத்தும் பாகன்; சீவன் முத்தர் - வீடுபேற்றுக்குத் தகுதியான நிலையை அடைந்தோன்; திரிபுரம் - விண்ணில் உலாவிடும் மூன்று நகரங்கள்; தகித்து - எரித்து; சிமாயாசலம் - இமயமலை.

### பொழிப்புரை

கருணை எனும் பெருந்தேர் செலுத்துதற்கு அருள் பாலித்துப் பஞ்சபூதப் பிடியில் உயிரானது சிக்காது கருணை காட்டி ஞானம் எனும் புத்தியைத் தந்து மனத்தை அடக்கச்

செய்து. அடியார்கள் சீவன் முத்தராய் விளங்க அருள் பாலிக்கும் இறைவா முருகா குமரமலைச் சிறப்பு விளங்க இச்சிறு தேர் உருட்டி யருளே!

## சிறுதேர் 2

நரலைப் பெரும்புன லுடுத்தபுவ னக்கொடியி
னறுநுதற் றிலக முறழ
நண்ணுதய வெற்பி னிருள் வலியெழவு மன்பதைக
ணளினத் தடந்த ளியினார்
பொருவிலிமை யெனுமிணைக் கதவந் திறந்திடப்
பொலிமணிப் பாவை யன்பர்
புந்திப் புலத்தைத் திருத்திவிளை வித்தமெய்ப்
போதக் கரும்ப ரும்பும்
இரசமிப முழைமகளிர் விழையுமின் பத்தேன
லெழின்மதுர கவிபொழி யுமோ
ரியற்கவிஞ னுயிருய்ய வருளுங்க்ரு பாமுத
மெனத்துதி யவர்க்க ழிவிலாத்
திருவும் பெருங்கல்வி யறிவுந் தருங்குழக
சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ
சிறுதே ருருட்டி யருளே.

### பதவுரை

நரலைப் பெரும்புனல் உடுத்த புவனக் கொடியின் அறுநுதல் திலகம் உறழ - ஒலி பொருந்திய நீ வண்ணக் கடல் எனும் கொடியைப் பூமித் தாய் தன் நெற்றியின் ததிலகமாக அணிந்து உறழ. நண்ணும் உதய வெற்பின் அருள் வலி யெழவும் மன்பதை கண் நளினத் தடந்த அளியினார் - மக்களின் இதயவெற்பில் அருள் என்னும் உணர்ச்சி சூறைக் காற்றாய் எழ, பொருவில் இமை எனும் இணைக்கதவம் திறந்திடப் பொலி மணிப் பாவை அன்பர் - அதன் காரணமாக விற்போன்ற புருவம் விரிந்து உள்ளத்தின் கதவுகள் திறந்திட. புந்திப் புலத்தைத் திருத்திவிளை வித்த மெய்ப் போதகக் கரும்பு அரும்பும் - உள்ளம் என்னும் புலத்தைத் திருத்திட மெய்ப் போதகக் கரும்பு என விளங்கும் அறிவின் பயனால், இரசம் இபம் உழைமகளிர் விழையும் இன்பத்தேன் எழிலின் மதுர கவி பொழியுமோர் - உழைக்கும் மக்கள் விரும்பும் இன்பத் தேனை ஒத்த மதுரகவியைப் பொழியும் படியான, இயல் கவிஞன் உயிர் உய்ய

அருளுங் கிருபா அமுதம் எனத் துதி அவர்க்கு அழிவிலா - இயல்பான கவிஞனின் உயிர் உய்யும் படியாக அருள் எனும் அமுதத்தைத் துதிப்போர்க்கு, திருவும் பெருங்கல்வியறிவுந் தருங்குழகன் சிறுதேர் உருட்டி யருளே நல்ல திருவும் பெருங் கல்வியும் அறிவும் தரவல்ல குமரக் கடவுளே இச்சிறுதேரை உருட்டி அருள்வாயாக. சிமயா சலத்தின் உயர் குமராசலத்து இறைவ சிறுதேர் உருட்டி யருளே - இமயத்தை விஞ்சும் உயரத்தையுடைய குமரமலையின் கண் வாழும் இறைவா இச்சிறுதேரை உருட்டி அருள்வாயாக.

## அருஞ்சொற்பொருள்

நரலை - ஒலி; பெரும்புனல் - மிகுநீர்; புவனம் - உலகம்; திலகம் - பொட்டு; உதயவெற்பு - கதிரவன் உதித்திடும் திசை நோக்கிய மலை; மன்பதை - மக்கள் கூட்டம்; பொருவில் - வளைந்தவில்; புந்தி - அறிவு; மதுரகவி - நற்கவி; குழகன் - அழகன்.

## பொழிப்புரை

நல்வினைப் பயன் நல்கும் நல்லறிவும் நற் செல்வமும் அருளவல்ல குமரக் கடவுளே! உள்ளம் என்னும் புலத்தைத் திருத்திட மெய்ஞ்ஞானம் என்னும் சிறப்புறு செல்வத்தைத் தரவல்ல முருகா! மக்கள் வாழ்க்கையில் நலஞ்சேர்க்கும் நற்கவிதைகளை நல்கும் நற்கவிஞர்களுக்கு நற்சிந்தனை எனும் அமுதத்தைத் தரவல்ல முருகா! எல்லோர்க்கும் நல்லறிவும் திருவும் தரவல்ல வள்ளிமணாளா! இமயத்தை விஞ்சும் சிறப்புனையுடைய குமரமலையில் எழுந்தருளியுள்ள இறைவா. நின் அடியவர் மனம் மகிழும்படி இச்சிறு தேரை உருட்டி அருள்வாயாக! அருளவல்ல முருகப் பெருமானே!

### சிறுதேர் 3

மாமேவு னீபச்செ ழுந்தார் மணித்தோளின்
　　வரைநின்றெ ழும்பிரதா பம்
வான்கதி ரெனத்தோன்றி நீலக்க டாவூர்தி
　　வச்சிரவ ணன்க னலிநீள்
காமேவு வைதூரி யக்கணயி ராணிமகிழ்
　　காவலன் மருத்து நிருதி
கடலிறை முதற்றேவர் முககமல மோடகக்
　　கமலமலர் தரவோங் குபொற்

கோமே தகச்சூ ரெனுந்திமிர மகலநறை
குளிர் புட்பராக மலர்சேர்
குழன்முத்த நகையிமய மரகதக் கொடிபடரு
கொழுகொம் பெனத்திக ழுமோர்
சேமேவு பவளவரை தந்தமா ணிக்கமே
சிறுதே. ருருட்டி யருளே
சிமயா சலத்தினு யர்குமரா சலத்திறைவ
சிறுதே ருருட்டி யருளே.

பதவுரை

மாமேவு நீபச் செழுந்தார் மணித்தோளின் வரை நின்றெழும் பிரதாபம் - மலையென விம்மி நிற்கும் தோளின் கண் இலங்கும் கடம்ப மலர் மாலை அத்தோளின் கீர்த்தியை வெளிப்படுத்தும் படியாகவும், வான்கதிர் எனத் தோன்றி நீலக்கடா ஊர்தி வச்சிரவணன் கனலி நீள் - இறப்புக் கடவுளாகக் கருதப்படும் இமயனின் ஊர்தியாகிய நீலவண்ணம் பெற்ற எருமை வான் கதிர் என ஒளிர்வது போன்று.

காமேவு வைதூரி யக்கண இராணி மகிழ் காவலன் மருத்து நிருதி - துரிய மாலை அணிந்து சோலையில் மகிழ்வோடு விளையாடித் திரியும் வள்ளியின் அன்புக் காவலன். கடலிறை முதல் தேவர் முக கமலம் மோடஅக் கமல மலர் தரவோங்கு - தேவர்கள் அஞ்சும்படியான சூரனைவென்று தேவர்கள் முகம் மலரத் துணை செய்த, பொற்கோமேதகச் சூர் எனும் திமிரம் அகலநறை குளிர் புட்பராக மலர்சேர் - வான் அரசு எனப் போற்றப்படும் இந்திரன் உலகு இன்புறும் படியாக சூரனை ஒழித்துப் புட்பராகத்தை மலரணியாக அணிந்த; குழன் முத்த நகை இமய மரகதக் கொடி படரு கொழு கொம்பு எனத் திகழுமோர் - நன்முத்து மற்றும் மரகதம் போன்று ஒளிரும் வண்ணப் பதுமையாக விளங்கும் வள்ளி என்னும் கொடி படரகொழுக் கொம்பாய்த் திகழவும்; சேமேவு பவள வரை தந்த மாணிக்கமே சிறுதேர் உருட்டி அருளே - செந்நிறமான விளங்கும் பவளம் போன்று மலையென விளங்கும் மாணிக்கமே முருகப் பெருமானே! இச்சிறுதேர் உருட்டியருள்க. சிமயா சலத்தினும் உயர்குமரா சலத்து இறைவ சிறுதேர் உருட்டி யருளே - ஒப்புயர்வற்ற இமயத்திற்கு இணையாய் விளங்கும் குமரமலை அரசே இச்சிறு தேரை உருட்டி அருள்வாயாக.

### அருஞ்சொற்பொருள்

மாமேவு - சிறப்பு மிகுந்த; நீபச் செழுந்தார் - கடம்ப மலராலான மாலையுடையோன்; பிரதாபம் - கீர்த்தி; நீலக்கடா ஊர்தி - எருமையையுடைய இயமன்; வைதூரி - வைடூரியம்; பொற்கோமேதகம் - கோமேதகம்; மரகதம் - பச்சைக் கல்; சிமயாசலம் - இமயமலை.

### பொழிப்புரை

கடம்ப மாலை, நீல அணிகலம், வைதூரியம், முத்து, பவளம், கோமேதகம் போன்ற அணிகலன்களை அணிந்து குமரமலையில் எழுந்தருளி அதன் பெருமைக்குப் பெருமை சேர்த்த இறைவா! முருகா! உன் புகழ் இமயம் விஞ்சும் படியாக அமையப் பெற்றது என்பதனை இச்சிறுதேர் உருட்டி உலகிற்கு அறிவிப்பாயாக.

சிறுதேர் 4

வீறுபடு சைவமென் பதினொற்று விட்டுமுன்
மேவெழுத் தந்தம் வைத்து
விரவுமொழி யொன்றுபர சமயத்தை முற்பாதம்
வினவிமு னெடுத்தமொ ழியிற்
கூறுபடு முன்னெழுத் துட்பொருளி னைக்கண்டு
கூறியறி ஞோருய்ய வக்
கோதுறு புறச்சமய வுற்பாத மாய்த்தெவ்வு
கொண்டுசிவ சமய மோங்கத்
தாறுபடு கந்திக் குலத்தரம் பைக்குலத்
தாறுகண் முதிர்ந்த கனியின்
சாறுகுத் தம்பரம ளந்தழ கியற்றிவளர்
தண்டலைகள் சூழ்கா ழியிற்
றேறுபடு கவுணியர் குலத்துதித் திட்டவா
சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ
சிறுதே ருருட்டி யருளே.

### பதவுரை

வீறுபடு சைவம் என்பதினொற்று விட்டு முன்மேல் எழுத்து அந்தம் வைத்து - வீர சமயமாய் விளங்கும் சைவ சமயத்தின் இறுதி எழுத்தாகிய ஒற்று (மகர ஒற்று) ஒழிந்த இறுதி

எழுத்தாய் விளங்கும் 'வ' கரம் சரவணபவ என்ற ஆறெழுத்து மந்திரத்தின் இறுதி எழுத்தாக வைத்து; விரவு மொழி ஒன்று பரசமயத்தை உற்பாதம் வினவி முன் எடுத்து எம்மொழியிற் - வேற்றுச் சமயத்தின் தீக்குறிகளை ஒழித்திட பொருந்து மொழியின்னது என முன் எடுத்து. கூறுபடுமுன் எழுத்துள் பொருளினைக் கண்டு கூறி அறிஞோர் உய்ய - அதற்கான தகுதியான பொருண்மையினைக் கண்ட நற்றமிழ் அறிஞர் உய்ய. அக்கோதுறு புறச்சமய உற்பாதமாய் தெவ்வு கொண்டு சிவசமயம் ஓங்க - அதன்பயனாய் பரசமயம் வீழ்ச்சியுற, அதன் வழி சைவ சமயம் சிறப்புற்று ஓங்க. தாறுபடு கந்திக் குலத்து அரம்பக் குலத் தாறுகண் முதிர்த்த கனியின் - அரக்கர் குலம் அழிய அரம்பைக் குலத்து அருங்கனியாய் விளங்கும். சாறு குத்தம் பரம ளந்தழ கியற்றி வளர் தண்டலைகள் சூழ் காழியில் - அழகிய சோலைகள் நிறைந்து விளங்கும் சீர்காழி பதியில் - எழுந்தருளியிருக்கும் அன்னை பார்வதியின்.

தேறுபடு கவுணியர் குலத்துத்திட்ட வா சிறுதேர் உருட்டி யருளே - ஞானப்பால் உண்ட கவுணியர் எனப் போற்றப்படும் ஞான சம்பந்தனாய் அவதரித்த முகமும் பெருமானே இத்தேர் உருட்டி அருள்வாயாக. சிமயாசலத்தின் உயர் குமராசலத்து இறைவ சிறுதேர் உருட்டியருளே - புவியிற் சிறந்த குமராசலத்தின் புகழ் விளங்க முருகா இச்சிறு தேரை உருட்டி அருள்வாயாக.

### அருஞ்சொற்பொருள்

சைவம் - சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்ட சமயம்; அந்தம் - முடிவு; புறச்சமயம் - பிறசமயங்கள்; உற்பாதம் - தீக்குறி, கொடுமை; தெவ்வு - பகை; தண்டலை - பூந்தோட்டம்; கவுணியர்குலம் - கவுண்டிய கோத்திரத்தார்.

### பொழிப்புரை

சைவ சமயம் புகழ்நீடு விளங்க 'வ'கர எழுத்தை சரவணபவ என்ற நின் மந்திரத்தில் இறுதியிற் கொண்டு உனது மந்திரத்தை உன் அடியவர் ஆரவாரிக்க அதன் பயனாய் பரசமயம் வேரூன்றாது தடுக்கும் பணியில் அன்று சீர்காழியில் ஞானசம்பந்தனாகத் தோன்றிய முருகப் பெருமானே உன் புகழ் விளங்க - இச்சிறுதேரை உருட்டி அருள்வாயாக.

## சிறுதேர் 5

உதகம்விடு ஞெகிழியு. மிருந்தையா குறல்போலும்
உறையிடுங் கீரமெ னவும்
ஒளிர்தரும் பொன்னிற் பொலிந்தும்வரு சஞ்சலத்
துறுபுணர்ப் பின்றரத் தாற்
குதிகொண்டு டன்னெறியி லும்புக்கு மனமாங்
குரக்கைநின தாணை யென்னுங்
கொடியபா சங்கொடு பிணித்துமுன் செய்வினைக்
கோல்கொண்டு தட்டி யாட்டித்
ததிகண்டு தனுகரண புவன்போ கங்களைத்
தானுண வருத்தி மீட்டுச்
சாரங்கம் வெளவநலி காட்டல்போன் மானிடச்
சட்டைபூண் டுயிர்க ளுய்யத்
திதிகொண்ட சற்குருவின் வடிவமாய் வருபெரிய
சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ
சிறுதே ருருட்டி யருளே.

**பதவுரை**

உதகம் விடு ஞெகிழியும் இருந்தையா குறல்போதும் உறையிடும் கீரம் எனவும் - மண்ணில் மறைந்து காணும் நீர் போன்றும் உறையிடப் பட்ட பால் மறைந்து வேறு பொருளாக அமைவது போன்று; ஒளிர்தரும் பொன்னிற் பொலிந்தும் வருசஞ்சலத்து உறுபுணர்ப்பின்றரத்தாற் - தங்கத்தில் ஒளி ஒளிர்வது போன்று துன்பமானது எதிலும் கூறுவது போல.

குதிகொண்டு உடன்னெறியிலும் புக்கு மனமாங் குரக்கை நினது ஆணை யென்னும் - சீர்மிகு உன் ஆணையின் வாயிலாக குதிகொண்டு ஆடும்குரங் கெனும் மனம். கொடிய பாசங்கொடு பிணித்து முன்செய் வினைக்கோல் கொண்டு தட்டி ஆட்டித் - முன்வினை காரணமாக விதிக்கப்பட்ட வினைக்கு ஏற்ப, ததிகண்டு தனுகரண புவன போகங்களைத் தான்உண வருத்தி மீட்டு - உலகத்துச் சிற்றின்பங்களில் உழலும் மனத்தை மீட்டு; சாரங்கம் வெளவ நலி காட்டல் போல் மானிடச் சட்டை பூண்டு உயிர்கள் உய்யத் - விட்டுணுவின் வில்விடுத்த அம்பு துயரங்களை விரட்டுவது போலப் பூத உடலாகிய சட்டையை அணிந்த மனிதன் உயிர் உய்ய. திதிகொண்ட சற்குருவின் வடிவமாய்

வருபெரிய சிறுதேர் உருட்டி அருளே - ஞானகுருவாய் தந்தைக்குப் பிரணவம் கற்றுத்தந்த சுவாமிநாதனாகிய முருகப் பெருமானே அச்சிறுதேரை உருட்டி அருள்வாயாக; சிமயாசலத்தினுயர் குமரா சலத்து இறைவ சிறுதேர் உருட்டி அருளே - இமய மலையினும் விஞ்சி நிற்கும் குமரமலையின் தலைவ இச்சிறுதேர் உருட்டி அருள்வாயாக.

### அருஞ்சொற்பொருள்

உதகம் - நீர், நிலம்; விகு - யானை; ஞெகிழி - தீப்பொறி, சிலம்பு - தீக்கடவுள்; இருந்தை - கரி; அறல் - நீர்; உறை - உறைமோர்; கீரம் - பால்.

### பொழிப்புரை

இமயத்தினும் சிறப்புற்று விளங்கும் குமரமலையில் எழுந்தருளியிருக்கும் பெருமானே! ஞானத்தை அளித்து மானிடைதைப் புனிதப்படுத்தும் குகனே! கொடிய வழிகளில் தன்னை விரைவில் உட்படுத்திக் கொள்ளும் குரங்கு மனத்தை அடக்க வல்ல வடிவேலனே மண்ணில் நீராய் விளங்கி அதுவே சுடர்மழையாய்ச் சென்று மீண்டும் மண்ணகத்தில் நீராய் வருவதுபோல மானுடத்தை உன் அன்பெனும் பிணைப்பில் இணைத்து என்றும் நன்னெறி காட்டும் உன் பொற்பாதம் போற்றுதற்குரியது. இத்தகைய சிறப்பு மிக்க குமரமலைக் கடவுளே, நீ இச்சிறு தேரை உருட்டி அருள்வாயாக.

### சிறுதேர் 6

தருத்தேவ ராதியர் செருக்குந் தயித்தியத்
தலைவரா கியமுப் புரத்
தானவர் செருக்குமழி யச்செருப் புரிகாதை
சாற்றினகை யாகுமெ னவே
மருத்தே னளிக்கமல வாசிமறை வாசிவிடு
வலவன்மா மகிழ்வ லவனே
மருவலவ னிரவியே யுருளாழி வங்கூழ்
மணிக்கறங் குலவு பாசம்
பருத்தேர் படைத்தா யிரத்தெட்டு முடியுடைப்
பரியூர்தி யாக்கொண்டு பார்த்
திருத்தே ருருட்டிவரு செம்மலுக் கிளையசேய்
சிறுதே ருருட்டி யருளே

*சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ*
*சிறுதே ருருட்டி யருளே.*

**பதவுரை**

தருத்தேவர் ஆதியர் செருக்கும் தயித் தியத்து தவைராகிய முப்புரத் - தேவர் தலைவன் இந்திரன் செருக்கையும் அசுரர் குலத்தலைவராகிய முப்புரத்து அரசர் தம் செருக்கையும்; தானவர் செருக்கும் அழியச் செருப்புரி காதை சாற்றி நகையாகும் எனவே அழித்து வெற்றியை மாலையாக அணியப்பெற்ற காரணத்தாலும்; மருத்தேன் அணிக்கமல வாசி மறைவாசிவிடு வலவன் மாமகிழ் வலவனே - பிரமனின் அகந்தையையும் அழித்தமையாலும், மணம் பொருந்திய தாமரையில் வீற்றிருக்கும் திருமால் மகிழ்வு கொள்ளவும்; மருவலன் அவனி ரவியே உருளாழி வங்கூழ் மணிக்கறங்கு உலவு பாசம் - இருள் என்னும் பகையைக் காற்றென விரட்டும் தன்மைபெற்ற சூரியனின்; பருத்தேர் படைத்தேர் ஆயிரத்து எட்டு முடியுடைப் பைம்பான் சலங்கார் முகம் - ஆயிரத்தெட்டு முத்துக்களான முடியை அணியாகப் பெற்ற; பணங்கிளரும் வாசுகி குணங்கவன மால்விடைப் பரியூர்தியாக் கொண்டு பார்த்(து) - வாசுகியை அடக்கியதோடு அதனைத் தனது தேர் ஊர்தியாகக் கொண்டு; திருத்தேர் உருட்டி வரு செம்மலுக்கு இளைய சேய் சிறுதேர் உருட்டியருளே - உருட்டி விளையாடும் படியான விநாயகனுக்குப் பின் பிறந்த இளையவனாகிய முருகவேளே; சிமயா சலத்தின் உயர் குமரா சலத்து இறைவ சிறுதேர் உருட்டியருளே - இமயத்தையும் விஞ்சும்படியான குமரமலையில் எழுந்தருளியிருக்கும் முருகா அச்சிறு தேர் உருட்டி அருள்வாயாக.

**அருஞ்சொற்பொருள்**

தருத்தேவர் - தேவர்கள்; தயித்தியர் - அசுரர்; முப்புரம் - இரும்பு, பொன், வெள்ளி ஆகிய உலோகத்தால் கட்டப்பட்ட கோட்டை..

**பொழிப்புரை**

தேவர்தம் அகந்தையையும் அசுரர்தம் கர்வத்தையும் அடக்கி இருளை விரட்டும் சூரியனை சிறு உருளை என உருட்டி விளையாடி மகிழ்வுறும் விநாயகனுக்கு இளவலாய்த் தோன்றிய முருகப் பெருமானே குமரமலையில் எழுந்தருளி அருள் பாலிக்கும் நீ இச்சிறுதேரை உருட்டி எங்களை மகிழ்விப்பாயாக.

## சிறுதேர் 7

பாரோடும் வானப் பரப்போடு நீடும்
பதாகைநுதி மதித ழுவலிற்
பலமனர் மதிக்கவிகை நிழலிருந் தரசியல்செய்
பரிசின்மா டங்கொள் புல்லைத்
தாரோடு கிம்புரி மருப்போடு குத்துமுட்
டாறுபாய் கவுளோ டுவிண்
டருக்கோடு சாயச் செருக்கோடு போமுரற்
றாண்முறச் செவிமத் தமாக்
காரோடு தெண்டிரைக் கடன்மடை திறந்தெனக்
கவிழ்தான மோடந் தணர்
கைத்தான மோடறம் வளர்ப்பா ருகந்துவிடு
கைத்தான நீரோடு பொற்
றேரோடு பரியோடு தெருவோடு நீமணிச்
சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமரா கூலத்திறைவ
சிறுதே ருருட்டி யருளே.

பதவுரை

பாரோடும் வானப் பரப்போடு நீடும் பதாகைநுதி மதி தழுவலிற் - விண்ணையும் மண்ணையும் ஒன்றாய்த் தழுவும் படியாக விளங்கும் சந்திரனின்; பலமனர் மதிக்கவிகை நிழல் இருந்து அரசியல் செய் பரிசின் மாடம் கொள் புல்லை - சிறப்புடைய நிறமாகிய வெண்மையைத் தனது கொற்றக் குடையில் கொண்டு நல்லாட்சி செய்யப்படும் புல்லை என்னும் குமரமலைத் திருநகர்; தாரோடு கிம்புரி மருப்போடு குத்துமுட் டாறுபாய் கவுளோடு - மணம் பொருந்திய மாலையையும் கொடுஞ்சினத்தால் மூர்க்கமாய் குத்தும்படியான மருப்பையும், பெருத்த கண்ணத்தையும்; விண்டருக்கோடு சாயச் செருக்கோடு போம் உரற்றாண் முறச் செவிமத்தமாக் காரோடு தெண்டிரைக் கடன் மடை திறந்தென - கூரிய தந்தத்தினைப் பெற்றுப் போரில் வெற்றி பெரும் படியான கோட்டினைப் பெற்று விளங்க, அகன்ற காதையும் அதன் பக்கத்தே உள்ள கண்ணப் பகுதியில் மதநீர் கடலெனப் பொங்கிப் பாயும் படியாக; கைத்தான மோடறம் வளர்ப்பார் உகந்து விடு கைத்தான நீரோடு பொற் - அறவோர் விரும்பிச் செய்யும் பிதுர் கர்ம காரியத்தால் நன்னீர் பெருக்கெடுத்து ஓடும்படியாக விளங்கும் புல்லை என்னும் நகர்த்

தலைவனாகிய முருகா! தேரோடு பரியோடு தெருவோடு நீ மணிச்சிறுதேர் உருட்டி யருளே - தேரோடும் படியானதும், குதிரைகள் பூட்டிய வண்டிகள் ஓடும்படியானதும் அகன்ற தெருக்களை உடையதுமான இக்குமரமலை நகர் வீதியில் இச்சிறுதேர் ஒட்டி அருள்பாலிப்பாயாக; சிமயாசலத்தின் உயர் குமரா சலத்து இறைவ சிறுதேர் உருட்டி யருளே - இமயத்தினும் விஞ்சிய புகழுடைய இப்பழநகர் வீதியில் முருகா! சிறுதேர் உருட்டி மகிழ்வாயாக.

## அருஞ்சொற்பொருள்

*வானப் பரப்பு - வான வீதி; கவிகை - குடை; தென்டிரைக் கடன் - பிதுர்க்கடன்; பரி - குதிரை; மணிச்சிறுதேர் - மணிகளால் அலங்கரிக்கப்பட்ட தேர்.*

## பொழிப்புரை

நல்லாட்சிக்கு எடுத்துக்காட்டாய் ஏற்றமிகு வெண் கொற்றக் குடையையுடைய புல்லை நகர்தனில் எழுந்தருளி யுருக்கும் இறைவா! போரில் பெருத்த மருத்தைக் கொண்டு எதிரிகளை இடியனெத் தாக்கும்படியான கோட்டினையுடைய ஆண் யானை என விளங்கும்படியான வரும் நல்லோர்க்கும் அறவோர் களுக்கும் நன்மையைச் செய்யும்படியான யானை முகனின் தம்பியாய் விளங்கும் முருகப் பெருமானே! இப்பழநகராம் குமரமலைத் தெருதனில் சிறப்புறு இச்சிறுதேரை ஒட்டி எங்களை மகிழ்விப்பாயாக. இமயமலையினும் புனிதமான குமரமலைக் கடவுளே இச்சிறுதேர் உருட்டி அருள்வாயாக.

### *சிறுதேர் 8*

*கொக்கிற கணிந் தரி மதிக்கொக்கி னான்மறைக்*
*கொக்கேறு கூடலிறை சேய்*
*கொக்கைப் பிளந்தொகர மாவரா கத்தூர்ந்து*
*குக்குடங் கொடியா கவேய்ந்*
*தெக்குலத் தினுமுள பசுக்குழா முயந்திட*
*விடைத்தொழில் புரிந்துவ ணமார்ந்*
*தெண்குவினை யுண்டமான் மகளாய வல்லிய*
*விருங்கா னடக்கு முன்றாட்*
*பொக்கெனக் கடமைப் படும்பத்தர் நிரயம்*
*புகாவண மெடுத்தா ளவே*

பொலிதரும் பஞ்சா னனத்தோ டதோமுகம்
பூத்தகரு ணைக்கொண் டலே
திக்கெங்கு முவகைகூர் தரவுறு மிளங்களிறு
சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ
சிறுதே ருருட்டி யருளே.

பதவுரை

கொக்கிறகு அணிந்து அரிமதிக்கொக்கு நான்மறைக் கொக்கு ஏறுகூடல் இறை சேய் - மந்தாரை மலரை சிரசில் சூடி, ஆவணித் திங்கள் மூல நட்சத்திர நாளில் எழுந்தருளி நான்கு வேதங்கள் போற்றும் சிவபிரானின் மைந்த; கொக்கைப் பிளந்து ஒகர மாவராகத்து ஊர்ந்து குக்கிடம் கொடியாக வேய்ந்து - சூரபதுமன் போர்செய்கையில் மாய வடிவெடுத்து மாமரமாய் நிற்க அதனைத் தனது வேலால் பிளந்து ஒரு பகுதியை மயிலாகவும் பிரிதொரு பகுதியை கோழிக் கொடியாகவும் கொண்டு; எக்குலத்தினு உள பசுக்குழாம் உய்ந்திட விடைத் தொழில் புரிந்து வணமார்ந்து - உலகத்துத் தோன்றிய உயிர்கள் எல்லாம் உய்ய, உயர் கருணைப் பணி செய்யும்; எண்கு வினை உண்ட மான் மகளாய வல்லிய விருங்கான் அடக்கும் உன்தாள் - மான்மகளாகிய வல்லியை மணப்பதன் மூலம் உலகோர்க்கு தீவினை தொடராத வண்ணம் தன் தாள் தந்து அருளுதல் வேண்டி; பொக்கெனக் கடமைப்படும் பத்தர் நிரயம் புகாவண மெடுத்தாளவே- குற்றம் செய்து உயிர்கள் நரகம் புகாதபடிக்கு; பொலிதரும் பஞ்சா னனத்து அதோமுகம் பூத்த கருணைக் கொண்டலே - ஆதிசிவனின் ஐந்து முகத்தில் கீழ்முகம் நோக்கிய அதோ முகத்தில் உதித்த கருணை மலையே; திக்கெங்கு முவகை கூர்தரவு உறு இளங்களிறு சிறுதேர் உருட்டி அருளே - திசைகள் எங்கும் இருந்து அருட்கட்டளை இட்டு ஆட்சி செய்யும் களிறு ஆகிய விநாயகனுக்குப் பின்பிறந்த இளங்கன் றாகிய முருகப் பெருமானே! இச்சிறுதேர் உருட்டி அருள் பாலிப்பாயாக; சிமயா சலத்தினும் உயர் குமராசலத்து இறைவ சிறுதேர் உருட்டி யருளே - இமயத்தினும் புகழுடைய உயர் குமரமலைத் தேவே இச்சிறுதேர் உருட்டி அருள்வாயாக.

அருஞ்சொற்பொருள்

கொக்கிறகு - மந்தாரை; நான்மறை - நான்கு வேதம்; கொக்கைப் பிளந்து - அகங்காரம் கொண்ட சூரபதுமன்

முருகனுடன் போர் புரியும்போது மாமரமாக உருக்கொள்ள, அவனைத் தனது வேலால் இரண்டாகப் பிளந்து அவ்இரு கூறுகளில் ஒரு பகுதியை மயிலாக மாற்றி தன் வாகனமாகவும், பிறிதொன்றை தன் சேவற் கொடியாகவும் கொண்டார். ஆகவே இங்குக் கொக்கு என்பது மாமரம்; விடைத் தொழில் - உயிர்களை உய்விக்கும் அருட்தொழில்; நிரயம் - நரகம்.

## பொழிப்புரை

குமரமலையில் எழுந்தருளி இருக்கும் முருகா! மந்தாரை மலரை விரும்பி அணியும் சிவபிரானின் அதோ முகத்தில் தோன்றி உயிர்கள் நரகம் புகாமல் நன்னிலை அடைய கானகத்து மான் எனப் போற்றப்படும் வள்ளியை மணப்பதன் மூலம் உலகை உய்வித்தவனே! விநாயகனின் இளைய தம்பியாகிய நீ இச்சிறு தேரை உருட்டி அருள்பாலிப்பாயாக! பழம்பதியான குமரமலை நகரில் வாழும் இறைவா இச்சிறுதேர் உருட்டி மகிழ்வாயாக.

### சிறுதேர் 9

அம்பரா வேணிப் பரஞ்சுடர்க் காசிரிய
வம்பறா வேணீ யென
ஆதரித் தரைமே லுனைத்தொழார் நினையன்பி
னாதரித் துப்ப ரவியே
யும்பரா குநரிம்பர் வாழ்வினொடு மன்றிவா
னும்பர்வாழ் வெனினும் வேண்டா
துன்னுபய சரணபங் கயநிழற் கிழமைபூண்
டொழுகவருள் புரியும் வள்ளால்
கொம்பரா சினியுலக மீச்சென்று கற்பகக்
கொம்பரொடு கூடிம கவான்
குலவியே யயிரா வதத்துலா வரமறுகு
கொட்டுபொற் சுண்ண மொப்பச்
செம்பரா கஞ்சிதறு காமேவு புல்லையிற்
சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ
சிறுதே ருருட்டி யருளே.

அம்பராவேணிப் பரஞ்சுடர்க்கு ஆசிரிய வம்பரா வேணியென - கங்கையையும் சடைமுடியையும் தலையில் தாங்கி விளங்கும் பரஞ்சுடராக விளங்கும் படியான சிவபிரானுக்கு ஆசானாய் இருந்து; ஆதரித்த அரைமேல் உனைத் தொழுதார்

நினைஅன்பின் ஆதரித்துப் பரவியே உம்பராகு நரிம்பர் வாழ்வினொடும் அன்றி வானும்பர் வாழ்வு எனினும் வேண்டா - உன்னைப் பரவுவதாலே கிடைக்கின்ற அன்பின் வெளிப்பாடாக அமையும் உம்பர் வாழ்க்கை எம்மால் வேண்டப்படுவதல்ல; துன்னுபய சரண பங்கய நிழற்கிழமை பூண்டொழுகு அருள் புரியும் வண்ணல் - பக்தியாற் உந்தப்பெற்று உனது தாமரை மலரடியின் கண் சேருகின்ற வாய்ப்பை உரிமையாகத் தரவல்ல; கொம்பர் ஆசினி உலகம் மீச்சென்று கற்பகக் கொம்பரொடு கூடி மகவான் - வானுலகத்துள்ள கற்பக மரத்தின் கண் சென்று ஆங்கு காணப்படும் ஐராவத தம் உலாவரும் படியான; குலவியே ஆயிராவதத்து உலா வரமறுகு கொட்டு பொற்சுண்ணம் ஒப்ப - பெரிய வீதியினைப் பெற்ற உம்பர் உலகத்துச் சாலையில் பொற்சுண்ணம் இடிப்பதால் ஏற்படும் ஓசைக்கு ஒப்ப; செம்பராகஅஞ்சி தறு காமோத புல்லையிற் சிறுதேர் உருட்டி யருளே - யாழிசையின் ஒலி இனிதாய் அமையும் படியாக விளங்கும். புல்லைப் பழம்பதியில் எழுந்த குடியிருக்கும் முருகா இச்சிறு தேர் உருட்டி உலகை உய்விப்பாயாக; சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ சிறுதேர் உருட்டி யருளே - இமயத்திலும் சிறந்து விளங்கும் குமரமலையில் கண் விளங்கும் வேலவா! இச்சிறுதேர் உருட்டி அருள் பாவிப்பாயாக.

### அருஞ்சொற்பொருள்

அப்பரா வேணியன் - கற்பகமரம் : தேவதரு எனப் போற்றப்படும் இந்திர உலகத்து உள்ள கேட்கதை நல்கும் சத்தி கொண்ட மரம்; ஐராவதம் - இந்திரனது யானை இதனை தேவயானை சீதனமாக கொண்டு வந்தாள் என்பது புராணச் செய்தி.

### பொழிப்பு

கங்கையையும் நீர்வார் சடையையும் உடைய சிவபிரானுக்கே ஆசானாய் இருந்து ஓங்காரம் விளக்கம் தந்த குமரபக்தியால் உன்னைப் பரவுவார்க்கு அருள்பாலிக்கும் வேலவா! வானுலகத்துக் கற்பக மரம் வீற்றிருக்கும் இந்திர லோகத்தில் ஐராவதம் நடை பயிலும் பெருந்தெருவில் சுண்ணம் அடிப்பதால் ஏற்படும் இன்னிசைக்கு ஒப்ப, பழம்பதியாம் இப்புல்லைத் திருநாவில் நீர் போதும் யாழோசை கேட்கிறது. இத்தகைய சிறப்பான தலத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவா

உலகம் உய்ய இச்சிறுதேர் உருட்டி அருள்வாயாக! இமயத்திலும் சிறப்புறு குமரமலையில் பாட்டு தரும் கந்தவேளே இச்சிறுதேர் உருட்டி அருள் பாவிப்பாயாக.

## சிறுதேர் 10

கூரோங்கு மதியெனு மருப்பெழுத் தாணிகைக்
கொண்டுமா றாயமூடர்
கொடியநெஞ் சென்னுமிதழ் கீறிக் கவிப்பொருட்
குளிர்சுவைக் கவள முண்டு
பேரோங்கு நிறையெனுங் கந்துட் பிணிப்புண்டு
பீடுசான் முத்த மிழெனப்
பிறங்குமும் மதமழை பொழிந்தட்ட திக்குமொளிர்
பிரதாப மிக்கபு கழாந்
தாரோங்கு புலவப் பெருங்களிற் றுக்குழாந்
தழையவருண் ஞானம தமே
தங்குதெய் வப்புலமை யரசுவா வென்னவெத்
தாரணியு மேத்தெ டுப்பச்
சீரோங்கு புல்லைப் பழம்பதியின் வந்தவா
சிறுதே ருருட்டி யருளே
சிமயா சலத்தினுயர் குமரா சலத்திறைவ
சிறுதே ருருட்டிய ருளே

**பதவுரை**

கூர் ஓங்கு மதியெனும் மருப் பெழுத்து ஆணி கொண்டு மாறாய மூடர் - மூன்றாம் பிறைச் சந்திரனைப் போலக் கூர்மையான முனையினைப் பெற்ற தந்தத்தால் ஆன எழுத்தாணி கொண்டு; கொடிய நெஞ்சு என்னும் இதழ் கீறிக் கவிபொரு குளிர்சுவை கவள முண்டு - அறிவிலிகளானவர் கொடிய நெஞ்சம என்னும் இதழ் கிழித்து தீயவைகளை நல்ல கவிதைகளாக ஏற்று மகிழ; பேரோங்கு நிறையெனும் கந்துள் பிணிப்புண்டு பீடுசான் முத்தமிழ் என - சிறப்பையும் நிறைவையும் மனதிற்குத் தந்து மனச் சிறையில் கட்டுத் தறியில் யானை பிணைக்கப்பட்டு விளங்குவது போல விளங்கும் முத்தமிழாக; பிறங்கு மும்மதமழை பொழிந்து அட்ட திக்குமொளிர் பிரதாப மிக்க புகழாந்- எட்டுத் திசையும் புகழ் மழை பொலிந்திட மிக்கச் சிறப்புடன் விளங்கும்;

தாரோங்கு புலவப் பெருங்களிற்றுக் குழாந் தழைய வருஞ் ஞானமதமே - நல்ல தமிழ் மாலையை தம் நாவிற் கொண்ட புலமைமிக்க தமிழ்க் களிறுகள் என்னும் புலவர்களுக்கு ஞானம் நல்கும் கருணை வேழமாகத் திகழும் முருகவேளே; தங்கு தெய்வப் புலமை யரசு வாவென்ன எத்தரணியும் ஏத்தி எடுப்ப - சிறந்த தெய்வப்புலமை விண்ணை முட்டும்படி சிறந்து ஓங்க; சீரோங்கு புல்லைப் பழம்பதியின் வந்தவா சிறுதேர் உருட்டி அருளே - பழமைப் பெரும்பதியாம் புல்லை என்னும் குமர மலையில் சிறக்க எழுந்தருளியிருக்கும் கந்தக் கடவுளே! இச்சிறுதேர் உருட்டி மகிழ்வாயாக; சிமயா சலத்தின் உயர் குமரா சலத்து இறைவ சிறுதேர் உருட்டி அருளே- இமயமலையினும் சிறந்து விளங்கு குமரமலைத் தலைவனே இச்சிறுதேர் உருட்டி அருள்வாயாக.

## அருஞ்சொற்பொருள்

கூர் ஓங்கு பதி - கோடு கூர்மையாக உயர்ந்த மூன்றாம் பிறை; கந்துள் - கட்டுத்தறி யானையை பிணைக்கும் இடம் அதுபோல் மனம் என்னும் யானையைப் பிணைக்கும் முருகனின் அருள் மனம்; மும்மதம் : யானையின் அன்னமதம், கைம்மதம், கோசமதம் என்பன.

## பொழிப்பு

இமயத்தினும் சிறந்து விளங்கும் குமரமலையில் எழுந்த ருளியுள்ள முருகப் பெருமானே! கூரிய எழுத்தாணி கொண்டு நீதிக்குப் புறம்பானவைகள் மூடர்களால் படைக்கப்பட்டன வற்றைக் கிழித்து, முத்தமிழ் சிறக்க, அறம் ஓங்கப் பாடுபடும் நற்கவிஞர்கள் என்னும் திடமான களிறுகள் செறுக்குடன் திகழ ஞான மதத்தை அருளும் முருகப் பெருமானே! தெய்வப் புலமை விளங்கும் படியான அரசு செய்யப்படும் புல்லை என்னும் குமரமலை நகர் சிறக்கச் சிறுதேர் உருட்டி மகிழ்விப் பாயாக. இமயத்தை விஞ்சும் குமரமலை ஏந்தலே. இச்சிறு தேர் உருட்டி அருள்வாயாக.

**சிறுதேர்ப் பருவம் முற்றிற்று**

**குமரமலைக் குமரேசர் பிள்ளைத்தமிழ் முற்றிற்று**

# துணை நூற்பட்டியல்

**அகநானூறு**, ராஜம், எஸ்., மர்ரே அண்டு கம்பெனி, 1958.

**ஐங்குறுநூறு**, ராஜம், எஸ்., மர்ரே அண்டு கம்பெனி, 1957.

**கலித்தொகை**, ராஜம், எஸ்., மர்ரே அண்டு கம்பெனி, 1957.

**கொங்கு நாட்டுப்புறப் பாடல்கள்** (தொ.), க. கிருட்டிணசாமி, மக்கள் வெளியீடு, சென்னை, 1980.

**சிலப்பதிகாரம்**, டாக்டர் உ.வே. சாமிநாதையர், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1985.

**சிற்றிலக்கிய வகைகள்**, சண்முகம்பிள்ளை, கு., மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1982.

**சேக்கிழார் பெருமான் அருளிய பெரியபுராணம்**, திருவாவடுதுறை ஆதின வெளியீடு, 1988.

**தமிழர் நாட்டுப் பாடல்கள்** (தொ.ஆ.), நா. வானவாமலை, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், நான்காம் பதிப்பு, 2000.

**திருவருட்பா**, ஆறாவது திருமுறைத் திரட்டு

**நற்றிணை**, எஸ். ராஜம், மர்ரே அண்டு கம்பெனி, 1957; **பரிபாடல்**, நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை, மு.ப. 1957, இ.ப. 1981.

**நாலாயிர திவ்வியப் பிரபந்தம்**, தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, சென்னை, 1984.

**பதினோராந் திருமுறை**, திருப்பனந்தார் காசிமட வெளியீடு, நேஷனல் ஆர்ட் பிரஸ், சென்னை, 1950.

**பன்னிரு பாட்டியல்**, கா.ர. கோவிந்தராச முதலியார், கழக வெளியீடு, சென்னை, மு.ப. 1943, இ.ப. 1949.

**பாரதியார் கவிதைகள்**, (ப.ஆ) மணி, டி.வி.எஸ்., & விசுவநாதன், சீனி., வானவில் பிரசுரம், சென்னை, 1980.

**பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள் – ஓர் ஆய்வு**, டாக்டர் கு. முத்துராசன், முல்லை அச்சகம், திருவண்ணாமலை, 1992.

**புறநானூறு**, எஸ். ராஜம், மர்ரே அண்டு கம்பெனி, 1958.

## மூலத் தரவு நூல்

**குமரமலைப் பிள்ளைத் தமிழ்**, நா. கதி. கதிரேசன் செட்டியார், மதராஸ் ரிப்பன் அச்சு இயந்திரச் சாலை, சென்னை, 1909.

# பாடற் முதற்குறிப்பு அகராதி

# சொல்லடைவு

## தே



## தொ



## ந



## நா



## நி



## நீ



## நூ



## நே



## ப

## போ



## ம



## மா



## மு



## மூ

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113
## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| சங்கரநமச்சிவாயர் | 60.00 |
| **Agreement in Dravidian Languages** | 100.00 |
| அறிவியல் தமிழ் அறிஞர் பெ.நா. அப்புசுவாமி | 60.00 |
| சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - இலக்கியம் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| கருவூரார் பல திரட்டு | 70.00 |
| தமிழ் மொழியின் வரலாறு | 30.00 |
| சங்ககாலக் காசு இயல் | 30.00 |
| பாரதி இந்தியா | 40.00 |
| தமிழில் மருத்துவ இதழ்கள் | 50.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 75.00 |
| **Social Heritage of Tamils** | 75.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| குறுந்தொகை ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| மபொசியின் பார்வையில் தமிழ்மொழி இலக்கியம் பண்பாடு | 30.00 |
| தணிகைமணி வ.சு.செங்கல்வராய பிள்ளை | 50.00 |
| அருந்தமிழ் நூற் காவலர் அடிகளார் | 50.00 |
| விவிலியத் தமிழ் | 40.00 |
| ஆராய்ச்சிப் பேரறிஞர் திவை. சதாசிவ பண்டாரத்தார் | 45.00 |
| பாரத வெண்பா | 80.00 |
| நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் | 50.00 |
| அருந்தமிழ் அறிஞர் அ.ச.ஞா | 50.00 |
| தட்சிணாமூர்த்தி குருமுகம் 100 | 50.00 |
| **Studies in Manimekalai** | 70.00 |
| தமிழெழுத்தின் வரிவடிவம் | 30.00 |
| திராவிடமொழி இலக்கியங்கள் | 180.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 40.00 |
| கார் நாற்பது களவழி நாற்பது இன்னாநாற்பது இனியவை நாற்பது நன்னெறி (ஆங்கில மொழி பெயர்ப்புடன்) | 30.00 |
| நாவல் கலையியல் | 50.00 |
| நாடகவியல் | 70.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் - 3 தொகுதிகள் | 260.00 |

**496 குமரமலைப் பிள்ளைத் தமிழ் 75.00**